பக்ஷத்தில் 1 'ஆதித்யாநாமஹம்விஷ்ணு:', 2 'வ்ருஷ்ணீநாம் வாஸுதேவோஸ்மி', 3 'அநந்தஶ்சாஸ்மி நாகாநாம் வைநதேயஶ்ச பக்ஷிணாம்' என்றிவை முதலிய இடங்களில் அவர்கள் காமங்களுக்கு வசப்பட்டவர்களாக வேண்டிவரும் என்கிற ஆக்ஷேபத்திற்கு எப்படிப் பரிஹாரம் சொல்லமுடியும் பிரித்துச் சொல்லியிருப்பதினால் என்கிற ஸமாதானமும் உசிதமல்ல, ஒரே ஜாதியாக இருந்தபோதிலும் அல்ப வ்யத்யாஸத்தினாலும் அப்படிப் பிரித்துச் சொல்லலாமாகையினால் ஆகையினால் ராமவரன் ராமவரனல்ல, காமத்திற்கு வசப்பட்டவர்கள் அப்படிக்கல்ல, என்றிவை முதலியவைகளில் வேறு ப்ரமாணங்களே கதி இந்த லக்ஷ்மீ காமங்களுக்கு வசப்பட்டவர்களைவிட மேற்பட்டவள் என்பதும் இவ்விடத்தில் ப்ரம்மா முதலியவர்களைவிட மேற்பட்டவளென்று சொல்லியிருப்பதினால் ப்ரகாசம் செய்யப்பட்டது பகவானுக்குப் பாதி லக்ஷ்மீரூபத்தோடு கூடிய ரூபம் ஒன்றுண்டு என்று ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருப்பது லக்ஷ்மிக்கும் பகவானுக்கும் ஸ்வரூபம் ஒன்றென்பதையாவது, ஸ்வரூபம் சில ஸமயங்களில் ஒன்றாயும் மற்ற ஸமயங்களில் வெவ்வேறாயுமிருக்கிறது என்பதையாவது காட்டுகிறதல்லவா அப்படியே விஷ்ணுவைபவாதிகாரத்தில் 4 'த்வம் யாத்ருஶோஸி கமலாமபி தாத்ருஶீம் தே தாராந்வதந்தி யுவயோர்ந து பேதகந்த: । மாயாவிபக்த யுவதீதநுமேகமேவ த்வாமேவ மாதரமிதி பிதரம் யுவாநமாஹு:॥' என்று சொல்லப்பட்டிருக்கிறது என்பதும் உசிதமல்ல, இருவர்களுடைய இஷ்டத்தினால் ஶரீரம் மாத்திரத்தை ஒன்று சேர்த்துக

1 பகவத்கீதை-11-21 அஹம்-நான், ஆதித்யாநாம்-ஸூர்யர்களுக்குள், விஷ்ணு-விஷ்ணு என்கிற ஸூர்யன்

2 பகவத்கீதை-11-37 வ்ருஷ்ணீநாம்-யாதவர்களுக்குள், வாஸுதேவ:-வஸுதேவர்பிள்ளையாக, அஸ்மி-ஆகிறேன்

3 பகவத்கீதை-11-29 நாகாநாம்-அநேகம் தலைகளையுடைய பாம்புகளுக்குள், அநந்த:-ஆதிஶேஷனாக, அஸ்மி-ஆகிறேன், பக்ஷிணாம்-பக்ஷிகளுக்குள், வைநதேய:-கருடனாகவும், அஸ்மி-ஆகிறேன்

4 த்வம்-நீ, யாத்ருஶ:-எப்படிப்பட்டவனாக, அஸி-ஆகிறாயோ, கமலாம்அபி-லக்ஷ்மியையும், தாத்ருஶீம்-அப்படிப்பட்டவளாகிய, தே-உன்னுடைய, தாரா:-பத்னியாக, வதந்தி-சொல்லுகிறார்கள், யுவயோ:-உங்களுக்கு, பேதகந்த:-வ்யத்யாஸத்தின் வாஸனையும், ந-இல்லை, மாயாவிபக்த யுவதீ தனு-மாயையினால் பிரிக்கப்பட்ட ஸ்திரீயின் ஶரீரத்தையுடைய, யுவானம்-யுவாவாயிருக்கிற, ஏகம்-ஒரு, த்வாமேவ-உன்னையே, மாதரம்-தாயாராகவும், பிதரம்ச-தகப்பனாராகவும், ஆஹு:-சொல்லுகிறார்கள்

கொண்டிருப்பதும் ஸம்பவிக்கலாமாகையினால் ஆகையினாலே ஸ்வரூபம் ஒன்றாக இல்லாவிட்டாலும் இது பொருந்துமாகையினால் ஶரீரம் ஒன்றாயிருப்பது ஶ்ருதி முதலியவைகளுக்கு விருத்தமாக ஸ்வரூபமொன்றென்பது முதலியதை ஸாதிக்காது ஆனாலும் ஒரு பரமாத்மாவினாலேயே எல்லாக்காரியங்களையும் நிறைவேற்றிக் கொள்ளலாமாக இருக்க வேறு ஆத்மா என்றொப்புக்கொள்ளுவதினால் என்ன ப்ரயோஜனம் என்பது முசிதமல்ல, கல்பனை செய்கிறபக்ஷத்தில் சொல்லவேண்டிய ந்யாயத்தை ஶ்ருதியில் சொல்லியிருப்பதைக் குறித்துச் சொல்லுவது உசிதமில்லையாகையினால் ஶ்ருதியும் முன்பே சொல்லப்பட்டது அதற்கு அனுகுணமாக விஷ்ணு ஸ்ம்ருதியில் 1 'அஸிதாக்ஷி ஸவார்த்தாயம் யதா த்ரைலோக்யம் ஸ்திதம் வ்யாப்ய தேவ: வரப்ரதாயிநி ததா த்வம் ஸ்திதா ததாபி' என்றிவை முதலிய பூமியின் வார்த்தை இருக்கிறது 2 'நாந்யயோர் வித்யதே பரம்' என்றிவை முதலிய புராணவசனங்களினாலும், 3 'ஏகதத்வமிவோதிதௌ' என்றிவை முதலிய பாஞ்சராத்ர ஶாஸ்த்ர வசனங்களினாலும் இவர்களுடைய ஸ்வரூபம் ஒன்றென்பது நிராகரிக்கப்பட்டது வசனத்தை மாத்திரம் ஆதாரமாகக்கொள்ளில் எல்லா ஆத்மாக்களும் ஒன்றென்று சொல்லலாம்

4 ஆத்மபேதம் அநிச்சந்தோ பாஷ்யாதிஷு நிராக்ருதா: |
திவ்யயோரிஹ தம்பத்யோ: ஶ்ரியோ தேவ: வ்யவஸாயித: ||
ஸர்வேஷாம் சாத்மநாம் ஐக்யம் ஜ்ஞாநாநந்தவிஶிஷ்யதே |
முக்த்வா நாராயணம் ஐக்யோக்தி: தேஷாம் ஸாத்ருஶ்யாபேக்ஷ்யதே ||
யத்ர க்வசிதபேதோக்தி: யத்ர வா ஏகேந ஸர்வஶ: |
ஶாஸ்த்ரே ஸா ஶ்ரீவயோ: ஐக்யம் ஜாத்யாதிவ விஹாஸ்ய ஸா ||

1 அஸிதாக்ஷி-கருப்புநிறமுள்ள கண்களையுடைய லக்ஷ்மியே, அயம்-இந்த, தேவ:-பகவான், யதா-எப்படி, ஸர்வம் - எல்லா, த்ரிலோகீம் - மூன்றுலோகத்தையும், ஆக்ரம்ய-வ்யாபித்துக்கொண்டு, திஷ்டதி-இருக்கிறாரோ, ததா-அப்படி, வரதே-வரத்தைக்கொடுக்கிற லக்ஷ்மியே, த்வம்-நீ, ஸ்திதா-இருக்கிறாய், ததாபி-அப்படி இருந்தபோதிலும்

2 விஷ்ணுபுராணம் அந்யயோ:-இவ்விருவரைவிட, பரம்-மேலானவஸ்து, ந வித்யதே-இல்லை

3 ஏகதத்வமிவ - ஒரேவஸ்துவைப்போல, உதிதௌ-சொல்லப்பட்டார்கள்

4 ஆத்மபேதம்-ஜீவாத்மாக்கள் வெவ்வேறென்பதை, அநிச்சந்த:-ஒப்புக்கொள்ளாதவர்கள், பாஷ்யாதிஷு - ஸ்ரீபாஷ்யம் முதலிய க்ரந்தங்களில், நிராக்ருதா:-நிராகரிக்கப்பட்டார்கள், இஹ-இவ்விடத்தில், திவ்யயோ:-திவ்யர்களாகிய,

இவவிடததில ஒரு விசேஷஙகளுமிலலாத ஜஞான ஸ்வரூபமாகிற பரமமததின ஸவரூபததை மறைககிற பொயயாகிய மாயை ரூப விசேஷததை யடைநததாய பரமமததின பரதிபிமபததையுடையதாய் லக்ஷமீயென்று சொலலபபடுகிறது என்று சொலலுகிற பக்ஷமும அபபடிபபடட பரமமததையும அதறகு மறைவு முதலியவறறையும நிராகரிததிருபபதிலேயே தளளபபடடது இதுவும இவவிடததில மாயை கீழ பரஸதாவிககபபடட லக்ஷமியையும அவள பாததாவையும தவிர மறற லோகஙகளை மயககுகிறது என்று சொல்லியிருககிறபடியிலை தெரிவிககபபடடது திரை எனபது வெளியிலிருபபவாகளுககும உளளே இருபபவாகளுககும எலலாவஸ்துககளிலும கணபரவுவதைத தடுபபதிலை ஒருவாககொருவா பாாததுககொளளுவதறகுத தடையாக லோகததில காணபபடுகிறது அபபடியே இவவிடததில லக்ஷமிககும மறற வஸதுககளைப பாாபபதறகுத தடஙகலாக இருககவேண்டிவருமே என்னில இது உசிதமலல அநத லக்ஷமிககு வசபபடட எலலா வயாபாரஙகளையுமுடைய பரகருதி எலலா வஸதுககளையும ஸ்வபாவத்திலேயே அறியககூடியதாகிய அவளுடைய கண்ணை மறைககிறதெனபது பொருநதாதாகையிலை. ஜீவாதமாக்களுககுமபரகருதியிலை புததி சுருககததையடைவது பாபததைக காரணமாக வுடையதாகையிலை காமஙகளுககு வசபபடாத நிதயஸூரிகள, முகதாகள, ஈஸ்வரர்கள, இவைகளிடஙகளில அநதக காமததிறகு பரஸ்தாவமே இலலாமையி

---

தம்பதயோ - தம்பதிகளுககு, மித - ஒருவர்ககொருவர், பேத - பேதமானது, ப்ரஸாதித - ஸதாபிககப்பட்டது, யை: - எவாகளால், ஸாவேஷாம் - எலலா, ஆதமனும - ஜீவாத்மாககளுககு பிநநாபிநநதவம - வெவவேறாக இருக்கையும், ஒன்றாக இருககையுமாகிய இரணடும, இஷ்யதே - ஒபபுககொள்ளப்படுகிறதோ, தேஷாம - அவர்களினுடைய, லக்ஷமீநாராயணைகயோகதி - லக்ஷமீ, நாராயணன, இவாகளஒன்றென்கிறவாாததை, ஸதபி. - பெரியோாகளிலை, உபேக்ஷயதே - உபேக்ஷை செயயப்படுகிறது, ஆப்தவசனே - பெரியோாகளின் வாாததையில, யத்ரகவசித - எஙகேயாவது ஓரிடததில, அபேதோகதி - ஒன்றெனகிறவாாததை, பவேதயதி - இருககுமேயாலை, ஸா - அது, இஹ - இநதவிஷயததில, ராமஸுகரீவயோரைகய மிதயாதிவத் - ராமஸுகரீவயோரைகயம என்றிவைமுதலியவைகளைபபோல, அதாவது ஸ்ரீமத ராமாயணததில நராகளுககும வானராகளுககும எவவிதமாக ஸநேகம் உண்டானது என்று பிராட்டி கேட்க 'ராஜ ஸுக்ரீவயொ ரைக்யம் கதமெவம் ஸமஜாயத' என்று திருவடி பதில சொலலியிருககிறா அவவிடததில எப்படி ராமன் ஸுக்ரீவன, இருவரும ஒன்றாய விட்டாாகள என்று சொலல முடியாததினுல் ஒரே அபிப்ராயததை உடையவாகளா யிருககையாகிற ஸநேகததைச சொலலுகிறதோ அதைப்போல, அஸது - இருககட்டும

ஞுலும். இபபடி இருநதபோதிலும கர்மவஶ்யர்களோடு ஒனறெனறு சொலலியிருபபதினுல காமஙகளின பலம இவளுககும உண்டாகவேண்டும எபபடி எனனில பரமமா முதலியவாகள காமஙகளுககு வசபபட்டவாகளெனபது 1 'யுககோடி ஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ: புநஸ்த்ரைலோக்ய தாத்ருத்வம் ப்ராப்தவாநிதி ஶுஶ்ரும' எனறிவை முதலிய வசனஙகளினுல பரஸிததமாயிருககிறது அவர்களின பதனிகளைபபறறிக கேழககவேவேண்டியதிலலை லக்ஷ்மீ அவாகளோடு ஒனறென்பது அநதநத இடஙகளில அவாகளோடு சோததுச சொலலியிருபபதினு லேறபடுகிறது. எஙகே யெனனில காயதரீகலபஙகளில மூனறு ஸநதயைகளிலும வெவவேறுன வாணம, வாஹநம், முதலியவைகளோடு கூடிய மூனறு விதமான ரூபஙகள ஒரே தேவதைககுச சொலலபபடுகினறன லக்ஷ்மீ ஸ்தோததிரததிலும 2 'ஸ்ரீ தேவதே இதி கருடத்வஜ வல்லபேதி' எனறுரமபிததுச சொலலபபடுகிறது ஆகையினுல காமஙகளுககு வசபபட்டவாகளோடு ஒனறுக இருபபதினுல திரை எனறு சொலலபபடுகிற மாயையினுல மறைககபபட்டிருககிற ஜஞானததை யுடையவளாயிருககை இவளுககுப பொருநதும எனறு சொலலுகிறுாகள் அதுவும உசிதமலல, ஒனறு சோததுச சொலலியிருபபதெலலாம 3 'யத்யத் விபூதிமத் ஸத்வம்' என்கிற இடததில விபூதியதயாயததிலசொலலப்பட்டிருககிற நியாயததினுல ஆததம சொலலிககொளளவேணடியதாகையினுல தாபநீயோபநிஷததில கருதஸூகததிலும லக்ஷ்மியினிடததில அநதநதப பதஙகள சிறசில ஆததவிஶேஷஙகளினுலும அவைகளை விபூதியாகவுடையவள் எனகிற காரணததினுலும சொலலபபட்டிருககினறன எனறறியவேணடும காயதரீகலபததிலோவெனில லக்ஷ்மிககு விபூதியாகிய காயதரீ எனறு பெயருடைய ஒரு தேவதைககே வெவவேறு ஸநதயைகளில வைஷ்ணவீ முதலிய பேர்களுககுத தகுநத வாஹநம, ரூபம முதலியவைகளை அஙகீகரிககும ஶகதி உணடென்று மாஹாதமயததைசசொலலுவதில தாதபாயம எனறு அநதநத

1 பாரதம பதமபூ -ப்ரமமா, யுககோடி ஸஹஸ்ராணி-அனேகமாயிரம கோடி யுகஙகள், விஷ்ணும-பகவானை, ஆராதய - ஆராதனம் செயது, புந -மறுபடியும, தரைலோகய தாதருதவம - மூன்று லோகஙகளுககும் ப்ரம்மாவாயிருககையை, ப்ராப்தவான் - அடைநதார, இதி - என்று, ஶுஶ்ரும - கேழ்வைப்பட்டோம

2 கீர்தேவதா - ஸரஸவதீ என்றும், கருடதவஜ வலலபா இதி - பகவானுககுபபதனியாகிய லக்ஷ்மீ எனறும, சொலலப்படுகிறுள்

3 பகவதகீதை - 11-41-யத்யத் - எநதெந்த, ஸதவம் - ப்ராணி, விபூதிமத - விபூதிகளையுடையதோ (அது என்னுடைய அமஶத்திலுணடானது).

இடத்திலேயே வ்யக்தமாக ஏற்படுகிறது அந்த வாஹநங்களும் அப்படிப்பட்ட வேறு வஸ்துக்களாக இருக்கவேண்டும் அதைப்போலிருப்பது மாத்திரத்தினாலே அதுவே இது என்று நிஶ்சயம் செய்யமுடியாதல்லவா, அனேகம் போகங்களுக்கு ஒரே ஜாதியானவாஹநம் இருப்பதைக் காண்பதினால்

1 ஊர்த்வம் ஹிரண்யாதிஷு கேஷாஞ்சித் ஈஶ்வர வ்யக்திதா ஶ்ரூயதே।
தத்பத்நீஷ்வபி லக்ஷ்ம்யம்ஶ வாத: ஶ்ருத்யாதி பாதித: ॥

இந்த அபிப்ராயத்தினால் இவ்விடத்தில் 'ஸஹயித்ஸ்வ தாஸ தாஸீ கண:' என்றுசொல்லப்பட்டது இப்படி இருந்தபோதிலும் ஸ்திரீகளாகிய பாகத்தைக் குறித்து மாத்திரம் லக்ஷ்மிக்குச் ஶேஷியாக இருக்கை இருக்கவேண்டும், ப்ராம்மபுராணம், விஷ்ணுபுராணம் முதலியவைகளில் அப்படியே சொல்லி இருப்பதினால் ஆகையினால் நாராயணனே எல்லா விபூதிகளுக்கும் ஶேஷீ என்று சொல்லுகிறார்கள் இதற்கு ஸமாதானம் சொல்லுகிறோம் 2'தாஸ ஹ்ருதாஸ்ஸ்வத ஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:' என்றிவைமுதலிய வசனங்களினால் எல்லா ஆத்மாக்களும்பரமாத்மாவிற்கு தாஸர்கள் என்பது ஏற்பட்டிருப்பதினால் 3 'ஜாயாபத்யோர் ந விபாக:' என்கிற நியாயத்தினால் பாத்தாவிற்குத் தாஸர்களெல்லாம் பத்னிக்கும் தாஸர்களென்பது தள்ளமுடியாது இப்படியாகில் பத்னியும் பாத்தாவிற்கு தாஸியாக இருக்கும் பக்ஷத்தில் ஏற்கனவே பாத்தாவிற்குத் தாஸர்களானவர்கள் மறுபடியும் பத்னிக்குத் தாஸர்களாக இருப்பது யுக்தமல்லவே என்பதும் உசிதமல்ல, லோகத்திலும் வேதத்திலும் ஒரிடத்திலும் பத்னி பாத்தாவுக்குத் தாஸி என்று சொல்லப்படாமையினால் ஆகையினாலல்லவா 4 'யதா யதா ஹி கௌஸல்யா தாஸீவச்ச

1 கேஷாஞ்சித - சிலருக்கு, ஹிரண்யாதிஷு - ப்ரம்மா முதலியவர்களிடங்களில், ஈஶ்வர வ்யக்திதா பரமாத்-இவர்கள் தான ஈஶ்வரர்கள்என்கிற ப்ரமத்தினால், தத்பத்னீஷ்வபி-அவர்கள் பத்னிகளிடங்களிலும், லக்ஷ்ம்யம்ஶவாத:- லக்ஷ்மியின அம்ஶம் என்னும் வார்த்தை, ஶ்ருத்யாதிபாதித -ஶ்ருதி முதலியவைகளினால் தள்ளப்பட்டிருக்கிறது

2 மந்த்ர ராஜபத ஸ்தோத்ரம் ஸர்வே - எல்லா, ஆத்மான -ஜீவாத்மாக்கள் பரமாத்மன -பரமாத்மாவிற்கு, ஸ்வத -ஸ்வபாவத்தினாலே, தாஸபூதா -தாஸர்கள்

3 தாமஸ்மித்ரம ஜாயாபத்யோ:-பத்னிக்கும் பாத்தாவிற்கும், நவிபாக:- பாகமில்லை

4 ராமாயணம் - அயோத்யாகாண்டம். யதாயதா - எப்பொழுது எப்பொழுது, கௌஸல்யா - கௌஸல்யையானவள் தாஸீவச்ச - வேலைக்காரியைப்போலவும், ஸகீவச - தோழியைப்போலவும் (என்னிடத்திலிருக்கிறாளோ).

ஸவீவ' என்று உதாஹரணமாகச் சொல்லப்படுகிறது 1 'அஹம் ஶிஷ்யா ச தாஸீ ச பக்தா ச தவ மாதவ' என்கிற பூமியின்வசனமும் ஔபசாரிகமாகச் சொல்லவேண்டும் பத்னிகளெல்லாம் பர்த்தாவிற்கு தாஸிகளா யிருந்தபோதிலும் பர்த்தாவின் மற்றவேலைக்காரர்கள் பத்னிக்கு தாஸர்களாக இருப்பதும் லோகத்தில் காண்பதைப்போல உசிதமாகலாம். எல்லா ஆத்மாக்களும் பகவானுக்கு தாஸபூதர்களாக இருந்தபோதிலும் ஒவ்வொரு காரணங்களினால் ஒருவர்க்கொருவர் தாஸர்களாக இருப்பதும் உண்டல்லவா இவ்விடத்திலோவெனில் ஒரே ஸங்கல்பத்தினால் இரண்டு விபூதிகளும் எப்பொழுதும் இருவர்களுக்கும் ஶேஷமாகவே அங்கீகரிக்கப்பட்டிருப்பதினால் இரண்டு தேவதைகளை உத்தேசித்த ஹவிஸ்ஸைப்போலவே பரமமா முதலியவர்களும் இவ்விருவர்களுக்கும் ஶேஷம் என்பது யுக்தந்தான் கத்யம் முதலியவைகளில் விபூதிகளின் நடுவில் லக்ஷ்மியைச் சொல்லியிருப்பதும் பர்த்தாவிற்குப் பாரதீனம் என்கிற விஷயத்தில் எல்லாம் ஸமமாகையினால் உசிதந்தான்.

2 ஸர்வேஷாம் ஆத்மனாம் லக்ஷ்மீ தத்பதி தாஸதாம் ।
மகாரஸ்து தயோர் தாஸ இதி கேசித் அதீயதே ॥

இப்படி யாகையினால் பகவானுடைய மற்றப் பத்னிகளைக்குறித்து பரமமா முதலியவர்கள் தாஸர்கள் என்பது இருந்தாலும் இருக்கட்டும் இல்லாமற் போனாலும் போகட்டும் லக்ஷ்மிக்கு தாஸர்களென்று கீழ்ச்சொல்லியிருப்பது உசிதந்தான் ஆகையினால் 3 'தேவதிர்யங்மனுஷ்யேஷு புந்நாமா பகவான் ஹரி: । ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீ மைத்ரேய நானயா வித்யதே பரம்,' 4 'யோயோ ஜகதி பும்பாவ ஸ ஸ விஷ்ணுரிதி நிஶ்சய: । யோய

---

1 வராஹபுராணம் அஹம் - நான், மாதவ - ஓ! பகவானே, தவ - உமக்கு, ஶிஷ்யாச - ஶிஷ்யை தாஸீ - வேலைக்காரி, பக்தா - பக்தை

2 ஸர்வேஷாம்-எல்லா, ஆத்மநாத்மனும் - மற்ற ஆத்மாக்களுக்கும், லக்ஷ்மீ தத்பதி தாஸதாம் - லக்ஷ்மிக்கும் அவளுடைய பர்த்தாவிற்கும் தாஸனாயிருக்கும் தன்மையை, மகாரஸ்து தயோர் தாஸ -'ம' என்பது அவ்விருவர்களுக்கும் தாஸனைச்சொல்லுகிறது, இதி - என்று, கேசித - சிலர், அதீயதே - ஶ்ருதியில் சொல்லுகிறார்கள்

3 விஷ்ணுபுராணம் புந்நாமா - புருஷன் என்று பெயருடைய வஸ்து, பகவான் - பகவானாகிய, ஹரி - விஷ்ணு (விஷ்ணுவிற்கு ஶேஷபூதம் என்றாதம்) விஷ்ணுபுராணம் மைத்ரேய - ஓ! மைத்ரேயனே, ஸ்த்ரீநாம்நீ - ஸ்த்ரீ என்று பெயருடையது, லக்ஷ்மீ - லக்ஷ்மிக்குச் சேஷபூதம்

4 விஷ்ணுபுராணம் ஜகதி-லோகத்தில், யோயோ-எதெது, பும்பாவ புருஷனாகிய வஸ்துவோ, ஸ - அது, விஷ்ணுரிதி - விஷ்ணுவென்று, நிஶ்சய -நிஶ்சயம், யோயஸ்து-எது, நாரீபாவஸ்யாத் - ஸ்த்ரீயாகிய வஸ்துவாக ஆகுமோ, தத்ர - அவ்விடத்தில், லக்ஷ்மீ -லக்ஷ்மீ, வ்யவஸ்திதா - இருக்கிறாள்.

𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌨𑌾𑌮𑍍𑌨𑍀 𑌹𑌾𑌵𑌸𑍍𑌯𑌾𑌸𑍍 𑌤𑌤𑍍𑌰 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌰𑍍 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾 ॥' என்றிவை முதலிய இடங்களில் சொல்லப்பட்ட விபூதிகளின் பிரிவும் லோகத்திலிருக்கும் பதிவ்ரதைகள் அவரவர்களுக்குத் தகுந்தபடி உபயோகித்துக் கொள்ளக்கூடிய ஆபரணம் முதலியவைகளைப் பிரித்துக்கொண்டிருப்பதைப்போல இவ்விருவர்களினுடைய ஸங்கல்பத்தினால் ஏற்படுத்தப்பட்ட விஶேஷமான அபிமானத்தைச் சொல்லுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் ஆதிஶேஷன் முதலியவர்களையும் இவ்விடத்தில் லக்ஷ்மிக்குச் ஶேஷமாகச் சொல்லியிருக்கிறது. சிலர் அனேக விதங்களாகியவாதிகளின் ஸந்தேஹங்களினால் மயக்கப்பட்டவர்களாய் லக்ஷ்மியின் உண்மை ஒருவிதத்தாலும் நிரூபிக்க முடியாது என்று நினைக்கிறார்கள். அவர்களும் இவ்விடத்தில் இப்படி நிரூபித்திருப்பதனால் நிராகரிக்கப்பட்டார்கள். மேலும் ஸத்தென்றும் அஸத்தென்றும் சொல்லத்தகாததாயிருக்கை முதலியவை அந்நியமதங்களை நிராகரித்ததினாலேயே பரிஹரிக்கப்பட்டன. ஏதாவது ஒரு ஆகாரத்தினால் நிரூபிக்க முடியாதென்பது எல்லா வஸ்துக்களிலும் ஸம்பவிக்கும், உபயோகமுள்ள பாகத்தை நிரூபிப்பதும் மற்ற எல்லா வஸ்துக்களோடு ஸமமாகையினால் இதில் ஒரு விஶேஷமுமில்லை. 1



𑌯𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍇 𑌮𑌹𑌿𑌮𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨 𑌇𑌵
𑌤𑍍𑌵𑌦𑍍𑌵𑌲𑍍𑌲𑌭𑍋𑌽𑌪𑌿 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃
𑌨𑌾𑌲𑌂 𑌮𑌾𑌤𑍁𑌮𑌿𑌯𑌤𑍍𑌤𑌯𑌾 𑌨𑌿𑌰𑌵𑌧𑌿𑌂
𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑍁𑌕𑍂𑌲𑌂 𑌸𑍍𑌵𑌤𑌃 ।
𑌤𑌾𑌂 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌦𑌾𑌸 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨 𑌇𑌹 𑌚
𑌸𑍍𑌤𑍋𑌷𑍍𑌯𑌾𑌮𑍍𑌯𑌹𑌂 𑌨𑌿𑌰𑍍𑌭𑌯𑍋
𑌲𑍋𑌕𑍈𑌕𑍇𑌶𑍍𑌵𑌰𑌿 𑌲𑍋𑌕𑌨𑌾𑌥𑌦𑌯𑌿𑌤𑍇
𑌦𑌾𑌨𑍍𑌤𑍇 𑌦𑌯𑌾𑌂 𑌤𑍇 𑌵𑌿𑌦𑌨𑍍 ॥ 2

யஸ்யாஸ்தே மஹிமாந மாத்மன இவ த்வத் வல்லபோபி ப்ரபு:
நாலம் மாதும் இயத்தயா நிரவதிம் நித்யாநுகூலம் ஸ்வத:
தாந் த்வாம் தாஸ இதி ப்ரபந்ந இஹ ச ஸ்தோஷ்யாம் யஹம் நிர்பயோ
லோகைகேஶ்வரீ லோகநாத தயிதே தாந்தே தயாம் தே விதந் ‖ 2

ப - ரை] 𑌯𑌸𑍍𑌯𑌾𑌃 - எந்த, 𑌤𑍇 - உன்னுடைய, 𑌨𑌿𑌰𑌵𑌧𑌿𑌂-எல்லை இல்லாததும், 𑌸𑍍𑌵𑌤𑌃-ஸ்வபாவத்தினாலேயே, 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑍁𑌕𑍂𑌲𑌂 - எப்

பொழுதும் பரியமாயிருக்கிற, ஒஹிமா நம் - மஹிமையை, ஸ்வ நஜவ - தன்னுடைய (மஹிமையைப் போல), ஜய தயா - இவ்வளவென்று, மாத்ம - அளவிட, ஹூஃ - ஸாவஶக்தியான, ஸ்வஜநொ - உன்னுடையபாத்தாவாகிய பகவானும், நாலம்-ஶக்தியுள்ளவ ரல்லவோ, லோகைகேஶ்வரி - லோகங்களுக்கு ஒரே யஜமானியாக இருக்கிற, லோக நாய தயிதெ - லோகங்களுக்கு நாதனாகிய பகவானுக்குப் பத்னியாகிய லக்ஷ்மியே, ஊஜெ - ஆஶ்ரயித்தவர்களிடத்தில், தெ - உன்னுடைய, உயாம் - தயையை, விஜ்ஞ - அறிந்துகொண்டிருக்கிற, அஹம் - நான், தாம் - அப்படிப்பட்ட, ஸ்வாம் -உன்னை, உாஸஜதி - தாஸன் என்பதினாலும், ஹூவஜஜதி வ - பரபன்னனென்பதினாலும், நிஸ்வஃ - பயமில்லாமல், ஷொஷ்யாமி - ஸ்தோத்திரம் செய்யப்போகிறேன் 2

பா] பிறகு 'கயம் ஸ்துமஃ' என்று ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பிப்பதைக் குறித்து ஆக்ஷேபிப்பதற்குக் காரணமாகக் கீழ்ச்சொல்லப்பட்ட ஸ்தோத்திரம் செய்யப்படுகிற வஸ்துவினிடத்திலிருக்கிற மேன்மையை மற்றொரு காரணத்தினாலும் உறுதிப்படுத்திக்கொண்டு அதுடன் சேர்ந்ததாகிய ஸௌலப்யமாகிற விஶேஷமான குணத்தை யனுஸந்தானம் செய்துகொண்டு ஸ்தோத்திரம் செய்பவனிடத்திலிருக்கிறதயை செய்யக்கூடிய தசையை நிரூபிப்பதினால் ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பிக்கலாமே என்று ஸமாதானம் சொல்லுகிறார்—இந்த ஶ்லோகத்தினால். 'யஸ்யாஃ' என்கிற இவ்வளவே போதுமானதாயிருந்தபோதிலும் 'தெ' என்று அதிகமாகச் சொல்லி இருப்பது தாமியை நிரூபிக்கிற பரமாணங்களிலேற்பட்ட அஸாதாரணங்களான விஶேஷங்களைத் தெரிவிப்பதற்காக 'மஹிமா நம்' என்பதற்கு இரண்டு விபூதிகளுக்கும் ஶேஷியாக இருக்கையும் எல்லையில்லாத பரியமான குணங்களையுடையவளாக இருக்கையுமாகிற மஹிமையை என்றர்த்தம். 'ஸ்வநஃ' என்பதற்கு தன்னுடைய என்றர்த்தம் 'ஸ்வஜநஃ' என்பதற்கு உனக்கு மிகவும்பரியனுனபாத்தா என்றர்த்தம். 'ஹூஃ' என்பதற்கு எல்லாவஸ்துக்களையும் அறியக்கூடிய ஶக்தி முதலியவைகளையுடையவன என்று தாத்பர்யம். 'ஹூவி (பரபுவாயிருந்தபோதிலும்)' என்றந்வயித்துக்கொள்ள வேண்டியது அன்றிக்கே 'ஸ்வஜநொஸவி' என்றந்வயித்துக் கொள்ளவுமாம் அப்பொழுது 'ஸவி' என்பது இங்கு சொல்லப்படாததையும் சேர்த்துக்கொள்ளவேண்டும் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது அதாவது நீயும் உன்பாத்தாவும் என்றர்த்தம். 'நாலம் மாதுமியத்தயா' என்பதற்கு அளவிட்டுத்தெரிந்துகொள்ள ஶக்தியற்றவன என்றர்த்தம். ஸாவஶக்திதவமுள்ள பகவானுக்கு ஒரு விஷயத்தில

ஶக்தி இல்லை என்பது எப்படிப் பொருந்தும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'நிரவதிம்' என்று வஸ்து அளவில்லாததாகையினால் அதைப்பற்றி எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளக்கூடியவனும் எல்லாவித ஶக்தியையுடையவனுமிருக்கிற பகவானுக்கும் இது அளவிடப்பட்டது என்று தெரிந்துகொள்ளாமை தோஷமல்ல என்று தாத்பர்யம் அப்படியே கூரத்தாழ்வானால் 1 'தேவி த்வந்மஹிமாவதிர் ந ஹரிணா நாபி த்வயா ஜ்ஞாயதே யத்யப்யேவமதாபி நைவ யுவயோ ஸர்வஜ்ஞதா ஹீயதே॥' என்று சொல்லப்பட்டது இப்படிப்பட்ட மஹிமை வேதார்த்த ஸங்க்ரஹத்திலும் 2 'அநவதிகாதிஶயாஸங்க்யேய' என்றருளிச்செய்யப்பட்டது கத்யத்தின் ஆரம்பத்திலும் 'ஸ்வாமிநி நாராயண' என்றாரம்பித்து விவரிக்கப்பட்டது இவளுடைய விபூதிகளைச் சொல்லுகிற ஶாரதாஸூக்தம் மேதாஸூக்தம் முதலியவைகளிலும் விஶேஷமாக ஸ்ரீஸூக்தத்திலும் விசித்ரங்களான இந்த லக்ஷ்மியின் மஹிமைகள் அந்தந்த பாஷ்யகாரர்களினாலநிரூபிக்கப்பட்டிருக்கின்றன அவைகள் அங்கங்கே அறியத்தக்கவை இவளுடைய மஹிமை அடையவேண்டிய ப்ரயோஜனத்தில் உள்ளடங்கி இருக்கிறது என்று தெரிவிப்பதற்காக எப்பொழுதும் ஸ்வபாவத்திலேயே அனுகூலமாயிருக்கிறதென்று சொல்லுகிறார்—'நித்யாநுகூலம் ஸ்வதः' என்று. 'தாம்' என்பதற்கு ஸர்வஜ்ஞனறிந்த இப்படிப்பட்டமஹிமையையுடைய என்றாத்தம் 'த்வாம்' என்பதற்கு மேன்மையோடு கூடின ஸௌலப்யமென்கிற குணமிருப்பதினால் என்னுடைய ஸ்தோத்திரத்தைக் கேழ்ப்பதினாலுண்டாகிய ஸந்தோஷத்தினால் எனக்கபிமுகமாயிருக்கிறஉன்னை என்றாத்தம் 'தாஸ இதி வ ப்ரபந்ந இதி வ' என்பதற்கு தாஸனாக இருக்கும் தன்மையைத்தெரிந்து கொண்டபடியினாலும் ப்ரபன்னனாகையினாலும் என்று தாத்பர்யம் இவை இரண்டும் சேர்ந்து 3 'ப்ரேஷ்யஸ்ய க்ஷமிதவ்யம் மே' என்கிற ந்யாயத்தினால் பயமில்லாமலிருப்பதற்குக் காரணம்

---

1 ஸ்ரீ ஸ்தவம் தேவி - லக்ஷ்மியே, த்வந்மஹிமாவதி -உன்னுடைய மஹிமையின் எல்லை, ஹரிணா - பகவானாலும், நஜ்ஞாயதே - அறியப்படவில்லை, த்வயாபி - உன்னாலும், ந - அறியப்படவில்லை, யத்யப்யேவமதாபி - இப்படி இருந்தபோதிலும், யுவயோ -உங்களுக்கு, ஸர்வஜ்ஞதா - ஸர்வஜ்ஞர்களாக இருக்கும் தன்மை, நைவஹீயதே - குறைவதில்லை

2 எல்லையில்லாத மஹிமையுடைய பத்னீ

3 ப்ரேஷ்யஸ்ய - தாஸனாகிய, மே - என்னுடைய குற்றம், க்ஷமிதவ்யம் - பொறுக்கத்தக்கது.

1 கத்யத்ரயமுகே ஹ்யஸ்மாபி: ஶ்ரீ ப்ரபத்திரியம் ஸதாம்।
ஶ்ரீபதௌ ஸ்தித ஐகாந்த்யம் ந விஹந்தீதி ஸாதிதம்॥

'ஸ்தோத்ரார்ஹம் நிரூபம:' என்பதினால் அநாதிகாலமாகச் செய்யப்பட்ட அபராதங்களை உடையவனாயும், உன்னுடைய மஹிமையை ஸ்தோத்திரம் செய்வதற்குத் தகுந்த ஜ்ஞானம், ஶக்தி, இவைகளில்லாதவனாயும், இருக்கிற நான் நித்யஸூரிகளினாலும் வேதங்களினாலும் முழுமையும் ஸ்தோத்திரம் செய்யமுடியாதவளாகிய உன்னை தாஸனாக இருக்கும் தன்மையைத் தெரிந்து கொண்டபடியினாலும் ப்ரபன்னனாயிருக்கிறேன் என்கிற வ்யாஜத்தினாலும் நிர்பயமாக ஸ்தோத்திரம் செய்யப்போகிறேன் என்று சொல்லப்பட்டதாகிறது. இப்படி ஸ்தோத்திரம்செய்வதை ஆக்ஷேபிப்பதும் அதற்கு ஸமாதானம் சொல்லுவதுமாகிய வ்யாஜத்தினால் இந்த இரண்டு ஶ்லோகங்கள் ஏற்பட்டிருந்தபோதிலும் இது உபாந்த ஸ்தோத்திரமாகவே இருக்கிறது. உன்னை ஆஶ்ரயித்தவனாகிய எனக்கு ஈஶ்வரனல்லாத மற்றொருவரிடத்திலிருந்தும் பயமில்லை என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'லோகைகேஶ்வரி' என்று. 'லோகைகேஶ்வர:' ஆவது ப்ரமாணங்களினாலேற்பட்ட எல்லா வஸ்துக்களுக்கும் தன்னைப்போல மற்றொருவருமில்லாத ஈஶ்வரன். 'ஏகேஶ்வர:' என்னும் பதம் இவ்விடத்தில் ஶேஷியாக இருக்கையை உள்ளடக்கிக் கொண்டிருக்கிற நியந்தாவாக இருக்கையை அபிப்ராயத்தில் கொண்டிருக்கிறது. 'பதிம் விஶ்வஸ்ய' என்றாற்போல் உள்ள ஶ்ருதிவாக்யத்தில் ப்ரபஞ்சத்திற்குச் ஶேஷியாகச் சொல்லப்பட்ட பகவானுக்கு மற்றொரு ஶேஷி இல்லை என்று சொல்லுவதில் தாத்பர்யத்தினால் தனக்குத்தானே ஈஶ்வரன் என்றாற்போலுள்ள வாக்யம் சொல்லப்படுகிறபடியினால் 2 'யோ லோகத்ரயமாவிஶ்ய பிபர்த்த்யவ்யய ஈஶ்வர:' என்பதின் அர்த்தம் ஸங்க்ரஹத்தில்

---

1 கத்யத்ரயமுகே - பெரியகத்யம் முதலிய காந்தத்தில், அன்றிக்கே பெரிய கத்யத்தின் ஆரம்பத்தில் என்றாகவுமாம், அஸ்மாபி:-நம்மால், இயம் - இந்த, ஶ்ரீ ப்ரபத்தி -லக்ஷ்மியிடத்தில் செய்கிற ப்ரபத்தி, ஸதாம் - பெரியோர்களுக்கு, ஶ்ரீபதௌ - பகவானிடத்தில், ஸ்திதம் - இருக்கிற, ஐகாந்த்யம் - பரமைகாந்தியாயிருக்கையை, நவிஹந்தி - கெடுக்கிறதில்லை, இதி - என்று, ஸாதிதம் - ஸ்தாபிக்கப்பட்டது.

2 பகவத்கீதை-15-16. ய -எந்த, ஈஶ்வர -நியமிக்குந் தன்மையுடைய பகவான், லோகத்ரயம் - மூன்றுலோகங்களையும் அதாவது எல்லாவஸ்துக்களையும், ஆவிஶ்ய-உள்ளே நுழைந்து, அவ்யய -ஒருவித மாறுதலில்லாதவனாய்க் கொண்டு, பிபர்த்தி - தாங்குகிறானோ

1 'ஸ்ராவநாக ஶரணாகதாஸ்ய ஶத்ரோ: ஸம்ஸ உபேக்ஷித:' என்று சொல்லப்பட்டது அவ்விடத்தில் பாஷ்யமும் 2 'ஸ்ராவநஶரண ஸா மர்த்யாநத்ரய தயா' என்று சொல்லப்பட்டிருக்கிறது இப்படிப்பட்ட ராவணனுக்கு பத்னியாகையினால் இவ்விடத்தில் 'லோகேகேஶ்வரி' என்று சொல்லப்பட்டது இதனால் 3 'ஸாம் ப்ரதாநஸ்ய ஶேஶ்வரீ' என்கிற பெயரும் வ்யாக்யானம் செய்யப்பட்டது உம்முடைய அனுக்ரஹம் இருந்தால் பகவானிடத்திலிருந்தும் எனக்குப்பயமில்லை என்று சொல்லுகிறார்—'லோகநாத உயிதே' என்று 'உயித' என்னும் பதம் இவ்விடத்தில் அவனுக்கு மிகவும் பிரியமானவள் என்கிற அபிப்ராயத்தையுடையது எல்லா வஸ்துக்களுக்கும் பயம் அபயம் இவைகளுக்குக் காரணமாகிய பகவானும் உன்னுடைய இஷ்டத்தை மீறி நடக்கிறதில்லை என்று தாத்பர்யம் இந்த இரண்டு ஸம்போதனங்களினாலும் ஸ்தோத்திரம் செய்யத்தகுந்தவளாக இருப்பதற்கு அதிக ந்யாயமும் காட்டப்பட்டது இப்படிப்பட்ட உன்னை ஆஶ்ரயித்திருக்கிற எனக்கு உன்னிடத்திலிருந்தும் பயமில்லை என்று சொல்லுகிறார்—'தா ஸே உயாஸே விதோ' என்று உனக்கு தாஸன் என்பதைத் தெரிந்து கொண்டவனும் உனக்கு கருணையை விருத்தி செய்யக்கூடிய தீனமான தசையை அடைந்தவனும் உத்திரவைமீறி நடப்பதில் எண்ணமில்லாதவனும் ப்ரபன்னனுமிருக்கிறவன் இவ்விடத்தில் 'தாஸ' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறான் தாயாராக இருப்பதினால் உண்டாகிய அதிக ப்ரீதியையுடைய உனக்கு இப்படி ப்ரபன்னனாகிய புருஷனிடத்தில் பகவானுடைய கருணையைவிட அதிகக் கருணையுண்டென்பதைத்தெரிந்து கொண்டு நானும் இப்படி ப்ரபன்னனாகையினால் நிர்பயனானேன் என்று தாத்பர்யம் இவ்விடத்தில் 'தாஸ' என்னும் பதம் வணங்கினவனை மாத்திரம் சொல்லுகிறதாகவுமாம் அவ்வளவு மாத்திரத்திலும் அவளுக்கு விசேஷமான அபிமான முண்டென்பது

1 கீதார்த்தஸங்க்ரஹம்-19 வ்யாப்த - வ்யாபித்திருப்பதினாலும், பா ஞத் - தாங்குவதினாலும், ஸ்வாம்யாத் - ஸ்வாமியாயிருப்பதினாலும், அந்ய:-வேறு பட்டவனை பஞ்சதஶோதித -பதினைந்தாவது அத்யாயத்தில் சொல்லப்பட்டான்

2 வ்யாபித்திருப்பது, தரிப்பது, ஸ்வாமியாக இருப்பது இவைகளினால் வேறு வஸ்துவாக (சொல்லப்பட்டான)

3 பும - ஜீவாத்மா, ப்ரதான - ப்ரக்ருதி, இவைகளுக்கு, ஈஶ்வர - ஈஶ்வரனாகிய பகவான், ஈஶ்வரீ - இவைகளெல்லாவற்றையும் நியமிக்கிறவள்.

அந்த லக்ஷ்மியினுலேயே 1 'தாமநித்யே மஹாபுத்தௌ ப்ராஹ்மண்யே ஸத்யவாதிநி । ப்ரஶ்ரிதே தாநஶீலே ச ஸதைவ நிவஸாம்யஹம் ॥" என்று சொல்லப்பட்டது. இப்படிப்பட்ட மிகுந்த தயை 2 'கருணாநம்ரவக்த்ரீ' என்றிவளுடைய பெயரினுலேயே தெரிவிக்கப்பட்டது. ஸஹஸ்ர நாமத்திலும் 3 'கருணாம் வேதமாதரம்' என்று சொல்லப்படுகிறது. கருணை அதிகமாக இருப்பதினுல இவளைக்கருணை யென்றே சொல்லியிருக்கிறது.

4 பாரம்யாபஹ்நவ: பத்யு: பாஹ்யாநாம் மாநபாதித: ।
இதி வ்யாபயிதும் ஸ்ரீஶம் ஸ்ரீத்ருஷ்டாந்தம் இஹாப்ரவீத் ॥

இப்படி இருந்தபோதிலும 'காற்றில்லாத அந்த ஒரு பரமமானது ஸ்வதையினுல ப்ராணனோடு இருந்தது' என்றாத்த முள்ள ஶ்ருதி வாக்யத்தில ப்ரளயத்தசையில 'ஸ்வதா' என்னும பதத்தினுல சொல்லப்படுகிற ஒரு தேவதையினுல பரப்ரம்ம ப்ராணனோடிருக்கிறதென்று சொல்லப்படுகிறது. அதுவும 5 'ஸ்வதா த்வம் லோகபாவநீ' என்று புராணத்தில சொல்லியிருக்கிறபடியினுலும், மஹாபாரதத்தில இந்த்ரனுக்கு உபதேசம செய்யும்பொழுது 6 'அஹம் ஸ்வாஹா ஸ்வதா சைவ' என்று இந்த லக்ஷ்மியினுலேயே சொல்லப்பட்டிருப்பதினுலும, உசிதமாக இருக்கிறபடியினுலும, லக்ஷ்மீ தான ஆகையினுல அவனுக்கு வசப்பட்டு

---

1 தாமநித்யே - தாமத்தில நிலை நிற்பவனிடத்திலும, மஹாபுத்தௌ - அதிகப் புத்திமானு யிருப்பவனிடத்திலும, ப்ராஹ்மண்யே - ப்ராஹ்மணர்களையே தேவதைகளாகப் பாவிப்பவனிடத்திலும், ஸத்யவாதிநி - உண்மையைச் சொல்லுகிறவனிடத்திலும, ப்ரஶ்ரிதே - வணக்கமுள்ளவனிடத்திலும, தாநஶீலே ச - கொடுப்பதையே ஸ்வபாவமாக வுடையவனிடத்திலும, அஹம் - நான், ஸதைவ - எப்பொழுதும், நிவஸாமி - வஸிக்கிறேன்

2 தயையினுல முன்பாகத்தில் வணங்கி இருக்கிற முகத்தையுடையவள்

3 கருணாரூபியாயும வேதங்களுக்குத் தாயாயுமிருக்கிற

4 பாஹ்யாநாம - வேதபாஹ்யர்களினுடைய, அதாவது அவர்கள்சொல்லும், பத்யு: - பர்த்தாவாகிய பகவானிடத்தில, பாரம்யாபஹ்நவ: -பரதேவதையாயிருக்கை இல்லை என்பது, மாநபாதித: -ப்ரமாணங்களினுல் தடுக்கப்பட்டிருக்கிறது, இதி - என்று, க்யாபயிதும - தெரிவிப்பதற்காக, ஸ்ரீஶம் - ஸ்ரீய:பதியான பகவானை, இஹ - இவ்விடத்தில், ஸ்ரீத்ருஷ்டாந்தம் - லக்ஷ்மிக்கு உதாஹரணமாக, அப்ரவீத் - சொன்னுர்

5 த்வம - நீ, லோகபாவநீ - லோகங்களைப் பரிசுத்தம் செய்கிற, ஸ்வதா - ஸ்வதா என்னப்படுகிறவள்

6 அஹம-நான, ஸ்வாஹா-ஸ்வாஹா என்பவளும,ஸ்வதா-ஸ்வதாஎன்பவளும்

ப்ராணனோடு இருக்கிறது ப்ரம்மம் என்று சொல்லவேண்டும் என்கிறார்கள் அது உசிதமல்ல, எல்லா வஸ்துக்களினுடைய ஸ்திதி தனக்கு வசப்பட்டதாக இருக்கிற பரப்ரம்மம் மற்றொன்றுக்கு அடங்கிய ப்ராணனை உடையது என்பது ஸம்பவிக்காததாகையினாலும், 'ஸ்வ' என்னும் பதம் லக்ஷ்மியினிடத்தில் ப்ரயோகிக்கப்பட்டிருப்பதைக் காண்பது மாத்திரத்தினால் லக்ஷ்மியைச் சொல்லுகிறதென்று கல்பிப்பதைவிட 'ஸ்வஸ்மிந் த்ரியதே (தன்னிடத்திலேயே இருக்கிறது)' என்கிற வ்யுத்பத்தியினால் தன்னிடத்திலேயே இருப்பதைச் சொல்லுகிறதென்று கல்பிப்பது உசிதமாகையினாலும் அன்றிக்கே தன்னுடையதாகிய ப்ரபஞ்சத்தைத் தாங்குகிற ஶக்தியே 'ஸ்வ' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறதாகவுமாம் அப்படியே 'ஶ்ரைஷ்ட்ய' என்னும் அதிகரணத்தில் பாஷ்யத்தில் 'இந்த ஶ்ருதிவாக்யத்தில் ஜீவர்களுடையதாகிய முக்கியமான ப்ராணவாயுவைப் பற்றிச் சொல்லப்படவில்லை பின்னை எதென்னில் பரப்ரம்மம் ஒன்றே இருந்தது என்று சொல்லப்படுகிறது' என்று அருளிச்செய்யப்பட்டது இவ்விடத்தில் வேறொன்றுக்கும் வசப்படாத தன்னுடைய ஸ்திதியை உடையது என்பதே அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது 'ஸ்வ' என்னும் பதம் லக்ஷ்மியைச் சொல்லுகிறதாக இருந்தாலும் இருக்கட்டும் அப்படி இருந்தபோதிலும் லக்ஷ்மியோடு கூட என்றர்த்தம் சொல்லுவதே இவ்விடத்தில் உசிதம் அப்படியே மஹாபாரதத்தில் 1 'க்ருத்வா மத்ஸ்தாநி பூதாநி சராணி ஸ்தாவராணி ச। ஏகாகீ வித்யயா ஸார்த்தம் விஹரிஷ்யே த்விஜோத்தம॥' என்று சொல்லப்படுகிறது இவ்விடத்தில் 2 'ததோ பூயோ ஜகத்ஸ்ருஷ்டிம் கரிஷ்யாமீஹ வித்யயா' என்று மேலே வாக்யமிருக்கிறபடியினாலும் உசிதமாக இருப்பதினாலும் அவ்விடத்தில் 'வித்யா' என்னும் பதம் ப்ரக்ருதியைப்பற்றிச் சொல்லுவதாக இருக்கவேண்டும் என்னில் அப்படியே இருக்கட்டும் ஆனாலும் கீழ ப்ரஸ்தாவிக்கப்பட்ட மற்றொரு வஸ்துவுடன்கூட இருக்கிறது என்பது ஸம்பவிக்கும், என்கிற அம்ஶத்தில் மாத்திரம் இது உதாஹரணம் என்பது யுக்தந்தான் அதுவுமன்றி

---

1 த்விஜோத்தம-ஓ ப்ராம்மணஶ்ரேஷ்டனே, சராணி - ஜங்கமங்களாயும், ஸ்தாவராணிச - ஸ்தாவரங்களாயு மிருக்கிற, பூதாநி - ப்ராணிகளை, மத்ஸ்தாநி - என்னிடத்தி லிருப்பவைகளாக, க்ருத்வா - செய்துவிட்டு, ஏகாகீ - ஒருவனாக, வித்யயா ஸார்த்தம் - வித்யையோடுகூட, விஹரிஷ்யே-விளையாடப்போகிறேன்

2 தத -பிறபாடு, பூய -மறுபடியும், வித்யயா - வித்யை (ப்ரக்ருதி)யினால், ஜகத்ஸ்ருஷ்டிம்-லோகங்களுடைய ஸ்ருஷ்டியை, கரிஷ்யாமி - செய்யப்போகிறேன்.

றிக்கே 1 'தேநேயம் ஸ ச தர்மாத்மா முஹூர்த்தமபி ஜீவதி' என்று சொல்லியிருப்பதைப்போல 'ஶ்ரியா' என்று சொல்லப்படுகிற லக்ஷ்மியினால் ப்ராணனோடிருக்கிறது என்று அவ்வளவு ப்ரீதிக்கு வசப்பட்டிருப்பதைச் சொல்லுவதில் தாத்பர்யமாகவுமாம். இது இப்படி இருந்தாலும் இருக்கட்டும். 2 'மேதா ஶ்ரத்தா ஸரஸ்வதீ', 3 'அஹம் ஶ்ரத்தா ச மேதா ச' என்கிற புராணவசனங்களினால் விவரிக்கப்பட்டிருக்கிற 'ஶ்ரத்தையினால் தேவனாகிய பகவான் தேவனாயிருக்கையை அடைகிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தினால் பரதேவதையாகிய பகவான் பத்னியினால் உண்டாகிய மேன்மையை யுடையவன் என்பதேற்படுகிறதே என்னில் இதுவும் ஸரியான ஆக்ஷேபமல்ல. ஏனென்னில் ஸ்வபாவத்திலேயே ஏற்பட்ட மேன்மையையுடைய ஸூர்யனுக்குக் காந்தியின் ஸம்பந்தத்தினாலேபோல 4 'ஶ்ரிய ஶ்ரீஶ்ச பவேத்' என்று சொல்லப்பட்ட பகவானுக்குத் தன்னுடைய பத்னியினாலும் மற்றொரு மேன்மை இருப்பதில் தோஷமில்லாமையினால் அழகாயிருப்பவனே ஆபரணத்தினாலும் ப்ரகாசத்தை அடைகிறான் என்று சொல்லுவதைப்போல லக்ஷ்மியினால் மேன்மை உண்டாகாமலிருப்பதில்லை என்கிற தாத்பர்யத்தினால் இது சொல்லப்படுகிறது என்பது பொருந்தி இருக்க அநேக ப்ரமாணங்களுக்கு விருத்தமாக வேறொன்றினால் மேன்மை இல்லை என்கிற அர்த்தத்தைக் கல்பிப்பது யுக்தமல்லவாகையினால் மேலும் 'தைவத்வம் (தேவனாயிருக்கை)' ஆவது விளையாட்டையுடையவனாயிருக்கை. அந்த விளையாட்டு முதலியவைகளும் தன்னுடைய பத்னியோடுகூடிய பகவானுக்கே ஸம்பவிக்கிறது என்றர்த்தம் சொல்லுவது ஸரியான மார்க்கம். அப்படியே பெரியோர்களும் 5 'யஸ்யா வீக்ஷ்ய முகம்', 6 'அங்கீகாரிபி ராலோகை:',

1 ஸ்ரீமத் ராமாயணம்-சுந்தரகாண்டம் (இப்படி ஒருவர்க்கொருவருடைய மனது ஒருவர்க்கொருவரிடத்திலிருப்பதாகிய) தேந-அதினாலே, இயம் - இந்த ஸீதையும் (உயிரோடிருக்கிறாள்), தர்மாத்மா-தர்மாத்மாவாகிய, ஸச-அந்த ராமனும், முஹூர்த்தமபி-ஒரு க்ஷணகாலமும், ஜீவதி-உயிரோடிருக்கிறார்

2 மேதை, ஶ்ரத்தை, ஸரஸ்வதி (இவை லக்ஷ்மியின் பெயர்கள்).

3 நானே ஶ்ரத்தையும் மேதையும்

4 ஶ்ரிய -லக்ஷ்மிக்கும், ஸ்ரீ-லக்ஷ்மியாக, பவேச - ஆவான்

5 ஸ்ரீஸ்தவம் யஸ்யா -எவளுடைய, முகம்-முகத்தை, வீக்ஷ்ய-பார்த்து (லோகங்களுடைய ஸ்ருஷ்டி ஸம்ஹாரம் முதலியவைகளைச் செய்கிறானோ).

6 அங்கீகாரிபி -பகவானுடைய வ்யாபாரங்களை அங்கீகரிக்கிற, ஆலோகை - பார்வைகளினால்.

1 'க்ரீடவதி ஸ்ரீஸமக்ஷம்' என்றிவை முதலிய வசனங்களை அருளிச் செய்திருக்கிறார்கள். இப்படி ஆப்தர்களினால் செய்யப்பட்ட மற்றும் சில ஸ்தோத்திர வாக்யங்களும் ப்ரமாணங்களுக்கும் தங்களுடைய மற்ற வாக்யங்களுக்கும் விரோதமில்லாமல் அர்த்தம் சொல்லிக்கொள்ள வர்த்தக்கவைகள். ப்ராம்ம புராணத்தில் 2 'ஸர்வாதிசாயினீ ஸ்ரீ: ஸர்வோத்க்ருஷ்டா ஸர்வமயீ', 3 'அநௌபம்யா நிர்விகல்பா' என்றிவை முதலிய லக்ஷ்மியின் பெயர்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவே அவைகளும் 'அந்தப் பரமாத்மாவிற்கு ஸமமானவனும் மேற்பட்டவனும் காணப்படவில்லை' என்றும், 'அந்தப் பகவானைவிட வேறு பரவஸ்து ஒன்றுமில்லை' என்றும், 'ஈச்வரர்களுக்கெல்லாம்மேலான மஹேச்வரனாகிய அந்தப் பகவானே' என்றும் 'ப்ரக்ருதி, ஜீவாத்மா, இவ்விரண்டு வஸ்துக்களையும் அந்த ஒரு தேவனே நியமிக்கிறான்' என்றும், 'இந்த லோகத்திற்கு ஒரே ராஜாவாக ஆனான்', 'ஜங்கமஸ்தாவரங்களை நியமிக்கிறவன் ஒருவனே' என்றும், 'ஒருவனே நியமிக்கிறவன் மற்றொரு நியமிக்கிறவன் இல்லை' என்றும், 'விஷ்ணுவே ஸகலவஸ்துவையும் நியமிக்கிறவன்' என்றும் அர்த்தமுள்ள ச்ருதிவாக்யம் முதலிய ப்ரமாணங்களை அனுஸரித்துப் பகவானைத் தவிர மற்றெல்லாவஸ்துக்களையும்விட பகவானுடைய பத்னியாகிய லக்ஷ்மிக்கு மேன்மையைச் சொல்லுகின்றன. இப்படியானால் 4 'சக்திசக்ரஸ்ய நாயிகா' என்றவிடத்தில் சொல்லியிருப்பதும் பொருத்தமுடையதாகிறது. இவ்விடத்தில் சக்தி என்றும் பத்னீ என்றும் விளையாட்டென்று பெயருடைய கார்யத்திற்குபயோகமான விசேஷணமாக இருப்பதை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு பத்னியைச் சொல்லுகிறது.

5 அத்யந்த ஸாம்யமப்யஸ்யாம் த்ருஷ்டாந்த ஸ்வரஸாகதம் |
ஸ்வாம்யம் நியத நிர்பாதம் யத்ர ச்ருத்யவிரோதக: ||

---

1 ஸ்ரீ குணரத்னகோசம் ஸ்ரீஸமக்ஷம்-லக்ஷ்மியின் முன்பாக, க்ரீடவதி-விளையாடுகிறீர்

2 ஸர்வாதிசாயினீ-எல்லாவற்றிற்கும் மேற்பட்ட, ப்ரீதி:-ப்ரீதி, ஸர்வோத்க்ருஷ்டா-எல்லாவற்றையும் விட மேற்பட்டவள், ஸர்வமயீ - எல்லா வஸ்து ஸ்வரூபியாயுமிருக்கிறவள்

3 அநௌபம்யா-ஸமானமில்லாதவள், நிர்விகல்பா-பேதமில்லாதவள்

4 சக்தி சக்ரஸ்ய-பத்னிகளின் ஸமூஹத்திற்கு, நாயிகா-யஜமானி.

5 அஸ்யாம்-இந்த லக்ஷ்மியினிடத்தில், த்ருஷ்டாந்த ஸ்வரஸாகதம்-உதாஹரணங்களின் ஸ்வாரஸ்யத்தினாலேற்பட்ட, அத்யந்த ஸாம்யமபி-மிகவும் ஸமமாயிருக்கையும், நியத-எப்பொழுதுமிருக்கிற, நிர்பாத-ஒரு விரோதமுமில்லாத,

இவ்விடத்தில் 1 'தஸ்ய ஶக்தித்வயம் தாத்ருஶ் ச பின்னலக்ஷணம்' என்று ஶாத்வத ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட லக்ஷ்மீ அவனைப் போலவே இருக்கிறாள் என்பதும் ஶ்ருதி, ஸ்ம்ருதி, முன்பின் ஸந்தர்ப்பங்கள், இவைகளில் ப்ரஸித்தமாகிய பத்னியாயிருப்பதற்கு அனுகுணமாக அர்த்தம் சொல்லிக்கொள்ள வேண்டியது. மேலும் முக்தியை யடைந்தவனுக்குப் பகவானுடன் மேலான ஸாம்யம் உண்டாகிறது என்று ஶ்ருதி ஸ்ம்ருதி முதலியவைகளினால் ஏற்பட்டிருந்தபோதிலும் 2 'ஜகத்வ்யாபாரவர்ஜம்' என்று பரமாத்மாவிற்கு லக்ஷணங்களாகிய ஆகாரங்களினால் வ்யத்யாஸம் உண்டென்று எப்படி ஸ்தாபிக்கப்படுகிறதோ அதைப்போலவே இவ்விடத்திலும் ஸம்பவிக்கிறது 'பின்னலக்ஷணம்' என்று அவ்விடத்திலேயே சொல்லப்பட்டது 3 'லக்ஷ்மீதேவ ஸ்வதேயாஸ்' என்றாரம்பித்து 'ஶோதா த்வயா வினா' என்றும் சொன்னார்கள் இப்படி ஒப்புக்கொள்ளாத பக்ஷத்தில் அவளை முன்னிட்டுக் கொண்டு பகவானை அடையவேண்டுமென்று ஆங்காங்கு சொல்லியிருப்பதும் முடியாததாகும்.

4 'காமாஹாஞ் பலதே ஹதேப்ய வத்யாஸ் க்ருத்யத்வயம் ஶ்ரிய: ।
நிக்ரஹாக்ஷ வாரணம் காலே ஸந்துக்ஷணம் ச நித்யஶ: ॥'

ஸ்ரீ விஷ்ணு சித்தரென்கிற எங்களாழ்வானாலும் தத்ய வ்யாக்யானத்திலாரம்பத்தில் 5 'மாத்ருத்வைகரூபாம் ஶ்ரியம் ப்ரபத்யே ...

பத்னீத்வாத்யவிரோதத -பத்னியாயிருக்கை முதலியவைகளுக்கு விரோதமில்லாமல், ஸ்தாப்யம்-ஸ்தாபிக்கத் தக்கது

1 தஸ்ய - அந்தப் பகவானுக்கு, தாத்ருக-அந்தப் பகவானுக்கு ஸமமாயிருக்கிற, அமிஶ்ரம், ஒன்றோடொன்று கலக்காமலிருக்கிற, பின்னலக்ஷணம் - வெவ்வேறு அடையாளங்களையுடைய, ஶக்தித்வயம் - இரண்டு பத்னிகள் (இருக்கிறார்கள்).

2 ஶாரீரக ஸூத்ரம் - 4 - 4 - 17 லோகங்களின் ஸ்ருஷ்டிமுதலிய வ்யாபாரங்களை விட்டு (மற்றெல்லா விஷயங்களிலும் ஸாம்யம்)

3 ஸ்ரீகுண ரத்னகோசம்.

4 காமாஹாஞ் பலதே - காமங்களுக்குத் தகுந்தபடி பலத்தைக் கொடுக்கிற, பதயௌ - பாத்தாவாகிய பகவானிடத்தில், ஶ்ரிய:-லக்ஷ்மிக்கு, காலே-அந்தந்த ஸமயத்தில், நிக்ரஹாத-நிக்ரஹம் செய்வதிலிருந்து, வாரணம்-தடுப்பதும், அனுக்ரஹே-அனுக்ரஹம் செய்வதில், ஸந்துக்ஷணம் - தூண்டுதலும், (ஆகிய) க்ருத்யத்வயம்—இரண்டு காரியம், அஸ்தி - இருக்கிறது

5 மாத்ருத்வைகரூபாம் - தாயாராயிருப்பதொன்றையே, ஸ்வபாவமாகவுடைய, ஶ்ரியம் - லக்ஷ்மியை, ப்ரபத்யே - ஆஶ்ரயிக்கிறோம், ஹி - எந்தக் காரணத்

மாதா ஹி ஹிதாதபி ஸுதஸ்ய ப்ரியமேவ பஶ்யதி பிதாது உபயம் பஶ்யதி அஸ்யாம் தண்டதரத்வஹீநதைவ அவலம்பநம் தஶாயாமாஸீத்' என்றருளிச் செய்யப்பட்டது. இவ்விடத்தில் வரத குரு என்னும் அம்மாளுடைய உபதேசத்தை யனுஸரித்தவராகிய ஶ்ருத ப்ரகாசிகாசார்யராலும் 1 'ப்ரதாபோஷ்மள பித்ருத்வ துராஸத பகவத்ஸமாஶ்ரயண ஸித்தயே புருஷகாராநுப்ரவிஷ்ட வாத்ஸல்ய நிர்பர லக்ஷ்மீ ஸமாஶ்ரயணம் ஶ்ரீமச்சப்த விவரண பூர்வகமபிதீயதே' என்றருளிச் செய்யப்பட்டது. லக்ஷ்மிக்கு சிக்ஷை செய்யும் தன்மை இல்லாவிடில் 2 'தைத்ய தாநவ மர்த்தநீம்' என்றிவை முதலிய பெயர்கள் எப்படிப் பொருந்தும்? என்பதும் உசிதமல்ல. 3 'ஸீதாயா தேஜஸா தக்தாம் ராமகோப ப்ரபீடிதாம்' என்றிவை முதலிய இடங்களிலேபோல கோபம் பர்த்தாவிற்கு இருந்தபோதிலும் இவள் அதற்கு அனுமதி செய்வதின் மஹிமையினாலும் அஸுரர் முதலியவர்களை நிராகரிப்பது ஏற்படுகிறபடியினால் தனக்கு அஸாதாரணமாகிய சில விபூதிகளை முன்னிட்டாவது அவைகள் பொருந்தும்

---

தினால், மாதா - தாயாரானவள், புத்ரஸ்ய-பிள்ளைக்கு, ஹிதாதபி-நன்மையைவிட, ப்ரியமேவ - ப்ரியத்தையே, பஶ்யதி - பார்க்கிறுளோ, பிதாது-தகப்பனுரோ வெனில், உபயம் - இரண்டையும் பஶ்யதி - பார்க்கிறன், ஆகையினால் அஸ்யாம்- இந்த, தஶாயாம் - தசையில், தண்டதரத்வஹீநதைவ - சிக்ஷிக்கும் தன்மை இல்லாமையே, அவலம்பநம் - பிடிப்பாக, ஆஸீத்-ஆயிற்று

1 ப்ரதாபோஷ்மள - பராக்கிரமத்தினால் சூடுகையுடன் கூடிய, பித்ருத்வ- தகப்பனாயிருக்கும் தன்மையினால், துராஸத - அணுக முடியாத, பகவத்ஸமாஶ்ரயண - பகவானிடத்தில் ப்ரபத்தி, ஸித்தயே - ஸித்திப்பதற்காக, புருஷகாராநுப்ரவிஷ்ட - புருஷ காரத்தில் சேர்ந்தவளாகிய, வாத்ஸல்ய நிர்பர - ப்ரீதியினால் நிறைந்தவளாகிய, லக்ஷ்மீ ஸமாஶ்ரயணம் லக்ஷ்மியை ஆஶ்ரயிப்பது, ஸ்ரீமச்சப்த விவரணபூர்வகம் - ஸ்ரீமத் என்னும் பதத்தை விவரணம் செய்வதை முன்னிட்டு, அபிதீயதே - சொல்லப்படுகிறது

2 தைத்ய - திதியின் பிள்ளைகள், தாநவ - தனுவின் பிள்ளைகள், இவர்களாகிய அஸுரர்களை, மர்த்தநீம் - கொல்லுகிற

3 ராமாயணம் ஸீதாயா -ஸீதையினுடைய, தேஜஸா - தேஜஸ்ஸினால், தக்தாம் - கொளுத்தப்பட்டதும், ராமகோபப்ரபீடிதாம் - ராமனுடைய கோபத்தினால் பீடிக்கப்பட்டதுமாகிய (லங்காபட்டணம்).

இந்த அபிப்ராயத்தினால் புராணங்களில் 1 'ஸௌம்யாஸௌம்யைர்ஜகத்ரூபைஸ்த்வயைதத்' என்றிவை முதலியவை சொல்லப்படுகின்றன

2 யத்கிஞ்சிதபி வைஷம்யம் யதி நாத்ர நேஷ்யதே ।
தயோர்தேஹ வ்யவஸ்தாபி ந ஸித்த்யேத் ஸர்வஸம்மதா ॥
ஸ்வரூபஸ்திதி பக்ஷஸ்து ஹேது: பக்ஷோऽயமித்யபி ।
ஸ்வரூபத்வாதிஹாநர்த்தே தூஷணம் வாபி நார்ஹதி ॥
நஹி ஸித்தே விகல்ப: ஸ்யாந் ஸந்தேஹோऽத்ர நிஶ்சயாத் ।
ந காலாத்யைர் விபர்யாஸ: ஸ்வதஸ்ஸித்த்யாதி ஸாதநாத் ॥



ஈஷத்த்வத் கருணா நிரீக்ஷண
ஸுதா ஸந்துக்ஷணாத் ரக்ஷ்யதே
நஷ்டம் ப்ராக் ததலாபதஸ் த்ரிபுவநம்
ஸம்ப்ரத்யநந்தோதயம் ।
ஶ்ரேயோ நஹ்யரவிந்தலோசந மந:
காந்தா ப்ரஸாதாத்ருதே
ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்வஸு
ந்ருணாம் ஸம்பாவ்யதே கர்ஹிசித் ॥ 3

1 ஸௌம்யா ஸௌம்யை - ஸௌம்யங்களாயும் ஸௌம்யங்களல்லாததாயுமிருக்கிற, ரூபை - ரூபங்களினால் ஜகத் - லோகமானது, (வ்யாபிக்கப்பட்டிருக்கிறது)

2 அத்ர - இந்த விஷயத்தில், யத்கிஞ்சித் - ஏதாவதொரு, வைஷம்யமபி - வ்யத்யாஸமும், நேஷ்யதே யதி - ஒப்புக்கொள்ளப்படுகிறதில்லையேயானால், தயோ: - அவர்களுக்கு, ஸர்வஸம்மதா - எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட, தேஹவ்யவஸ்தாபி - தேஹங்களின் வ்யத்யாஸங்களும், நஸித்த்யேத் - ஸித்திக்காது, ஸ்வரூபஸ்திதி பக்ஷஸ்து - இவர்களின் ஸ்வபாவம் முதலியவைகளுக்கு ஒருவித ஏற்பாடு இல்லை என்னும் பக்ஷமோவெனில், அயம் - இது, ஹேது:—காரணம், பக்ஷ: - பக்ஷம், இத்யபி - என்றும், தூஷணமவாபி - தூஷிப்பதற்கும், நார்ஹதி - தகுதியல்ல, ஸித்தே - ஸித்தமான வஸ்துவில், விகல்ப - இப்படியாவது அப்படியாவது என்கிற விகல்பம், நஹிஸ்யாத் - இருக்கக்கூடாதல்லவா, அத்ர - இந்த விஷயத்தில், நிஶ்சயாத் - நிஶ்சயமுண்டாயிருப்பதினால், ஸந்தேஹ: - ஸந்தேஹமும், ந - இல்லை, காலாத்யை - காலம் முதலியவைகளினால், விபர்யாஸ - மாறுதலும், ஸ்வதஸ்ஸித்த்யாதி ஸாதநாத் - அவர்களுடைய ஸ்வபாவம் நித்யமாக இருக்கிறது என்பது முதலியவைகளைக் கீழே ஸாதித்திருப்பதினால், ந - இல்லை

*ஈஷத்த்வத் கருணா நிரீக்ஷண ஸுதா ஸந்துக்ஷணாத் ரக்ஷ்யதே*
*நஷ்டம் ப்ராக் ததலாபத: த்ரிபுவநம் ஸம்ப்ரத்ய நந்தோதயம்*
*ஶ்ரேயோ நஹ்யரவிந்த லோசநமந: காந்தா ப்ரஸாதாத்ருதே*
*ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்வஸு ந்ருணாம் ஸம்பாவ்யதே கர்ஹிசித் ||* 3

ப - ரை] ஈஷத் - கொஞ்சம் த்வத் - உன்னுடைய, கருணா - கருணையினாலுண்டான, நிரீக்ஷண - பார்வையாகிற, ஸுதா - அம்ருதத்தினால், ஸந்துக்ஷணாத் - வ்ருத்தி செய்வதினால், ப்ராக் - இதற்கு முன்பு, தத் - அந்தக் கடாக்ஷத்தினுடைய, அலாபத: - கிடைக்காமையினால், நஷ்டம் - நாசமடைந்திருக்கிற, த்ரிபுவநம் - மூன்று லோகமும், ஸம்ப்ரதி - இப்பொழுது, அநந்த - அளவில்லாத, உதயம் - வ்ருத்தியை யுடைத்தானதாக, ரக்ஷ்யதே - ரக்ஷிக்கப்படுகிறது, ஹி - எந்தக் காரணத்தினால் அரவிந்த லோசந - தாமரைப் புஷ்பங்களைப்போன்ற கண்களையுடைய பகவானுடைய, மந: - மனதிற்கு, காந்தா - இஷ்டமான பத்னியாகிய உன்னுடைய, ப்ரஸாதாத்ருதே - அனுக்கிரஹமில்லாமற்போனால், ஸம்ஸ்ருதி - ஐஶ்வர்யங்கள், அக்ஷர - பரிசுத்தமான ஜீவாத்மாவை அனுபவிப்பது, வைஷ்ணவாத்வஸு - பகவானையடையும் மார்க்கம் இவைகளில், ந்ருணாம் - மனிதர்களுக்கு, ஶ்ரேய: - உயர்ந்த ஸுகம், கர்ஹிசித் - ஒருபொழுதும், ந ஸம்பாவ்யதே - ஸம்பவிக்காதோ 3

பா] இப்படி ஸ்தோத்திரம் பண்ணுவதை ஆக்ஷேபித்துக்கொண்டு அதற்கு ஸமாதானம் சொல்லுகிற வ்யாஜத்தினால் ஸ்வாமியாக இருக்கையையும், ஸௌலப்யம் முதலியவற்றையும் நிரூபித்துக்கொண்டு ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பித்தவராய் எல்லோராலும் ஆஶ்ரயிக்கத் தகுந்தவள் என்பதை நிரூபிப்பதற்காக எல்லா ப்ரயோஜனங்களுக்கும் இவள் காரணமென்பதை சில உதாஹரணத்தைக் கொண்டும், சில காரணங்களைக்கொண்டும் நிரூபிக்கிறார்—இந்த ஶ்லோகத்தினால் இவளுடைய அநுக்ரஹத்தின் அல்ப பாகங்கூட அளவில்லாத அநிஷ்டம் நிவ்ருத்திப்பதற்கும் அளவில்லாத க்ஷேமம் உண்டாவதற்கும் காரணம் என்று தெரிவிப்பதற்காக 'ஈஷத்' என்னும் பதம் 'த்வத்' என்னும் பதத்தினால் 1 'ப்ரணிபாத ப்ரஸந்நாஹி', 2 'க்ஷிப்ரம் ப்ரஸாதிநீம் தேவீம்'

---

1 ராமாயணம் ப்ரணிபாத - ஸேவிப்பதினாலேயே, ப்ரஸந்நாஹி - ப்ரஸாதத்தை யுடையவளல்லவா (ஸீதை)

2 ஸ்ரீஸ்தோத்ரம் க்ஷிப்ரம் - சீக்கிரமாக, ப்ரஸாதிநீம் - அனுக்ரஹத்தைச் செய்கிற, தேவீம் - தேவியாகிய உன்னை

என்றிவை முதலிய இடங்களில் சொல்லப்படுகிற ஸ்வபாவம் தெரிவிக்கப்படுகிறது. பொதுவாக லக்ஷ்மியின் அனுக்ரஹம் எப்பொழுதும் உண்டாகியது என்பது மங்கண ஸம்ஹிதையில் 1 ‘பத்மே ஸ்திதா பத்மவர்ணா பத்மநாப ப்ரியா ரமா | ஸதாநுக்ரஹ ஸம்பந்நா ஸா மே தேவீ ப்ரஸீதது ||’ என்றும், லக்ஷ்மீ ஸஹஸ்ரநாமஸ்தோத்ரத்தில் 2 ‘நமாமி கமலாம் க்ஷாந்திம் க்ஷமாம் க்ஷீரோத ஸம்பவாம் | அநுக்ரஹ பராம் அநகாம் நிதிம் ஹரிவல்லபாம் ||’ என்றும் சொல்லப்பட்டது. அநிஷ்டத்தைப் போக்குவதற்கும் இஷ்டத்தைக் கொடுப்பதற்கும் தகுந்ததாகிய கருணையினாலுண்டான பார்வை ‘கருணா நிரீக்ஷண’ என்னப்படுகிறது. அன்றிக்கே கருணையினால் அங்கீகரிப்பது ‘நிரீக்ஷண’ என்னும் பதத்தினால் உபசாரமாகச் சொல்லப்படுகிறதாகவுமாம். இது தத்வஸம்ஹிதையில் 3 ‘ஸாமர்க்யஜுர்மயீம் தேவீம் வேதகர்ப்பாம் மனஸ்விநீம் | லோகேசேசா விபூதீநாம் காரணம் யந்நிரீக்ஷணம் ||’ என்று சொல்லப்பட்டது. அந்த நிரீக்ஷணம் எல்லா வஸ்துக்களையும் உஜ்ஜீவிக்கும்படி செய்வதற்குக் காரணமாகையினால் ‘ஸுதயா’ என்று நிரூபிக்கப்படுகிறது. அந்த அம்ருதத்தினால் ஸந்துக்ஷணமாவது நன்றாக வ்ருத்தியடையும்படி செய்கை. இவ்விடத்தில் ஐந்தாம் வேற்றுமையினால் சொல்லப்படுகிற காரணம் என்பது உதயத்தைக் குறித்தும் ரக்ஷிப்பதைக் குறித்தும் என்று சேர்த்துக்கொள்ளவும். ‘ரக்ஷ்யதே’ என்பதற்கு

---

1 பத்மே - தாமரைப் புஷ்பத்தில், ஸ்திதா - இருக்கிறவளாயும், பத்மவர்ணா - தாமரைப் புஷ்பத்தின் வர்ணத்தையுடையவளாயும், பத்மநாப ப்ரியா - பகவானுக்குப் பத்னியாயும், ரமா - மங்களகரியாயும், ஸதா - எப்பொழுதும், அனுக்ரஹ ஸம்பந்நா - அனுக்ரஹத்தினால் நிறைந்தவளாயுமிருக்கிற, ஸா - அந்த, தேவீ - லக்ஷ்மீ, மே - எனக்கு, ப்ரஸீதது - அநுக்ரஹம் செய்யவேண்டும்.

2 க்ஷாந்திம் - பொறுமையாயும், க்ஷமாம் - பூமியாயும், க்ஷீரோதஸம்பவாம் - க்ஷீர ஸமுத்திரத்தில் உண்டானவளாயும், அநுக்ரஹபராம் - அனுக்ரஹம் செய்வதையே ஸ்வபாவமாக உடையவளாயும், அநகாம் - தோஷமில்லாத நிதிம் - ஸம்பத்தாயும், ஹரிவல்லபாம் - பகவானுக்குப் பத்னியாயுமிருக்கிற, கமலாம் - லக்ஷ்மியை, நமாமி - ஸேவிக்கிறேன்.

3 லோகேசேசா விபூதீநாம் - லோகபாலகர்களினுடைய ஐச்வர்யத்திற்கு, யந்நிரீக்ஷணம் - எந்த லக்ஷ்மியின் கடாக்ஷம், காரணம் - காரணமோ (அப்படிப்பட்டவளாயும்), ஸாமர்க்யஜுர்மயீம் - ஸாமவேதம், ருக்வேதம், யஜுர்வேதம், இவைகளின் ஸ்வரூபமாயுமிருக்கிற, வேதகர்ப்பாம் - வேதத்தை உள்ளேயுடையவளாயும், மனஸ்விநீம் - விசாலமான மனதையுடையவளுமாயுமிருக்கிற, தேவீம் - லக்ஷ்மியை (ஸேவிக்கிறேன்)

ஒருவித உபத்திரவமில்லாமலும் ஸ்தாபிக்கப்படுகிறது என்றர்த்தம். த்வயா—நீ உபேக்ஷை செய்தகாலத்தில், ததபாங்கை:—உன்னுடைய கடாக்ஷம் இல்லாததினால், உன்னுடைய கோபத்தினாலல்ல 1 'கஸ்ய குப்யேத் வாநரோத்தம:' என்று சொல்லுகிற உனக்குக் கோபம் ஸம்பவிக்காததாகையினால் 'த்ரிபுவநம்' என்னும் பதத்தினால் மூன்றுலோகங்களிலுமிருக்கிற ஜீவாத்மாக்கள் லக்ஷணையாகச் சொல்லப்படுகின்றார்கள் ஸாம்ப்ரதம்— 2 'ததோऽவலோகிதா தேவா:' என்று சொல்லப்பட்ட உன் கடாக்ஷம் உண்டாகும்பொழுது, அநந்தாதிகம்—முன்பிருந்ததைவிட அதிகமான வருத்தியையுடையதாக, என்றர்த்தம் இதெல்லாம் இந்திரனால் 3 'த்வயா தேவி பரித்யக்தம் ஸகலம் புவநத்ரயம்। விநஷ்டப்ராயமபவத் த்வயேதாநீம் ஸமேதிதம்॥' என்று சொல்லப்பட்டது இவ்விடத்தில் ப்ரளயம் முதலியது சொல்லப்படுகிறதென்று சிலர் வ்யாக்யானம் செய்கிறார்கள் இப்படி இவள் கடாக்ஷம் இருக்கும் பொழுது வருத்தி உண்டாகிறது, கடாக்ஷம் இல்லாவிடில் வருத்தி இல்லை என்பதினால் லக்ஷ்மியினுடைய கடாக்ஷத்திற்கு வசப்பட்டது தேவதை முதலியவர்களினுடைய ஐச்வர்யம் என்று காட்டப்பட்டது. இப்படியே காச்யபர் 4 'ப்ரஹ்மாத்யாச்ச ஸுராஸ்ஸர்வே முநயச்ச தபோதநா:। ஏதந்தே த்வத்பதச்சாயாமாச்ரித்ய கமலேச்வரி॥' என்றும், மங்கணஸம்ஹிதையில் எட்டுதிக்பாலகர்களும் லக்ஷ்மியைப் பூஜையைச் செய்துகொண்டிருக்கிறார்களென்பதும் இவளுக்கு வசப்பட்ட ஐச்வர்யத்தை யுடையவர்களென்பதும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. அவ்விடத்தில் கண்டறிந்துகொள்க. கீழ்ச்சொல்லியதை ஸ்தாபிக்கிற வ்யாஜத்தினால் எல்லா ப்ரயோஜனங்களும் லக்ஷ்மியின

---

1 ராமாயணம் வாநரோத்தம - வாநரச்ரேஷ்டனான ஹநுமானே, க-யார், குப்யேத - கோபித்துக்கொள்ளக்கடவன்

2 தத:-பிறகு, அவலோகிதா -(லக்ஷ்மியினால்) கடாக்ஷிக்கப்பட்ட, தேவா:- தேவதைகள் (தங்கள் தங்கள் ஐச்வர்யங்களை அடைந்தார்கள்).

3 விஷ்ணுபுராணம் தேவி-ஓ! லக்ஷ்மியே, த்வயா-உன்னால், பரித்யக்தம்-விடப்பட்ட, ஸகலம் - எல்லா, புவநத்ரயம் - மூன்று லோகங்களும், விநஷ்டப்ராயம் - நாசமடைந்ததைப்போல, அபவத்-ஆனது, த்வயா - உன்னால், இதாநீம் - இப்பொழுது, ஸமேதிதம் - வருத்திசெய்யப்பட்டது

4 கமலேச்வரீ - ஓ! லக்ஷ்மியே, ப்ரமமாத்யா - ப்ரம்மா முதலிய, ஸர்வே- எல்லா, ஸுரா -தேவதைகளும், தபோதநா -தபஸ்ஸையே பணமாகவுடைய, முநயச்ச - ருஷிகளும், த்வத்பதச்சாயாம் - உன்னுடைய திருவடியின் நிழலை, ஆச்ரித்ய-அடைந்து, ஏதந்தே - வருத்தி அடைகிறார்கள்

அனுகாஹத்திறகு வசப்பட்டவைகள் என்று சொல்லுகிறா— 'ஶ்ரிய:' என்றாரம்பித்து இவ்விடத்தில் உன்னுடைய அனுக்ரஹம் இல்லாவிடில் என்று சொல்லவேண்டியிருக்க 'ஸ்வாமீ தேவ நாத:காந்தா ஹ்ருஸ்வாஹாஸுதே' என்று சொல்லியிருப்பது அப்படிப்பட்ட அதிகமான ப்ரஸித்தியைத் தெரிவிப்பதற்காக. 'ஸ்வாமீ தேவ நாத:' என்னும் பதத்தினால் 1 'யம் ஸ்ரேய மதுஸூதந:' என்றிவை முதலிய இடங்களில் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட லக்ஷ்மீபதியும் அனுக்ரஹம் செய்வதையே ஸ்வபாவமாக வுடையவன் என்பது தெரிவிக்கப்படுகிறது அவனுடைய மனதிற்கு இஷ்டமான பத்னி என்று சொல்லியிருப்பது எல்லா இஷ்டபலங்களைக் கொடுப்பதில் அவ்விருவர்களும் ஒரே அபிப்ராயத்தை யுடையவர்கள் என்பதைத் தெரிவிக்கிறது. இவ்விடத்தில் 'நாத:' என்னும் பதம் ஜ்ஞானத்தில் உபசாரமாகச் சொல்லப்பட்டது. ஏனெனில் பகவானுக்கு இந்த்ரியங்களுக்கு வசப்பட்ட ஜ்ஞானத்தை உடையவனாயிருக்கும் தன்மை இல்லாமையினால் 'நாத: காந்தா' என்பதற்கு அந்தப் பகவானுக்கு மிகவும் ப்ரியமானவள் என்றர்த்தம் இதற்கு முன் 'காந்தஸ்தே (உனக்கு அவன் ப்ரியனான பர்த்தா)' என்று சொல்லப்பட்டது இவ்விடத்திலோவெனில் பகவானுக்கு இவள் இஷ்டமான பார்யை என்று சொல்லப்படுகிறது இத்தால் ஒருவர்க்கொருவர் அநுகூலமாயிருப்பதினால் எல்லா வ்யாபாரத்திலும் இவ்விருவர்களும் ஸமமான அபிப்ராயத்தை உடையவர்களென்பது தெரிவிக்கப்படுகிறது 'ஹ்ருஸ்வாஹாஸுதே' என்பதற்கு விசேஷமான கருணை இல்லாவிடில் என்றர்த்தம் ஏனெனில் இவர்களுக்கு ஓரிடத்திலும் நிக்ரஹம் ஸம்பவிக்காதாகையினால் நிக்ரஹம் நிவ்ருத்திப்பதாகிய ப்ரஸாதம் என்று சொல்லுவது பொருந்தாது 'ஸம்ஸ்ருதி' என்னும் பதம் இவ்விடத்தில் ப்ரயோஜனங்களைச் சொல்லுகிற பதங்களோடு சேர்த்துச் சொல்லப்பட்டிருப்பதினாலும் மற்ற ப்ரயோஜனங்கள் மற்றப் பதங்களினால் சொல்லப்பட்டிருப்பதினாலும் ஐஶ்வர்யத்தைச் சொல்லுகிறது. இத்தால் தர்மார்த்தகாமங்களாகிற மூன்று ப்ரயோஜனங்களுக்குள்ளடங்கிய எல்லா இஷ்டபலமும் சொல்லப்பட்டது. 'அக்ஷர' என்னும் பதம் ஜீவாத்மாவின் அனுபவத்தைச் சொல்லுகிறது 'வைஷ்ணவாய' என்னும் பதத்தினால் அர்ச்சிராதிகதியின் வழியாகப் பகவானை அடைவது லக்ஷணை

1 மதுஸூதந:-பகவான், யம் - எவனை, பஶ்யேத் - பார்ப்பாரோ (அவன் ஸாத்விகனாவான்)

யாகச் சொல்லப்படுகிறது. இவைகளில் 'ஶ்ரேய:' (உயர்ந்த ஸுகம்) அந்த ஸுகத்திற்கு உபாயமாகவுமாம். [1] 'புண்யஶ்ரேயஸீ ஸுக்ருதம் வ்ருஷம்' என்றல்லவோ நிகண்டுவில் சொல்லுகிறார்கள். 'ந்ருணாம்' என்பது எல்லா ஜீவாத்மாக்களையும் குறிக்கிறது. ப்ரம்மாவும் அவளாலுண்டாக்கப்பட்ட ஐஶ்வர்யத்தை யுடையவரென்பது ப்ராம்ம புராணத்தில் [2] 'பத்மயோநி ரிதம் ப்ராப்ய படந் ஸ்தோத்ரமித: க்ரமாத் । திவ்யம் அஷ்டகுணைஶ்வர்யம் தத்ப்ரஸாதாதவாப்தவாந் ॥' என்று சொல்லப்பட்டது.

3 ப்ரஹ்மாதீநாம் யதாயத்தம் வைபவம் யஸ்ய ஸா ஸ்வயம் ।
தஸ்ய கைமுத்ய நிர்ணேயம் ஈஶ்வரத்வம் ஶ்ரிய:பதே: ॥

இவளுடைய அனுக்ரஹமில்லாவிட்டால் ஜீவாத்மாக்களுக்கு ஸுகம் ஸம்பவிக்கிறதில்லையல்லவா என்று சொல்லியிருப்பதினால் அக்னி இந்திரன் முதலியவர்களினால் கொடுக்கப்பட்ட ஜீவாத்மாக்களின் ஸுகமும் இவளுக்கு வசப்பட்டதென்று தெரிவிக்கப்படுகிறது. 'ஹி' என்னும் பதத்தினால் ஸ்ரீஸூக்தம், ஸ்ரீஸ்துதி, முதலிய எல்லா ஶாஸ்த்ரங்களிலும் ப்ரஸித்தமாயிருக்கிறதென்பது ப்ரகாசம் செய்யப்படுகிறது. 'ந ஸம்ஹாவ்யதே' என்பதற்கு ஸித்திக்கிறதில்லை என்றர்த்தம். இப்படிப்பட்ட இந்த லக்ஷ்மியின் அனுக்ரஹம் இந்திரன் முதலிய தேவதைகளினுடைய அனுக்ரஹத்தைப்போல காலங்களின் வ்யத்யாஸத்தினால் மாறுதலை அடையக்கூடியதல்ல என்று தெரிவிப்பதற்காக 'க்ஷஹிடுவிக்ஷ்' என்று சொல்லப்பட்டது. மோக்ஷத்தைக் கொடுக்கும் தன்மை பகவானுக்கே உண்டென்று எல்லா ஶாஸ்த்ரங்களிலும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீஸாத்வதஸம்ஹிதையிலும் தனக்கு மோ

1 நிகண்டு

2 பத்மயோநி - ப்ரம்மா, இதம் - இந்த, ஸ்தோத்ரம் - ஸ்தோத்திரத்தை, ப்ராப்ய - அடைந்து, தத:- பிறகு, க்ரமாத் — க்ரமமாக, படந் - படித்துக்கொண்டிருந்து, தத்ப்ரஸாதாத் - அந்த லக்ஷ்மியின் கடாக்ஷத்தினால், திவ்யம் - உத்தமமான, அஷ்டகுணைஶ்வர்யம் - எட்டுமடங்கதிகமான ஐஶ்வர்யத்தை, ப்ராப்தவாந் - அடைந்தார்

3 ப்ரம்மாதீனும் - ப்ரம்மா முதலியவர்களினுடைய, வைபவம் - ஐஶ்வர்யம், யதாயத்தம் - எவளுக்கு வசப்பட்டதோ, ஸா - அந்த லக்ஷ்மீ, ஸ்வயம் - தானே, யஸ்ய - எவனுடைய (பத்னியோ), தஸ்ய - அந்த, ஶ்ரிய:பதே - லக்ஷ்மீ காந்தனுக்கு, ஈஶ்வரத்வம் - ஈஶ்வரனாயிருக்கும் தன்மை, கைமுத்ய நிர்ணேயம் - கைமுதிக ந்யாயத்தினாலே நிஶ்சயிக்கத் தகுந்தது.

க்ஷத்தைக் கொடுக்கும் தன்மை உண்டென்றும் தேவதைகளுக்கு ஐஶ்வர்யத்தைக் கொடுக்கும் தன்மை உண்டென்றும் பிரித்துச் சொல்லப்பட்டது. அப்படி இருக்க இவ்விடத்தில் 'ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாயுஷாம்' என்று பொதுவாகச் சொல்லியிருப்பது ஸ்தோத்திரம் செய்வதற்காக மாத்திரம் இருக்கலாம் என்னில் அது உசிதமல்ல. ஸ்ரீஸாத்வத ஸம்ஹிதையிலேயே 1 'யாமாலம்ப்ய ஸுகேனேமம் துஸ்தரம் ஹி குணோதயிம் । நிஸ்தரந்த்யசிரேணைவ வ்யக்த த்யானபராயணா:॥' என்று ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமாகிய குணங்களாகிய ஸமுத்திரத்தைத் தாண்டுவதற்குக் காரணமாக லக்ஷ்மியை ஆஶ்ரயிப்பது காரணமாய்ச் சொல்லப்படுகிற படியினாலே பரமமாவினாலும் 2 'ஸர்வகாமப்ரதாம் ரம்யாம் ஸம்ஸாரார்ணவதாரிணீம் । க்ஷிப்ர ப்ரஸாதினீம் லக்ஷ்மீம் ஶரண்யாமனுசிந்தயேத் ॥' என்று சொல்லப்பட்டது. பாத்ம புராணத்தில் அவளுடைய பெயர்கள் 3 'ஸக்ருத் விபாதா ஸர்வார்த்த ஸமுத்ர பரிஶோஷிணீ', 'பவ பங்கப ஹாரிணீ', 'பரநிர்வாணதாயினீ', 'ஜ்யோதிஷ்டித்யு த்தாவஹா', என்றிவை முதலியவைகள் சொல்லப்படுகின்றன. விஷ்ணு புராணத்திலும் 4 'ஆத்மவித்யா ச தேவி த்வம் விமுக்தி பலதாயினீ' என்று சொல்லப்பட்டது. இவ்விடத்தில் 'விமுக்தி பலதாயினீ' என்பது ஆத்ம வித்யைக்கு விஶேஷ

---

1 வ்யக்த த்யானபராயணா—வ்யக்தமான ரூபத்தை த்யானம் செய்வதையே தங்களுக்கு உபாயமாக அடைந்திருப்பவர்கள், யாம - எந்த லக்ஷ்மியை, ஆலம்ப்ய-ஆஶ்ரயித்து, துஸ்தரம் - மற்றவர்களினால் தாண்டமுடியாத, இமம் - இந்த, குணோததிம் - ஸத்வரஜஸ்தமோ குணங்களாகிற ஸமுத்திரத்தை, ஸுகேந-ஸுகமாக, அசிரேணைவ - சீக்கிரத்திலேயே, நிஸ்தரந்தி - தாண்டுகிறார்களோ

2 பாத்மபுராணம் ஸர்வகாம ப்ரதாம் - எல்லா இஷ்டங்களேயும் கொடுக்கிறவளாயும், ரம்யாம் - ஸௌந்தர்யமுள்ளவளாயும், ஸம்ஸாரார்ணவதாரிணீம்—ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தைத் தாண்டுவிப்பவளாயும், க்ஷிப்ரப்ரஸாதினீம் - சீக்கிரத்தில் அனுக்ரஹத்தைச் செய்பவளாயுமிருக்கிற, லக்ஷ்மீம் - லக்ஷ்மியை, ஶரண்யாம் - ஆஶ்ரயிக்கத்தக்கவளாக, அனுசிந்தயேத் - நினைக்கவேண்டும்

3 ஸக்ருத்விபாதா- ஒருதரம் ப்ரகாசித்தவளாய், ஸர்வார்த்த ஸமுத்ர பரிஶோஷிணீ - எல்லாத் துக்கங்களாகிற ஸமுத்திரத்தை வற்றும்படி செய்பவள், பவ பங்க பஹாரிணீ - ஸம்ஸாரத்தினாலுண்டாகிய அவமானத்தைப் போக்கடிப்பவள், பரநிர்வாணதாயினீ - மேலான மோக்ஷத்தைக் கொடுக்கிறவள், ஜ்யோதிஷ்டித்-ப்ரகாசத்தையுடையவள், அம்ருதாவஹா - மோக்ஷத்தைக் கொடுப்பவள்

4 தேவி - ஓ தேவியே, த்வம் - நீ, விமுக்திபலதாயினீ- மோக்ஷமாகிற பலத்தைக் கொடுக்கிற, ஆத்மவித்யா - ஆத்மாவைப்பற்றிய வித்யை.

ணமாக இருந்த போதிலும் அப்படிப்பட்ட ஆத்ம வித்யை லக்ஷ்மிக்கு வசப்பட்டதென்று சொல்லி இருப்பதினால் ப்ரஸ்தாவித்திருக்கும் அர்த்தம் உண்டாகிறது. மோக்ஷத்திற்குக் காரணமாகிய ஆத்ம குணங்கள் ஸித்திப்பதும் அந்த லக்ஷ்மிக்கு வசப்பட்டதென்று அந்தந்த இடங்களில் சொல்லப்பட்டது. இப்படி இருக்கக் கத்யத்தின் ஆரம்பத்தில் சொல்லி யிருக்கிற ந்யாயத்தினால் மோக்ஷத்தின் உபாயம், அதில் அதிகாரம், இவைகள் இந்த லக்ஷ்மியைக் காரணமாக வுடையவைகள் என்பது இல்லையென்று மறுக்கமுடியாது, மோக்ஷத்தைக் கொடுக்கிற பகவானிடத்தில் மோக்ஷத்திலாசை யுடையவர்களுக்குப் புருஷகாரமாக இருந்து சேர்க்கிறவளா யிருக்கிறாள் என்பதும் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. பரிபூர்ணாநுபவத்தைக் கொடுக்கிற ஸங்கல்பமோ வெனில் பகவான் தானே செய்கிறாரோ, பத்னியோடு கூடிச் செய்கிறாரோ என்பது ப்ரமாணத்தை அநுஸரித்து இருக்கட்டும். எவ்விதத்திலும் மோக்ஷத்தை அடைவதில் ஸுகத்தை லக்ஷ்மீ கொடுக்கிறாள் என்று இவ்விடத்தில் சொல்லப்படுகிறது விருத்தமல்ல 3



𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌨𑌨𑍍𑌤 𑌮𑌹𑌾 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿 𑌪𑌰𑌮𑌂
𑌯𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌰𑍂𑌪𑌂 𑌹𑌰𑍇𑌰𑍍𑌮𑍂𑌰𑍍𑌤𑌂
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌤𑍋𑌽𑌪𑌿 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌿𑌯𑌤𑌰𑌂
𑌰𑍂𑌪𑌂 𑌯𑌦𑌤𑍍𑌯𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 ।
𑌯𑌾𑌨𑍍𑌯𑌨𑍍𑌯𑌾𑌨𑌿 𑌯𑌥𑌾 𑌸𑍁𑌖𑌂 𑌵𑌿𑌹𑌰𑌤𑍋
𑌰𑍂𑌪𑌾𑌣𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌤𑌾
𑌨𑍍𑌯𑌾𑌹𑍁𑌃 𑌸𑍍𑌵𑍈𑌰𑌨𑍁𑌰𑍂𑌪𑌰𑍂𑌪
𑌵𑌿𑌭𑌵𑍈𑌰𑍍𑌗𑌾𑌢𑍋𑌪𑌗𑍂𑌢𑌾𑌨𑌿 𑌤𑍇 ॥ 4

சாந்தாநந்த மஹா விபூதி பரமம் யத் ப்ரம்ம ரூபம் ஹரே மூர்த்தம்
ப்ரம்ம ததோபி தத் ப்ரியதரம் ரூபம் யதத்யத்புதம் |
யாந்யந்யாநி யதா ஸுகம் விஹரதோ ரூபாணி ஸர்வாணிதா
ந்யாஹு ஸ்வைரநுரூப ரூப விபவைர் காடோப கூடாநி தே.

ஸ்ரீ ஆளவந்தாரருளிச்செய்த ஸ்ரீ சதுஶ்லோகீ முற்றிற்று.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே ஶரணம்.

---

ப - ரை] 𑌶𑌾𑌨𑍍𑌤 - விகாரங்கள் ஒன்றுமில்லாத, 𑌅𑌨𑌨𑍍𑌤 - அளவில்லாத, 𑌮𑌹𑌾𑌵𑌿𑌭𑍂𑌤𑌿 - பெரிய விபூதிகளையுடைய, 𑌪𑌰𑌮𑌂 - எல்லா வஸ்

துக்களையும் விடமேலான, ப்ருஹ-ப்ரம்மமென்று சொல்லபபடுகிற, யத் - எந்த, ஹரே:-விஷ்ணுவினுடைய, ரூபம்-ஸ்வரூபமோ, தஸ்மாதபி அந்த ஸ்வரூபத்தைவிட, தத் ப்ரியதரம் - அந்தப பகவானுககு மிகவும் பரியமாகிய, அத்யூர்ஜிதம் - மிகவும் ஆஶ்சர்யமான, ஸாங்கம்-அவ யவங்களோடு கூடிய, ப்ருஹ - பரமமமென்று சொல்லப்படுகிற, யத் - எந்த, ரூபம் - விக்ரஹமோ, அதாவது பரவாஸுதேவ விக்ரஹமோ, யதாஸுகம் - ஸுகமாக, விஹரத: - விளையாடுகிற அந்தப் பகவானு டைய, அந்யாநி - வேறு, யாநி - எந்த, ரூபாணி - அவதார விக்ர ஹஙகளோ, ஸர்வாணி - எல்லா, தாநி - அவைகளும், தே - உன னுடைய, ஸ்வை: - அஸாதாரணங்களாகிய, அநுரூபை: - அனு குணஙகளாகிய, ரூப - ஸ்வரூபம் முதலியவைகளாகிற விபவை:- ஸம்பத்துககளினால், காடம் ரூபாநி - நெருக்கமாகச சோந்திருக் கின்றன, அதாவது ஸம்பந்தபபட்டிருக்கின்றன 4

*பா] இபபடி மூன்று ஶ்லோகஙகளில் சொலலபபட்ட பத்னிககுப பகவானுடைய ஸவரூபம, விக்ரஹம, அவதாரஙகள, இவைகளில ஒரு பொழுதும பிரிவிலலாத சோததியைச சொலலிககொண்டு இவளும பர தானமாக அடையவேண்டிய பரயோஜனம எனபதைத தெரிவிக்கி றா—இந்த ஶ்லோகத்தினால 'ஶாந்த' எனபதறகு பசி, தாகம, முத லிய ஷடூர்மிகளோடும, குறைதலமுதலிய மாறுதலகளோடும எப்பொழு தும ஸமபந்தபபடாதது எனறு தாதபர்யம 'அநந்த' என்பதற்கு 1 மூனறுவிதமான அளவுகளும இலலாதது எனறாததம 'த்ரிவி ஹூதி (த்ரேதா விபூதி யஸ்ய தத்)' எனபதறகு சுததமாயும அசுததமாயுமிருககிற இரண்டுவிதமான பெரியதாகிய விபூதிகளையுடை யது எனறாததம 'ஸாரம்' எலலாவறறையும விட மேலானது 'யத்' எனனும பதம எலலா உபநிஷததுககளிலும பரஸிததமென்பதைத தெரிவிககிறது. 'ப்ருஹ' எனபதறகு எலலையிலலாத பெருமையையும அயலாருககுபபெருமையைஉணடாககூந தனமையையுமஉடையது 'ரூ பம்'எனபதறகு ஸ்வரூபம எனறாத்தம ஆகையினாலே பிரிததுசசொலலி இருபபதும இவவிடத்தில பொருதத முடையதாகிறது 'ஹரே:' என்ப தறகுத தன்னை ஆஶ்ரயிததவாகளினுடைய தோஷஙகளைப போக்குகிற பகவானுடைய எனறாததம அன்றிககே எலலாவற்றையும ஸமஹாரம் செய்கிற பகவானுடைய எனறாததமாகவுமாம் இபபடியே புராணத்*

1 மூன்றுவித அளவு எனபது - காலததினாலும், தேசத்தினாலும், வஸது வினாலும

நாராயணனே ஸத்வகுணத்தை ப்ரவருத்திக்கும்படி செய்கிறவன் என்பதும், ப்ருமமா, ருத்திரன், இவர்கள் ரஜோகுணத்தையும் தமோகுணத்தையும் ப்ரவருத்திக்கும்படி செய்கிறவர்கள் என்பதும் ஶ்ருதி முதலியவைகளில் ப்ரஸித்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படி எனனில் மைத்ராணீயோபநிஷத்தில் ‘பிறகு இந்த பரமமசாரியின் ரஜோகுணம் மேலிட்ட பாகம் எதுவோ அது இந்த ப்ரஸித்தனாகிய ப்ருமமா, பிறகு இந்த பரமமசாரியின் ஸத்வகுணம் மேலிட்ட பாகம் எதுவோ அது இந்த ப்ரஸித்தனாகிய விஷ்ணு, பிறகு இந்த பரமமசாரியின் தமோகுணம் மேலிட்ட பாகம் எதுவோ அது ருத்திரன்’ என்றாரத்தமுள்ள வாக்யம் சொல்லப்பட்டிருக்கிறது. வராஹ புராணத்தில் அகஸ்த்ய ருத்திர ஸம்வாதத்தில் ருத்திரன் சொன்னதாக 1 ‘𑌯𑌤𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌸 𑌹𑌰𑌿𑌰𑍍𑌦𑍇𑌵𑍋 𑌯𑍋 𑌹𑌰𑌿𑌸𑍍𑌤𑌤𑍍𑌪𑌰𑌂 𑌪𑌦𑌮𑍍 । 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑌶𑍍𑌚𑍇𑌤𑌿 𑌤𑍍𑌰𑌿𑌤𑌯𑌂 𑌚𑍈𑌤𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌜𑌨𑍍𑌤𑍁𑌃 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑍍 । 𑌰𑌜𑌸𑌾 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌯𑍁𑌕𑍍𑌤𑍇𑌨 𑌭𑌵𑍇𑌚𑍍𑌛𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 𑌯𑌶𑍋𑌧𑌿𑌕𑌃 ॥ 𑌤𑌚𑍍𑌚 𑌪𑍈𑌤𑌾𑌮𑌹𑌂 𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌷𑍁 𑌪𑌠𑍍𑌯𑌤𑍇 । 𑌯𑌦𑍍𑌵𑍇𑌦𑌬𑌾𑌹𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌮𑌾𑌮𑍁𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯𑍋𑌪𑌸𑍇𑌵𑍍𑌯𑌤𑍇 ॥ 𑌤𑌦𑍍𑌰𑍌𑌦𑍍𑌰𑌮𑌿𑌤𑌿 𑌵𑌿𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌕𑌨𑌿𑌷𑍍𑌠𑌗𑌤𑌿𑌦𑌂 𑌨𑍃𑌣𑌾𑌮𑍍 । 𑌯𑌦𑍍𑌧𑍀𑌨𑌤𑌪𑌸𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌤𑌾𑌮𑌸𑌂 𑌤𑍁 𑌯𑌤𑍍 ॥ 𑌤𑌦𑍍𑌦𑍁𑌰𑍍𑌗𑌤𑌿𑌪𑍍𑌰𑌦𑌂 𑌨𑍃𑌣𑌾𑌮𑍍 𑌇𑌹𑌲𑍋𑌕𑍇

---

1 யத் - எது, ஸத்வம் - ஸத்வகுணமோ, ஸ - அவன், தேவ - தேவனாகிய, ஹரி - விஷ்ணு, ய:-எவன், ஹரி -விஷ்ணுவோ, தத்-அது, பரமபதம் - முக்கியமான ப்ரயோஜனம், ஸத்வம்ரஜஸ்தமஶ்சேதி-ஸத்வம்ரஜஸ்தமஸ்என்கிற, த்ருதயம்-மூன்றும் சேர்ந்ததாக, உச்யதே - சொல்லப்படுகிறது, ஜந்து -ப்ராணியானவன், ஸத்வேந-ஸத்வ குணத்தினால், மு்ச்யதே-மோக்ஷத்தை யடைகிறான், ஸத்வம்-ஸத்வ குணமானது, நாராயணாத்மகம் -நாராயணஸ்வரூபம், ஸத்வயுக்தேன - ஸத்வ குணத்தோடு சேர்ந்த, ரஜஸா-ரஜோகுணத்தினால், ஸ்ரீமான் - ஸம்பத்தையுடையவனாயும், யஶோதிக -யஶஸ்ஸினால் மேற்பட்டவனாகவும், பவேத்-ஆவான், தச்ச - அதுவும், பைதாமஹம் - ப்ருமமாவினுடைய, வ்ருத்தம் - நடத்தையாக, ஸர்வ ஶாஸ்த்ரேஷு - எல்லா ஶாஸ்த்ரங்களிலும், பட்யதே-சொல்லப்படுகிறது, யத் - எந்த, கர்ம - கர்மமானது, வேதபாஹ்யம் - வேதத்திற்கு வெளிப்பட்டதாக, ஸ்யாத் - இருக்குமோ, மாமுத்திஶ்ய - என்னைக் குறித்து, உபஸேவ்யதே - செய்யப்படுகிறதோ, தத் - அது, ரௌத்ரமிதி-ரௌத்ர மென்று, விக்யாதம் - ப்ரஸித்தி யடைந்தது, ந்ருணாம் - மனிதர்களுக்கு, கனிஷ்ட கதிதம்-தாழ்ந்தகதியைக் கொடுக்கிறது, யத் - எது, ஹீநதபஸா-குறைந்த தபஸ்ஸோடு, யுக்தம் -சேர்ந்ததோ, யத்-எது, கேவலம் தாமஸம் - கேவலம் தமோகுணம் மேலிட்டதோ, தத் - அது, ந்ருணாம் - மனிதர்களுக்கு, இஹலோகே - இந்த லோகத்திலும், பரத்ர ச-பரலோகத்திலும், துர்கதி ப்ரதம் - கெட்டகதியைக் கொடுக்கிறது.

வாஸ்துவ' என்று சொல்லப்பட்டது லிங்கபுராணத்தில் பதிநாலாவது அத்யாயத்தில் 1 'ஹிரண்யகர்போ ரஜஸா தமஸா ஶங்கர: ஸ்வயம் | ஸத்த்வேந ஸர்வகோ விஷ்ணு: ஸர்வாத்மா ஸத்த்வமய: ||' என்றும், இருபத்திநாலாவது அத்யாயத்தில் 2 'த்வத் கோப ஸம்பவோ ருத்ர: தமஸா ச ஸமாவ்ருத: | த்வத்ப்ரஸாதாஜ் ஜகத்தாதா ரஜஸா ச பிதாமஹ: | த்வத் ஸ்வரூபாத் ஸ்வயம் விஷ்ணு: ஸத்த்வேந புருஷோத்தம: ||' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு அடுத்த அத்யாயத்திலும் நந்திகேஶ்வரர் சொன்னதாக 3 'பரமாத்மாநமீஶாநம் தமஸா ருத்ரரூபிணம் | ரஜஸா ஸர்வலோகாநாம் ஸர்கலீலாப்ரவர்த்தகம் || ஸத்த்வேந ஸர்வபூதாநாம் ஸ்தாபகம் பரமேஶ்வரம் | ஸர்வாத்மாநம் மஹாத்மாநம் பரமாத்மாநமீஶ்வரம் || தம் த்ருஷ்ட்வா ப்ரஹ்மா ப்ராஹ ச பகவந்தம் ஜநார்த்தநம் |' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியே மற்றப் புராணங்களிலும் சொல்லப்பட

1 ரஜஸா - ரஜோகுணத்தினால், ஹிரண்யகர்ப்ப - ப்ருஹ்மாவும், சங்கர: - ருத்திரன், ஸ்வயம் - தான், தமஸா - தமோ குணத்தினாலும், ஸத்வேன - ஸத்வகுணத்தினால், ஸர்வக - எல்லா இடத்திலும் நிறைந்திருக்கிற, ஸர்வாத்மா - எல்லாவற்றிற்கு ஆத்மாவாகிய, ஸத்வமய: - ஸத்வஸ்வரூபியாகிய, விஷ்ணு: - விஷ்ணுவும் (வ்யாபரிக்கப்பட்டிருக்கிறார்கள்)

2 புருஷோத்தம-ஓ! புருஷோத்தமனே, த்வத்கோப ஸம்பவ - உம்முடைய கோபத்தினாலுண்டாகிய, ருத்ர - ருத்திரன், தமஸா - தமோ குணத்தினாலும், ஸமாவ்ருத - வ்யாபரிக்கப்பட்டவர், த்வத் ப்ரஸாதாத் - உம்முடைய அனுக்ரஹத்தினால், ஜகத்தாதா - லோகங்களை ஸ்ருஷ்டிப்பவராகிய, பிதாமஹ - ப்ருஹ்மா, ரஜஸா - ரஜோகுணத்தினால் (வ்யாபரிக்கப்பட்டவர்), த்வத் ஸ்வரூபாத் - உம்முடைய ஸ்வரூபத்திலிருந்து, ஸ்வயம் - நீரே, விஷ்ணு - விஷ்ணுவாக, ஸத்வேந - ஸத்துவ குணத்தினால் (வ்யாபரிக்கப்பட்டிருக்கிறீர்)

3 பரமாத்மானம் - பரமாத்மாவாயும், தமஸா - தமோகுணத்தினால், ருத்ரரூபிணம் - ருத்திர ரூபத்தையுடையவராகவும், ஈஶானம் - ஈஶ்வரனாயுமிருக்கிற ரஜஸா - ரஜோ குணத்தினால், ஸர்வலோகானாம் - எல்லா லோகங்களினுடையவும் ஸர்கலீலா ப்ரவர்த்தகம் - ஸ்ருஷ்டிப்பதாகிய லீலையைச் செய்துகொண்டவராயுமிருக்கிற, ஸத்வேந - ஸத்துவ குணத்தினால், ஸர்வபூதானாம் - எல்லா ப்ராணிகளுக்கும், ஸ்தாபகம் - ரக்ஷிப்பவராயும், பரமேஶ்வரம் - நியமிப்பவராயுமிருக்கிற, ஸர்வாத்மானம் - எல்லாவற்றிற்கு ஆத்மாவாயிருக்கிற, மஹாத்மானம்-மஹாத்மாவாயிருக்கிற, பரமாத்மானம் - தனக்கு மேற்பட்ட ஆத்மா இல்லாதவனாயிருக்கிற, ஈஶ்வரம் - ஈஶ்வரனாகிய, தம்-அந்த, பகவந்தம்-பகவானாகிய, ஜனார்த்தனம் - விஷ்ணுவை, த்ருஷ்ட்வா - பார்த்து, ப்ருஹ்மா-ப்ருஹ்மாவானவர், ப்ராஹ - சொன்னார்.

டிருக்கிறது. பாஞ்சராத்திர ஶாஸ்த்ரங்களிலும் 1 'ஸாத்விகை: ஸேவ்யதே விஷ்ணு: தாமஸைரேவ ஶங்கர: । ராஜஸை: ஸேவ்யதே ப்ரஹ்மா ஸங்கீர்ணை: ஸரஸ்வதீ ॥' என்றிவை முதலிய வசனங்களும் அறியத்தக்கது எல்லாவற்றிற்கும் பொதுவாகிய ஶில்ப ஶாஸ்த்ரத்திலும் மூன்றுவிதமான விமானங்களுக்கு லக்ஷணம் சொல்லும் பொழுது 2 'ஸ்யாந்நாகர த்ராவிட வேஸராணாம் க்ரமேண ஸத்வாத்ய ரஜஸ்தமாம்ஸி । மஹீஸுரோர்வீபதி வைஶ்யகாஸ்தே ஹரிர் விதாதா ஹர அதிதேவா: ॥' என்று சொல்லப்பட்டது அதுவுமன்றிகே இவ்விடத்தில் பரமஸத்வம் என்று 'ஸமஸ்த ஹேய ரஹிதம் ஶுத்த ஸத்வைக லக்ஷணம்' என்று சொல்லப்பட்ட ஶுத்த ஸத்வகுணமுடையதாயும் ப்ரக்ருதி ஸம்பந்தமற்றதாயுமிருக்கிற வஸ்து சொல்லப்படுகிறதாகவுமாம் இத்தால் ப்ரும்மா ருத்திரன் முதலியவர்களுக்கு கண்டறியக்கூடாத ரஹஸ்யமாயும் பாஞ்சராத்திரம் முதலிய ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுகிற மிகவும் ஆநந்த மயமான திவ்ய விக்ரஹம் முதலியவைகளை உடையவனாகையினால் அவர்களைவிட மேற்பட்டவன் என்பது தெரிவிக்கப்படுகிறது நித்யத்திலும் 3 'பஞ்ச ஶக்திமயம் விக்ரஹம்' என்றருளிச் செய்யப்பட்டது இரண்டு விதமாகவும் ஸத்வகுணத்தை ப்ரவ்ருத்திக்கும்படி செய்கிறவன் என்பதும் ஶ்வேதாஶ்வதரோபநிஷத் புருஷ ஸூக்தத்தில் சொல்லப்பட்ட பரம புருஷனைச் சொல்லுகிறது என்பதைத் தெரிவிக்கிறது இவ்விஷயத்தில் இன்னும் சொல்லவேண்டிய விஶேஷம் வேதாந்த ஸங்க்ரஹம் முதலிய

---

1 விஷ்ணு - விஷ்ணுவானவர், ஸாத்விகை: - ஸத்வகுணம் மேலிட்டவர்களினால், ஸேவ்யதே - ஸேவிக்கப்படுகிறான், ஶங்கர - ருத்திரன், தாமஸைரேவ - தமோகுணம் மேலிட்டவர்களினாலேயே, ஸேவ்யதே - ஸேவிக்கப்படுகிறான், ப்ரும்மா - ப்ரும்மா, ராஜஸை - ரஜோகுணம் மேலிட்டவர்களினால், ஸேவ்யதே - ஸேவிக்கப்படுகிறான், ஸரஸ்வதீ - ஸரஸ்வதீ, ஸங்கீர்ணை - எல்லாகுணங்களும் கலந்திருப்பவர்களினால் (ஸேவிக்கப்படுகிறாள்).

2 நாகரத்ராவிடவேஸராணாம் - நாகரமென்றும், த்ராவிடமென்றும், வேஸரமென்றும் பெயருடையதாக, ஸ்யாத்-ஆகும், க்ரமேண - க்ரமமாக, ஸத்வரஜஸ்தமாம்ஸி-ஸத்துவம், ரஜஸ், தமஸ், இவைகள் அதின் குணங்கள், தே - அவைகள், மஹீஸுரோர்வீபதி வைஶ்யகா -ப்ராம்மணன், க்ஷத்திரியன், வைஶ்யன், இவர்களை யஜமானனாக வுடையவைகள், ஹரி - விஷ்ணு, தாதா - ப்ரும்மா, ஹர - ருத்திரன், இவர்களை, ஆதிதேவா - இவைகளுக்கு ஆதியான தேவதைகள்

3 உயர்ந்த ஸத்துவகுணம் நிறைந்த ஐந்து விதமான ஶக்திகளோடு கூடிய திவ்ய விக்ரஹத்தை யுடையவனாயுமிருக்கிற

க்ரந்தங்களில் கண்டுகொள்ளத்தக்கது. இவ்விடத்தில் புருஷ ஸூக்தத்தில் சொல்லப்பட்ட ஸூர்யனுடைய வர்ணம்போன்ற வர்ணத்தையுடைய புருஷனையே ஸூர்யமண்டலத்தின் நடுவில் அப்படிப்பட்ட வர்ணத்தோடு கூடினவனாயிருப்பவனாகச் சாந்தோக்யத்தில் 'ஸூர்யமண்டலத்தின் நடுவில் ஸ்வர்ணமயனாகிய எந்த இந்தப் புருஷன் காணப்படுகிறானோ' என்றர்த்தமுள்ள வாக்யம் முதலாக ஆரம்பித்துச் சொல்லப்படுகிறது. அந்தப் புருஷனும் ஒரு இடத்தில் இருக்கிறான் என்பதைச் சொல்லியிருப்பதின் ஸாமாந்யத்தினால் ஸூர்யன்தான் அவனே ஸ்வர்ணம்போன்ற வர்ணத்தையுடைய புருஷனாக மனுவினாலும் 1 'ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாம் அணீயாம்ஸம் அணீயஸாம்। ருக்மாபம் ஸ்வப்நதீகம்யம் வித்யாத் தம் புருஷம் பரம்॥' என்று ஸ்ம்ருதியில் சொல்லப்படுகிறான். "இந்த ஸூர்யனே ப்ரும்மா" என்றர்த்தமுள்ள வாக்யமும் ச்ருதியில் சொல்லப்படுகிறது. அந்த ஸூர்யனைப்பற்றிய புராணமும் இருக்கிறது. ஆகையினால் புருஷ ஸூக்தம் ஸூர்யனையே சொல்லுகிறது. ஆகையினாலவனே பரப்ரம்மம் என்கிற ஆக்ஷேபங்கள் வேறொரு அர்த்தமும் சொல்லமுடியாத காரணவாக்யங்களினாலும், லக்ஷ்மிக்குப் பதி என்கிற அடையாளத்தினாலும், 'புருஷ' என்னும் பதம் முதலியவைகளினாலும், மற்றப்புராணம் முதலியவைகளினாலும் ஸமாதானம் சொல்லப்பட்டிருந்த போதிலும் அதிகயுக்தி இருக்கிறதென்று தெரிவிப்பதற்காகக் கீழே சொல்லப்படாத சாந்தோக்யோபநிஷத்தில் சொல்லப்படுகிற மிகவும் ப்ரஸித்தமான அடையாளத்தைச் சொல்லுகிறார்—'கஃ புண்டரீக நயநஃ' என்று. இதின்கருத்தாவது— அவ்விடத்திலேயே, 'ஸூர்யனால் மலர்த்தப்பட்ட தாமரைப்பூ எப்படியோ அப்படி (அவனுடைய) கண்கள் இருக்கின்றன' என்று தாமரைப்பூக்களைப்போன்ற கண்களையுடையவன்' என்று சொல்லியிருப்பது அது புருஷோத்தமனுக்கடையாளம் என்று ப்ரஸித்தமாயிருப்பதினால் அவ்விடத்தில் ஸூர்யனோ மற்ற வேறொருவனோ என்று ஸந்தேஹிக்க வேறிடமில்லை. இவ்விடத்தில் த்ரமிட பாஷ்யத்தில் அந்த உபநிஷத்திலிருக்கிற 'கப்யாஸம்' என்னும் பதத்திற்கு ஆறர்த்தங்கள் சொல்லப்பட்டன. அப்படி இருந்தபோதிலும் உசிதமாக இருக்கிறபடியினால்

1 ஸர்வேஷாம் - எல்லா வஸ்துக்களையும், ப்ரஶாஸிதாரம் - நியமிக்கிறவனையும், அணீயாம்ஸம் - ஸூக்ஷ்மமான வஸ்துக்களுக்கும், அணீயஸாம் - ஸூக்ஷ்மமானவனாகவும், ருக்மாபம் - ஸ்வர்ணம் போன்ற நிறத்தை யுடையவனையும், ஸ்வப்நதீகம்யம் - கனவைப்போலிருக்கிற புத்தியினாலறியத்தக்கவனையும் இருக்கிற, பரம் - பரனாகிய, புருஷம் - புருஷனை, வித்யாத் - அறியவேண்டும்.

அவைகளில் மூன்றாத்தங்களே ஒப்புக்கொள்ளத்தக்கவைகள். அப்படியே வேதார்த்தஸங்க்ரஹத்தில் 1 'கம்பீராம்பஸ்ஸமுத்பூத ஸம்ம்ருஷ்ட நாளரவிகர விகஸித புண்டரீக தளாமலாயதேக்ஷண:' என்றருளிச்செய்யப்பட்டது. இத்தால் இவன் பரிபூர்ணன் என்பதும், அனுக்ரஹம் செய்வதையே ஸ்வபாவமாகவுடையவன் என்பதும் தெரிவிக்கப்படுகிறது. உபரிசராக்யானத்தில் 2 'அரோஷணோஹ்யஸௌ தேவ:' என்று சொல்லப்பட்டது. மற்றவர்களான பிரும்மா, ஸூர்யன், ருத்திரன், முதலியவர்கள் பரிபூர்ணரல்லவாகையினாலும், தபஸ்ஸு முதலியது செய்துகொண்டிருக்கும் தசையை யுடையவர்களாகையினாலும், காமக்ரோதங்களினால் நிறைந்தவர்களாகையினாலும் கண்கள் கரூரங்களாயிருக்கின்றன. பகவான் ஸூர்யமண்டலத்தில் வஸிக்கிறானென்பதும் ஸாவித்ரீ கல்பங்களிலும், புராணம் முதலியவைகளிலும் ப்ரஸித்தமாயிருக்கிறது. ஸூர்யன் ஈஶ்வரனல்லவென்பது 'கண்களிலிருந்து ஸூர்யன் உண்டானான்' என்றும், 'ஸூர்யன் சந்திரன் இவர்களை பிரும்மா முன்போல் ஸ்ருஷ்டித்தார்' என்றும், 'அக்னி தலை சந்திரஸூர்யர்கள் கண்கள்' என்றும், 'ஸூர்யன் எவனுடைய ப்ரகாசத்தைத் தான் உபயோகித்துக்கொண்டு ப்ரகாசிக்கிறானோ' என்றும், 'ஸூர்யன் எந்த பகவானால் தன்னுடைய தேஜஸ்ஸினால் வ்ருத்தி செய்யப்பட்டவனாய்க்கொண்டு ப்ரகாசம் செய்கிறானோ' என்றும், 'அவ்விடத்தில் ஸூர்யன் ப்ரகாசிக்கிறதில்லை, சந்திரன் நக்ஷத்திரங்கள் இவைகளும் ப்ரகாசிக்கிறதில்லை' என்றும், 'ஸூர்யன் எந்த பகவானுக்குச் ஶரீரமோ' என்றுமாத்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளினாலேற்பட்டது. அவனுடைய மஹிமையைச் சொல்லுகிற புராணமோவெனில் ஸாத்விகமல்லவாகையினால் வேதத்திற்கு விருத்தமாகச் சொல்லும் விஷயத்தில் நிராகரிக்கத் தக்கது. சில இடங்களில் இந்த ஸூர்யனே பரப்ரம்மம் என்றாரோபித்துக் கொண்டாவது ஸூர்யனுக்கு அந்தர்யாமியாகிய பரமாத்மாவைச் சொல்லுகிறது என்றாவது அர்த்தம் சொல்லிக்கொள்ள வேண்டியது. இப்படி முக்யமான காரண வஸ்துவைச் சொல்லுகிற ஶ்ருதி வாக்யங்களினாலும் லக்ஷ்மிக்குப் பதி என்பது முதலிய அடையாளங்களினாலும் நாராயணனே ஸ்வபாவத்தி லேற்பட்ட ஐஶ்வர்யங்களை யுடையவன், எல்லா வஸ்துக்

---

1 ஆழமான ஜலத்தில் முளைத்ததும், அழகான தண்டிலிருப்பதும் ஸூர்யனுடைய கிரணங்களினால் மலரச்செய்ய பட்டதுமான தாமரைப் பூவின் இதழ்கள் போன்ற நிர்மலங்களாயும் விசாலமாயு மிருக்கிற கண்களையுடையவன்.

2 அஸௌ - இந்த, தேவ:-தேவன், அரோஷண:-கோபமில்லாதவன்

களையும்விட மேலானவன், என்று நிஶ்சயம் செய்யப்பட்டிருந்தபோதி லும் பதம், வாக்யம், ப்ரமாணம், இவைகளின் வ்ருத்தாந்தங்களைத் தெரிந்து கொள்ளாத சிலர் ஒரு விஶேஷணமுமில்லாத 'ப்ரஹ்மா', 'ஶம்பு' என்கிற பெயரையும், 'ஹரி' 'ஶிவ' என்கிற விஶேஷணங்களோடுகூடிய அந்தப் பெயர்களையும் யோசித்து ப்ருஹ்மாவிற்குத் தகப்பனாகிய பகவான் தாழ்ந்தவரென்றும், அவருக்குப் பிள்ளையாகிய ருத்திரன் உயர்ந்தவரென்றும் எண்ணுகிறார்கள் அவர்களை நிந்திக் கிறார்—'ப்ரஹ்மஶிவாத்யைஃ கைஃ' என்று இவ்விடத்தில் 1 'த்வாவிமௌ புருஷௌ லோகே' என்பது முதலிய ஶ்லோகங்கள் நினைக்கத்தக் கவைகள் அவ்விடத்தில் 2 'பரமாத்மேத்யுதாஹ்ருதஃ' என்பதினால் 'அந்தச் ஶ்ரீகையின் நடுவில் பரமாத்மா இருக்கிறான்' என்றாற்போன்ற ஶ்ருதிவாக்யம் ஜ்ஞாபகப்படுத்தப்படுகிறது 'யோலோகத்ரயமாவிஶ்ய' என்பதினால் 'இந்த லோகத்தில் எந்த ஒரு வஸ்து காணப்படுகிறதோ' என்றாற்போன்ற வாக்யம் முதலான ஶ்ருதி வாக்யங்கள் வ்யாக்யானம் செய்யப்பட்டன. 'பிபர்தி' என்பதினால் லோகங்களுக்கு ஆதார மென்று சொல்லியிருப்பதினால் 'எந்தப் பகவானிடத்தில் இந்த ப்ரபஞ் சம் ஒரே ஆதாரத்தையுடையதாக ஆகிறதோ அப்படிப்பட்ட ஸூர்ய னுடைய மண்டலத்திலிருக்கிற மேன்மை பொருந்திய அழிவில்லாத சலிக்காத மோக்ஷத்திற்குக் காரணமாகிய விஷ்ணுவென்று பெயரு டைய எல்லாவற்றிற்கும் ஆதாரமாகிய தேஜஸ்ஸு' என்றும், 'இவன் அணைபோல இந்த லோகங்கள் ஒன்றோடொன்று கலக்காமலிருப்பதற் காகத் தாங்கிக்கொண்டிருக்கிறான்' என்று மாத்தமுள்ள ஶ்ருதிவாக் யம் முதலியவைகளின் அர்த்தம் சொல்லப்பட்டது 'அவ்யய' என்னும் பதம் சொல்லி யிருப்பதினால் 'அழிவில்லாதவனும் ஸ்வபாவங்களில் மாறுதலில்லாதவனும் ஶிவ என்னும் பதத்தினால் சொல்லப்பட்டவனு மாகிய' என்னுமாத்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தினர்த்தம் சுருக்கிச் சொல் லப்பட்டது 'ப்ரபு' என்னும் பதம் இவ்விடத்தில் 'நாராயணன் வ்யாபித்துக்கொண்டிருக்கிறான்' என்றாற்போன்ற வாக்யத்தில் சொல் லப்பட்ட வ்யாபித்துக்கொண்டிருக்கை 'உள்ளே நுழைந்துகொண்டு நியமிக்கிறான்' என்றாற்போன்ற ஶ்ருதிவாக்யத்தை யனுஸரித்து எல் லாவஸ்துக்களையும் நியமித்துக்கொண்டிருக்கை என்பதையும், 'தனக் குத்தானே ஈஶ்வரன்' என்றாற்போன்ற வாக்யத்தில் சொல்லப்பட்ட

1 லோகே - லோகத்தில், இமௌ - இந்த, த்வௌ-இரண்டுபெயர்களும், புருஷௌ-புருஷர்கள்.

2 பரமாத்மேதி - பரமாத்மாவென்று, உதாஹ்ருதஃ-சொல்லப்பட்டான்.

தான் ஒருவராலும் நியமிக்கத்தக்கவனல்ல என்பதையும் அபிப்ராயத்தில் கொண்டிருக்கிறது 1 ' நவாவி வெதெஷு ஸஙா ந நாஙா ' என்று அல்பம் படித்தவர்களின் வார்த்தையும் ' லொகெ வெதெ ச ஆயிதஃ' என்று வ்யாஸரால் எடுத்துரைக்கப்பட்ட பகவானுடைய வார்த்தை இருப்பதினால் பரிஹரிக்கப் படத்தக்கது இவ்விடத்தில் ஸ்ரீ பகவத்கீதா பாஷ்யத்தில் 'வேதங்களினுடைய அர்த்தங்களை அறிவதற்குக் காரணங்களாகையினால் இவ்விடத்தில் 'லொகெ' என்பதினால் ஸ்ம்ருதி சொல்லப்படுகிறது ஆக ஶ்ருதியிலும், ஸ்ம்ருதியிலும் என்றாத்தம் ஶ்ருதியில் ' மேலான தேஜஸ்ஸை யடைந்து தன்னுடைய ரூபத்தோடு சேருகிறான், அவன் உத்தமனாகிய புருஷன் ' என்றாத்த முள்ள வாக்யம் முதலியவைகளிலும், ஸ்ம்ருதியில் 2 'அம்ஶாவதாரம் புருஷோத்தமஸ்ய ஹ்யநாதி மத்யாந்தமஜஸ்ய விஷ்ணோஃ' என்றிவை முதலிய இடங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது' என்றாத்தமுள்ள வாக்யங்கள் அருளிச் செய்யப்பட்டிருக்கின்றன 'அவன் உத்தமனாகிய புருஷன்,' என்றாத்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் அவன் புருஷோத்தமனென்பது மேற்பட்டதென்று தாத்பர்யம் ஆகையினால் இவ்விடத்தில் 'த்வதந்யஃ கஃ புருஷோத்தமஃ (உம்மைத் தவிர வேறு யார் புருஷோத்தமன)' என்று சொல்லுகிறவரின் அபிப்ராயமாவது நாம் புருஷோத்தமன் என்கிற பெயர் மாத்திரத்தினால் பகவான் ஸர்வேஶ்வரன் என்பதை ஸாதிக்க வந்தோமானால் அப்பொழுது ஈஶ்வரன் முதலிய பெயர்களின் பலத்தைக்கொண்டு எதிர் வாதம் சொல்லலாம் நம்மால் ப்ரபலங்களாகிய ஶ்ருதி, அடையாளங்கள், முதலியவைகளினாலல்லவோ இந்த அர்த்தம் ஸ்தாபிக்கப்பட்டது அப்படியாகில் ஜீவாத்மாக்களாகிய புருஷர்களின் கூட்டத்தைவிட வேறு பட்டவனாகவே இந்த மஹா புருஷன் எல்லா இடங்களிலும் ப்ரஸித்தனாக இருக்கிறான் ஆகையினால் ப்ரபலங்களான ப்ரமாணங்களினால் மறுக்கப்பட்ட இந்த 'ஈஶ்வர' என்கிற பெயர் ருத்திரனே ஸர்வேஶ்வரனென்கிறதை ஸ்தாபிக்க ஶக்தியற்றது அப்படிக்கில்லாவிடில் ஒரு விஶேஷணங்களுமில்லாத இந்திரன் என்கிற பெயரே தேவேந்திரனுக்கு இவனே பரமேஶ்வரன் என்பதை ஸ்தாபித்து விடுமே, 'இதி பரமேஶ்வரே (இதி

1 வேதேஷு - வேதங்களில், ஸமானநாமா - இதற்கு ஸமனான பெயருடையவனும், ந - இல்லை

2 புருஷோத்தமஸ்ய - புருஷோத்தமனாகிய, அஜஸ்ய - பிறப்பில்லாத, விஷ்ணோ:- விஷ்ணுவின, அம்ஶாவதாரம் - அம்ஶாவதாரமாயிருக்கிற, அநாதிமத்யாந்தம் - ஆதி, மத்தியம, அந்தமில்லாதவனாகிய (ஸ்ரீ க்ருஷ்ணனை).

என்னும் தாது பரமேஶ்வரன் என்கிற அர்த்தத்தில் ப்ரயோகிக்கப் படுகிறது)' என்று தாதுபாடத்தில் படிக்கப்பட்டிருப்பதினால் 'மஹ' என்னும் விஶேஷணத்தோடுசேர்ந்திருந்தால் கேழ்க்கவேண்டியதில்லை ஆகையினால்

மஹாவ்ருக்ஷ ஸம்ஜ்ஞேவ பஹவந்தோ பவாயிதா:
மஹேஶ்வர மஹேந்த்ராதி ஸம்ஜ்ஞாவத்ஸ்வத்ர நிஷ்பலா:॥

ப-ரை] அத்ர - இந்த விஷயத்தில், பஹவந்தோபவாயிதா - பலமுள்ள பரமாணங்களினால் மறுக்கப்பட்ட, மஹேஶ்வர மஹேந்த்ராதி ஸம்ஜ்ஞாவத் - மஹேஶ்வரன், மஹேந்திரன் முதலியபெயரும், மஹாவ்ருக்ஷ ஸம்ஜ்ஞேவ - மஹாவருக்ஷம் என்கிற பெயரைப்போல், அதாவது ஆமணக்குச்செடிக்கு மஹாவருக்ஷம் என்று பெயரிருப்பதைப்போல், நிஷ்பலா - பரயோஜனமற்றது.

புருஷோத்தமன் என்கிற பெயரோவெனில் வயாகரணம் முதலியவைகளின் கதையையே அறிந்து கொள்ளாத சிலரால் 1 'ரூட்யா தகாமம் புருஷோத்தமஶப்த:' என்று கேவலம் இடுகுறிப்பெயரென்று சொல்லப்பட்டது 'இவ்விடத்தில் கர்மதாரய ஸமாஸம் சொல்லில் 2 'ஸந்மஹத்பரமோத்தமோத்க்ருஷ்டா: பூஜ்யமாநை:' என்கிற ஶாஸ்த்ரப்படி 'உத்தம' என்னும் பதம் 'புருஷ' என்னும் பதத்திற்கு முதலில் வந்திருக்கவேண்டும் புருஷர்களுக்குள் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிற ஆறும்வேற்றுமையா யிருந்தால் ஸமாஸம் வருவதற்கு நியாயமில்லை. அப்படி இருந்தபோதிலும் 'ஸத்ஶீலாமேஶ:' என கிற ஸூத்திரத்திலிருந்து பதத்தைப்பிரித்து வேறிடத்தில் சேர்த்துக் கொள்ளுவதினால் அவைகளுக்குள் என்கிற அர்த்தத்திலும் ஏழாம் வேற்றுமையாகச்சொல்லி ஸமாஸம்வரலாம் அன்றிக்கே மிகுதியான அர்த்தங்களைச் சொல்லுகிற ஆறும் வேற்றுமையாய் வைத்துக்கொண்டு 'உத்தம' என்று சொல்லும்பொழுது தாழ்ந்த வஸ்துக்களை எதிர்பார்க்கிற படியினால் தாழ்ந்தது உயர்ந்தது என்கிற ஸம்பந்தத்தைச் சொல்லுகிற ஷஷ்டியாக ஸமாஸம் சொல்லலாம். வயாகரணம் தெரிந்தவர்களினாலே

1 ரூட்யா - இடுகுறிப்பெயராக, புருஷோத்தம:-புருஷோத்தமன் என்கிற பெயரினால் சொல்லப்பட்டவனாக, அஸதுகாமம் - இருந்தாலும் இருக்கட்டும்

2 ஸத், மஹத், பரம, உத்தர, உத்க்ருஷ்ட, இந்தப்பதங்கள் இவைகளினால் உயர்ந்தது என்றுசொல்லப்படுகிற வஸ்துக்களைச்சொல்லுகிற பதங்களுடன் ஸமாஸத்தில் முன்பேவரும்.

யே 'நாமொத்தமௌ' முதலிய பதங்கள் இப்படியே நிர்வாகம் செய்யப்பட்டன 1 'யஸ்மாத் க்ஷரமதீதோஹம் அக்ஷராதபி சோத்தம:' என்கிற கீதையின் வசனத்தை அநுஸரிக்கும் பக்ஷத்தில் ஐந்தாம் வேற்றுமையாயிருந்து ஸமாஸம் வருகிறதென்று ஸ்பஷ்டமாய் ஏற்படுகிறது இவ்விடத்தில் ஐந்தாம் வேற்றுமை, ஆறாம் வேற்றுமை, இவைகளில் ஸமாஸம்சொல்லும்பொழுது 'பூருஷ' என்னும்பதம் பத்தத்தசையையும் முக்தத்தசையையும் உடைய ஜீவாத்மாக்கள் எல்லாவற்றையும் சொல்லுகிறது 'த்வாவிமௌ புருஷௌ லோகே' என்றிவைமுதலிய வசனங்களினாலும் இந்த அர்த்தம் ஸுலபமாயறியக்கூடியது. ஆகையினால் ஶ்ருதி, லிங்கம், இவைகளால் மறுக்கப்படாததாயும், அதினால் விவரிக்கப்படுகிறதாயும், கீதையில் அர்த்தம் சொல்லப்பட்டதாயுமிருக்கிற புருஷோத்தமன் என்கிற பெயரினாலும் புருஷஸூக்தத்தில் சொல்லப்பட்ட எல்லாவற்றிற்கும் காரணமாகிய புருஷன் பரமாத்மா எல்லாவற்றையும் தாங்குகிறவன் எல்லாவற்றையும் நியமிக்கிறவன், எல்லாவற்றிற்கும் ஸ்வாமி என்பவை முதலியதும் அவனைத் தவிர மற்றவர்கள் தாழ்ந்தவர்கள் என்பதும் ஏற்படுகிறது இதுவும் 2 'க இதி ப்ரஹ்மணோ நாம ஈஶோஹம் ஸர்வதேஹிநாம் । ஆவாம் தவாங்கஸம்பூதௌ தஸ்மாத் கேஶவநாமவாந்॥', 3 'ஸர்வத்ராஸௌ ஸமஸ்தம் ச வஸத்யத்ரேதி வை யத:। ததஸ்ஸ வாஸுதேவேதி வித்வத்பி: பரிபட்யதே॥', 'நராஜ்ஜாதாநி தத்வாநி நாராணீதி ததோ விது:। தாந்யேவ சாயநம் தஸ்ய தேந நாராயணஸ்ஸ்ம்ருத:॥' என்றிவை முதலிய வசனங்களினால் நிர

---

1 அஹம் - நான், யஸ்மாத் - எந்தக்காரணத்தினால், க்ஷரம் - பத்தசேதனர்களை, அதீத -தாண்டியிருக்கின்றேனோ, அக்ஷராதபி - முக்தாத்மாவைவிட, உத்தம -மேலானவனோ(ஆகையினால் புருஷோத்தமன் என்று சொல்லப்படுகிறேன்)

2 கஇதி - க என்று, ப்ரஹ்மண:-ப்ரஹ்மாவிற்கு, நாம - பெயர், அஹம் - நான், ஸர்வதேஹிநாம் - எல்லாப்ராணிகளுக்கும், ஈஶ -ஈஶன், ஆவாம் - நாங்கள் இருவரும், தவ - உம்முடைய, அங்கே - ஶரீரத்தில், ஸம்பூதௌ - உண்டானவர்கள், தஸ்மாத் - ஆகையினால், கேசவநாமவாந - கேசவனென்று பெயருடையவராக (ஆகிறீர்)

3 ஸர்வத்ர - எல்லா இடத்திலும், அஸௌ-இந்தப்பகவானும், அத்ர - இந்தப்பகவானிடத்தில், ஸமஸ்தம்-எல்லாவஸ்துக்களும், யத:-எந்தக்காரணத்தினால், வஸதி - வஸிக்கிறதோ, தத:-ஆகையினால், ஸ -அந்தப்பகவான், வித்வத்பி:-வித்வான்களினால், வாஸுதேவேதி - வாஸுதேவன் என்று, பரிபட்யதே - சொல்லப்படுகிறார்.

வசனம செய்யபபட்ட மறறப பெயாகளேயும குறிககிறது 1 'அஜஸ் ஸர்வேஶ்வர ஸித்த:' என்று வயாஸரால சொலலபபட்ட ஸர்வேஶ்வரன எனகிற பெயா மஹேஶ்வரன எனகிற பெயரைக கீழே தளளுகிறது இவவிடததில பெயா இருககட்டும. புருஷஸூக்ததகதில சொலலபபடு கிற வஸ்து நாலு பாதஙகளே உடைததானது எனபதாகிற அளவிடப பட்டதா யிருககையாகிற அடையாளம அளவிடபபடாத தெனறு சொலலபபடுகிற பரவஸதுவைக காட்டிலும தாழநததெனறு தெரிவிககி றதலலவா எனறு அதீதபரமமவாதிகள சொலலுகிறாகள அவாகளே நிராகரிபபதறகாக பருமமா, ருததிரன முதலியவாகளுமமறறெலலாவஸ் துககளும எலலா வஸ்துககளேயும வயாபிததுககொண டிருககிற பரம புருஷனுடைய ஏகதேசததி லிருககிறாாகள எனபதைச சொலலுகிறா— 'யஸ்யாயுத' எனறாரமபிதது உமமைத தவிர வேறு எவனுடைய என்றாததம சொலலிககொளளவும 2 'யஸ்யாயுதா யுதாம்ஶே விஶ்வ ஶக்திரியம் ஸ்திதா। பரப்ரஹ்மஸ்வரூபஸ்ய ப்ரணமாமி தமவ்யயம் ॥', 3 'மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ', 4 'இதம் ஸர்வம் ஜகத் க்ருத்ஸ்நம் ஏகஸ்தம் பஶ்ய', 5 'பஶ்யாமி தேவாம்ஸ்தவ தேவ தேஹே ஸர்வாம்ஸ்ததா பூதவிஶேஷஸங்காந் ॥ ப்ரஹ்மாணமீஶம் கமலாஸநஸ்தம்' எனறிவை முதலிய பர மாணஙகளிலை பகவானுடைய ஸவரூபததின ஏகதேசததிலும திவய

---

1 அஜ:, ஸர்வேஶ்வர:, ஸித்த (இவைகள பகவானுககுத திருநாமஙகள)

2 யஸய - எவனுடைய, அயுதாயுதாமஶாமஶே - அனேகமலக்ஷ பாகங களில ஒருபாகததில, இயம-இநத, விஶவஶகதி -ப்ரபஞசமாகிற ஶகதி, ஸதிதா- இருககிறது, ஏதத - இநத, அகிலம - எல்லா, பரமமாணடம - பரமமாணடமா னது, மூனே - ஓ! ருஷியே, மேரோ -மேருவிறகு, அணுரிவ - அணுபோல

3 இதம - இநதரூபததில, ஸசராசரம் - ஜஙகமஸதாவரஙகளோடு கூடிய, கருதஸ்நம - எல்லா, ஜகத-லோகததையும், ஏகஸதம - ஏக தேசததிலிருபபதாக, பஶய - பாா

4 இதம - இநத, ஸாவம் - எலலாம, ஸூத்ரே - நூலில், மணிகணாஇவ - மணிகளின கூட்டஙகள்போல, மயி - என்னிடததில, ப்ரோதம்-கோககப்பட்டி ருககிறது

5 தேவ-ஓ! தேவனே, தவ - உமமுடைய, தேஹே - ஶரீரததில, தேவாந - தேவதைகளே, பஶ்யாமி - பாாககிறேன, ததா - அப்படியே, ஸாவான் - எல்லா, பூதவிஶேஷஸஙகாந - பராணிவிஶேஷஙகளினுடைய கூட்டஙகளே பஶ்யாமி (பார்க்கிறேன்), ப்ருமமாணம - ப்ருமமாவையும், கமலாஸநஸதம-பருமமாவிற்கு வசப்பட்டிருக்கிற, ஈஶம - ருததிரனேயும (பாாககிறேன)

விக்ரஹத்தின் ஏகதேசத்திலும் ப்ரபஞ்சங்கள் இருக்கின்றன என்று சொல்லப்படுகிறது. ஆகையினால் விஷ்ணுவே எல்லாவற்றையும் வ்யாபித்திருக்கிறவர் என்பதும் ருத்ரன் முதலியவர்கள் அவருடைய ஏகதேசத்திலிருக்கிறார்கள் என்பதும் ஏற்பட்டது.

தபஸா தோஷிதேநைவ விஶ்வகாயேந விஷ்ணுநா |
ஸ்வபார்ஶ்வே தக்ஷிணே ஶம்போ: நிவாஸ: பரிகல்பித: ||
ஏவம் ஸ்வவிக்ரஹாம்ஶேஷு ததந்யாஶ்சாபி தேவதா: |
நிரங்குஶஸ்வாதந்த்ர்யேண ஶ்ரீதரேண நிவேஶிதா: ||

ப-ரை] தபஸா - தபஸ்ஸினாலே, தோஷிதேந - ஸந்தோஷத்தை உண்டாக்கப்பட்டிருக்கிற, விஶ்வகாயேந - ப்ரபஞ்சங்களைச் ஶரீரமாகவுடைய, விஷ்ணுநா - பகவானாலே, தக்ஷிணே - வலதாகிய, ஸ்வபார்ஶ்வே - தன்னுடைய பக்கத்தில், ஶம்போ: - ருத்ரனுக்கு, நிவாஸ: - இருப்பிடம், பரிகல்பித: - ஏற்படுத்தப் பட்டது, ஏவம் - இப்படி, ஸ்வவிக்ரஹாம்ஶேஷு - தன்னுடைய விக்ரஹத்தின் ஏகதேசத்தில், ததந்யா: - அந்த ருத்ரனைத் தவிர மற்றவர்களாகிய, தேவதாஶ்சாபி - தேவதைகளும், நிரங்குஶஸ்வாதந்த்ர்யேண - தடங்கலில்லாத ஸ்வதந்த்ரத்தையுடைய, ஶ்ரீதரேண - பகவானாலே, நிவேஶிதா: - வைக்கப்பட்டார்கள்.

புருஷ ஸூக்தத்திலும் 'இந்த எல்லா ப்ரபஞ்சமும் புருஷன்தான்' என்றர்த்தமுள்ளவாக்யம் முதலியவைகளினாலே அந்தப் புருஷன் அளவில்லாதவன் என்பது முதலிய தேறப்பட்டது அந்தந்த இடங்களில் அளவிடப்பட்டதாகச் சொல்லி இருப்பதற்கோ வெனில் | '1 அர்பகௌகஸ்த்வாத் தத்வ்யபதேஶாச்ச நேதி சேந்ந நிசாய்யத்வாதேவம் வ்யோமவச்ச,' 2 'அபிவ்யக்தேரித்யாஶ்மரத்ய:,' 3 'அல்பஶ்ருதேரிதி சேத்ததுக்தம்,'

1 அர்ப்பகௌகஸ்த்வாத - அல்பமான இடத்தை உடைத்தா யிருக்கிறபடியினாலும், தத்வ்யபதேஶாச்ச - அல்பபரமாணமுடையதென்று சொல்லியிருப்பதினாலும், நேதிசேந்ந - இது பரமாத்மாவல்ல என்பது உசிதமல்ல, ஏவம் - இப்படி, நிசாய்யத்வாத - உபாஸநம் செய்யத் தகுந்தபடியினாலும், வ்யோமவச்ச - ஆகாயம் போல எங்கும் வ்யாபித்திருக்கிறதென்று சொல்லியிருக்கிறபடியினாலும்

2 அபிவ்யக்தே: - உபாஸகர்களுக்கு ப்ரகாசமாக வேண்டியதற்காக, இதி - என்று, ஆஶ்மரத்ய - ஆஶ்மரத்யரென்கிற ருஷி சொல்லுகிறார்.

3 அல்பஶ்ருதே - அல்பமானரூபத்தை யுடையவனென்று ஶ்ருதியில் சொல்லிருப்பதினாலே இவன் பரமாத்மாவல்ல, இதிசேத - என்று சொன்னால், ததுக்தம் - அதற்குஸமாதானம் சொல்லப்பட்டது.

1 'ஹ்ருத்யபேக்ஷயா து மநுஷ்யாதிகாரத்வாத்,' 2. 'பாதோऽஸ்ய விச்வா பூதாநி', 3 'அநேந ஸர்வமிதம் ததம் ஆயாம பூர்ணம்', என்றிவை முதலிய ஸூத்திரங்களினால் அந்தந்த இடங்கள் அளவுபட்டிருப்பதைக் காரணமாகவுடையது என்பதும் இந்த மஹா புருஷனே எல்லாவற்றையும் வ்யாபித்திருக்கிறான் என்பதும், ஸ்தாபிக்கப்பட்டது இவ்விடத்தில் 'யஸ்யாயுதாயுத' என்று பாகங்களைப் பிரித்திருப்பது எண்ணிறந்த பரமாண்டங்கள், அதின் ஆவரணங்கள் முதலிய மிகவும் பெரியதான விபூதிகளுக்கு ஆதாரமான இடத்தைத் தவிர மற்ற விபூதிகளுக்கு ஆதாரமாகிய அளவில்லாத ஸ்வரூபத்தின் வைபவத்தைத் தெரிவிப்பதற்காக இத்தால் ஒவ்வொரு பரமமாண்டங்களிலுமிருக்கிற பருமமா, ருத்திரன், முதலியவர்கள் ஒருவர்க்கொருவர் தெரிந்து கொள்ளவில்லை என்பது முதலியதும் தெரிவிக்கப்படுகிறது 'ஸஹ்ய' என்பதினால் இப்படிப்பட்ட மஹிமைகள் தன் ஸ்வரூபத்தின் ஏகதேசத்தினால் அதிஷ்டானம் செய்யப்படுகிறதென்பதும் சொல்லப்படுகிறது 4 'விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்நமேகாம்சேந ஸ்திதோ ஜகத்' என்கிற இடத்தில் பாஷ்யத்தில் 'என்னுடைய மஹிமையின் அனேகம் பதினாயிரங்களின் ஒரு பாகத்தினால் நான் தாங்கிக்கொண்டிருக்கிறேன்' என்று வ்யாக்யானம் செய்து அவ்விடத்திலேயே 'யஸ்யாயுதாயுதாம்சாம்சே' என்கிற வசனமும் உதாஹரிக்கப்பட்டது 'விச்வம்' என்பதற்குக் கார்யவஸ்துக்களின் கூட்டமெல்லாம் என்றர்த்தம் 'விசித்ர ப்ரவிபாக' என்பதற்கு சேதனம் இவைகளின் அதிகமான வ்யத்யாஸம் என்றர்த்தம் அது விசித்ரமாக இருக்கையாவது ஆச்சர்யமாக இருக்கை உட்பிரிவுகளுக்குள் இரு

---

1 மனுஷ்யாதி காரத்வாத - உபாஸனம் மனுஷ்யர்களினாலேயே செய்யக்கூடியதாகையினால், ஹ்ருதயபேக்ஷயா து - அந்த மனுஷ்யர்களின் ஹ்ருதயத்தை எதிர்பார்த்து அதிலிருக்கும் பரமாத்மா அங்குஷ்ட ப்ரமாணம் என்று சொல்லி இருக்கிறது

2 புதயாத்த -பரமாத்மா நாலு பாதங்களை யுடையது என்றளவிட்டுச் சொல்லியிருப்பதும் உபாஸகம் செய்வதற்காக, பாதவத் - இன்னும் சில இடங்களிலும் மற்றும் சிலவஸ்துக்களைப் பாதமாகச் சொல்லியிருப்பதுபோல.

3 அநேந - இந்த பருமத்தினால், ஸர்வம் - எல்லாம் வ்யாபிக்கப் பட்டிருப்பதென்பது, ஆயாம ஶப்தாதிப்ய -பூரணன் என்பது முதலிய பதங்கள் ஶ்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறதினால்

4 அஹம் - நான், இதம் - இந்த, க்ருத்ஸ்நம் - எல்லா, ஜகத் - லோகத்தையும், ஏகாம்சேந-ஒருபாகத்தினால், விஷ்டப்ய - தாங்கிக்கொண்டு, ஸ்தித - இருக்கிறேன்.

கரும வ்யத்யாஸங்களாகவுமாம. தேவன மனுஷ்யன முதலிய வ்யத்யாஸத்திலுைம அவைகளுக்குத்தக்குந்த ஜ்ஞானம ஸுகம முதலியவைகளின வ்யத்யாஸத்திலுைம சேதன வஸ்துக்களுக்குப பேதமுண்டாயிருக்கிறது அசேதனங்களின வ்யத்யாஸங்களோ வெனில பஞ்சபூதங்கள், இந்த்ரியங்கள், அனுபவிக்கத்தக்க வஸ்துக்கள், அதற்கு ஒத்தாசைக் கருவிகள், இவைகளாகவும, இருக்கின்றன இதுவும ஒருவித விரோதங்களுமில்லாத ப்ரத்யக்ஷம அனுமானம ஶாஸ்த்ரம இவைகளினுல எப்படி ஸம்பவிக்குமோ அப்படி அறிந்து கொள்ளத்தக்கது இப்படிப்பட்ட வ்யத்யாஸத்தினுல வருத்தம,தனித்தனியாக ஏற்படுத்தப்பட்ட ஸ்வரூபம, ஸ்திதி, வ்யாபாரம, இவைகளை உடையதாக முடிவு பெற்றிருக்கிறது என்றாத்தம 12



𑌵𑍇𑌦𑌾𑌪𑌹𑌾𑌰 𑌗𑍁𑌰𑍁𑌪𑌾𑌤𑌕 𑌦𑍈𑌤𑍍𑌯𑌪𑍀𑌡𑌾
𑌦𑍍𑌯𑌾𑌪𑌦𑍍𑌵𑌿𑌮𑍋𑌚𑌨 𑌮𑌹𑌿𑌷𑍍𑌠 𑌫𑌲𑌪𑍍𑌰𑌦𑌾𑌨𑍈𑌃 ।
𑌕𑍋𑌽𑌨𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌶𑍁𑌪𑌤𑍀 𑌪𑌰𑌿𑌪𑌾𑌤𑌿 ? 𑌕𑌸𑍍𑌯
𑌪𑌾𑌦𑍋𑌦𑌕𑍇𑌨 𑌸 𑌶𑌿𑌵𑌃 𑌸𑍍𑌵𑌶𑌿𑌰𑍋𑌧𑍃𑌤𑍇𑌨 ॥ 13

*வேதாபஹார குருபாதக தைத்ய பீடாத்*
*யாபத் விமோசந மஹிஷ்ட பல ப்ரதாநை |*
*கோந்ய ப்ரஜா பசுபதீ பரிபாதி ? கஸ்ய*
*பாதோதகேந ஸ ஶிவ: ஸ்வ ஶிரோதருதேந? ||* 13

ப - ரை] 𑌵𑍇𑌦𑌾𑌪𑌹𑌾𑌰 - வேதத்தை அபஹரித்த தென்ன 𑌗𑍁𑌰𑍁𑌪𑌾𑌤𑌕 - பெரியதான பாபம், அல்லது தகப்பனுராகிய பரும்மா வினிடத்தில் செய்த பாபம், 𑌦𑍈𑌤𑍍𑌯𑌪𑍀𑌡𑌾-அஸுரர்களினு லுண்டாகிய உபத்திரவம், 𑌆𑌦𑌿 - இவை முதலாகிய, 𑌆𑌪𑌦𑌃 - ஆபத்துக்களை, 𑌵𑌿𑌮𑍋𑌚𑌨 - விடுவிப்பது, 𑌮𑌹𑌿𑌷𑍍𑌠 - உயாந்ததாகிய, 𑌫𑌲𑌪𑍍𑌰𑌦𑌾𑌨𑍈𑌃 - பலங்களைக் கொடுப்பது, இவைகளினுல், 𑌅𑌨𑍍𑌯𑌃 - (உம்மைவிட) வேருகிய, 𑌕𑌃 - எவன், 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌶𑍁𑌪𑌤𑍀 - ப்ரும்மா, ருத்திரன், இவாகளை, 𑌪𑌰𑌿𑌪𑌾𑌤𑌿-காப்பாற்றுகிறுன், 𑌸𑍍𑌵𑌶𑌿𑌰𑍋𑌧𑍃𑌤𑍇𑌨 - தன்னுடைய தலையில தரிக்கப்பட்ட, 𑌕𑌸𑍍𑌯 - (உம்மைவிட வேறு) எவனுடைய, 𑌪𑌾𑌦𑍋𑌦𑌕𑍇𑌨 - திருவடித் தீர்த்தத்தினுல், 𑌸𑌃 - அந்த ருத்திரன், 𑌶𑌿𑌵𑌃-பரிசுத்தனுக (ஆனுன) 13

பா] ஆனுலும ப்ரத்யக்ஷமான ஶ்ருதிவாக்யங்களினுலும, அதில இருக்கும அடையாளங்களினுலும, ஒரு ப்ரமாணங்களினுலும மறுக்கப்படாத பெயர்களினுலும பகவான பரதேவதை என்பதேற்படுகிறது.

அப்படி இருந்த போதிலும் 1 'இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ருஹ்மயேத்' என்று ஸ்ம்ருதியில் சொல்லியிருக்கிறபடியினாலும், விரோதாதிகரணம் ஸ்பஷ்டமான அர்த்தத்தைச் சொல்லுகிற ஶ்ருதிகளுக்கு விரோதமான ஸ்ம்ருதிகளைப் பற்றிச் சொல்லுகிற படியினாலும், ப்ரஜாபதி ருத்திரன் இவர்கள் உயர்ந்தவர்களென்று நிரூபிக்கிற அநேகப் புராணங்கள் காணப்படுகிற படியினாலும், பகவானே பரதேவதையென்று நிஶ்சயம் செய்வது முடியாது என்கிற ஆக்ஷேபத்திற்கு மிகவும் ப்ரபலங்களாகிய புராணங்களில் ப்ரஸித்தங்களாயும் உயர்ந்தவன் தாழ்ந்தவன் இவர்களைப் பகுத்தறிவதற் கடையாளங்களாயு மிருக்கிற சரித்திரங்களைக் கொண்டு பதில் சொல்லுகிறார்—'வேதாபஹார' என்றாரம்பித்து இதின் கருத்தாவது—எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதாயும், ஶ்ருதிகளுக்கு விரோதமில்லாத அர்த்தத்தைச் சொல்லுகிறதாகவும், ஸாத்விகங்களாயு மிருக்கிற புராணம் முதலியவைகளினால் விவரணம் செய்யப்படுகிற ப்ரத்யக்ஷமான ஶ்ருதிகளினால் அர்த்தத்தை நிஶ்சயம் செய்வது ஏற்பட்டிருக்க ஶ்ருதிகளுக்குவிருத்தங்களாக அர்த்தம் சொல்லுகிற ராஜஸங்களாயும் தாமஸங்களாயு மிருக்கிற புராணம் முதலியவைகளைச் ஶாரீரகஶாஸ்த்திரத்தில் சொல்லப்படுகிற ஸ்ம்ருத்யதி கரணத்தினால் ஸ்தாபிக்கப்பட்ட விரோதாதிகரண நியாயத்தினால் நிராகரிப்பது உசிதம் ஶ்ருதிகளுக்கு விருத்தமானக் கதைகள் தாமஸ புராணத்தில் சொல்லப்பட் டிருக்கிற படியினாலே ப்ரமம், மோசம் செய்யவேண்டுமென்கிற எண்ணம், இவைகளினால் உண்டானதாக எண்ணத்தக்கவைகள் மனு ஸ்ம்ருதி முதலியவைகளில் பகவானே பரதேவதை யென்பது ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது 'ஏதொன்றை மனு சொன்னாரோ அது மருந்து' என்றர்த்தமுள்ள வாக்யம் ஶ்ருதியில் சொல்லப்படுகிறது 2 'மந்வர்த்தவிபரீதா து யா ஸ்ம்ருதி: ஸா ந ஶஸ்யதே' என்று ஸ்ம்ருதியிலும் சொல்லப்படுகிறது ஆகையினால் ஸாத்விகங்களான இதிஹாஸ புராணம் முதலியவைகளில் சொல்லப்பட்ட வேதத்தை அபஹரித்தது முதலியக் கதைகள் பராபர தத்துவங்களைப் பகுத்தறிவதில் நல்ல அடையாளங்களாகின்றன—என்பது ஆகையினால் இவ்விடத்தில்

1 இதிஹாஸபுராணாப்யாம்-இதிஹாஸம், புராணம், இவைகளினால், வேதம்-வேதத்தை, ஸமுபப்ருஹ்மயேத் - உபப்ருஹ்மணம் செய்யவேண்டும், அதாவது வேதத்தின் அர்த்தத்தை விவரித்துக்கொள்ளவேண்டும்

2 யா-எந்த, ஸ்ம்ருதி:-ஸ்ம்ருதியானது, மந்வர்த்தவிபரீதா-மனுவினால் சொல்லப்பட்ட அர்த்தத்திற்கு விருத்தமான அர்த்தத்தைச்சொல்லுகிறதோ, ஸா-அது, நஶஸ்யதே-அங்கீகரிக்கப் படுகிறதில்லை.

எல்லா லோகங்களையும் ஸ்ருஷ்டித்தவராகிய அந்தப் பகவான் 'அந்த ஒரேவஸ்து லக்ஷ்மியுடன்கூடக் காற்று முதலிய ஒரு வஸ்துக்களுமில்லாமல் இருந்தது' என்றும், 'அந்தப் பரமாத்மாவை விட வேறு பரவஸ்து ஒன்றுமில்லை' என்றும், 'அந்தப் பரமாத்மாவை விட வேறு பரவஸ்து ஒன்றுமில்லை' என்றுமாத்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளில் ப்ரஸித்தமான முன் ப்ரும்மாவிற்குப் ப்ரளயமுண்டாகி மறுபடியும் ப்ரும்மா உண்டாகாத தசையில் மஹத் முதலாக ஸ்ருஷ்டிக்கும் வரிசைப்படி ப்ரும்மாவை முதலில் ஸ்ருஷ்டித்து ப்ரளய காலத்தில் மறைந்திருந்த வேதங்களையும் முன்பிருந்த வரிசை க்ரமங்களோடு கூடினதாகவே ப்ரகாசம்செய்து ப்ரும்மாவிற்குக்கொடுத்தான் இவ்விடத்தில் 'விதயாதி (ஸ்ருஷ்டிக்கிறார்)' 'ப்ரஹிணோதி (கொடுக்கிறார்)' என்று நிகழ்காலமாகச் சொல்லி இருப்பது ஒவ்வொரு கல்பங்களிலும் இப்படியே நடக்கிற தென்பதைத் தெரிவிப்பதற்காக பிறகு வேதமாகிற கண்களினால் காட்டப்பட்ட ப்ரபஞ்சங்களின் ஸ்ருஷ்டியை ப்ரும்மா செய்யவேண்டுமென்று ஆசைப்பட்டுக்கொண்டிருக்கும் பொழுது முன் ஜன்மத்தில் செய்த பாபங்களின் பலத்தைக் கொடுப்பதற்காகப் பரமாத்மாவினாலேயே ஸ்ருஷ்டிக்கப்பட்டவர்களாயும் ஶரீரத்தை எடுத்துக்கொண்ட ரஜஸ்தமோ குணங்களென்று பாஞ்சராத்ர ஶாஸ்த்ரங்களில்சொல்லப்பட்டவர்களாயும் அதிக பலசாலிகளுமாகிய மதுகைடபர்கள் 'தாமரைப்பூவில் உட்கார்ந்தவராயும், மிகுந்ததேஜஸ்ஸை யுடையவராயும் முதலில் வேதங்களை ஸ்ருஷ்டித்துக்கொண்டிருக்கிற ப்ரும்மாவைப் பார்த்தார்கள் மஹாபராக்கிரமமுடைய அந்த அஸுரர்கள் ரூபத்துடன் கூடிய வேதங்களைப் பார்த்து ப்ரும்மா பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே அந்த வேதங்களை அபகரித்துக்கொண்டார்கள் பிறகு அந்த அஸுர ஶ்ரேஷ்டர்கள் அநாதியான அந்த வேதங்களை எடுத்துக்கொண்டுபோய் ஜலம் நிறைந்த ஸமுத்திரத்தில் நுழைந்து பாதாளத்தில் ப்ரவேஶித்தார்கள் வேதங்கள் அபகரிக்கப்பட்ட பிறகு ப்ரும்மா அஜ்ஞானத்தை அடைந்தார் வேதங்களைப் பறிகொடுத்த ப்ரும்மா ருத்திரனைப் பார்த்து மேல் சொல்லப்படுகிற வார்த்தைகளைச் சொன்னார் ப்ரும்மா சொல்லுகிறார் வேதங்கள் எனக்கு உயர்ந்த கண்கள் வேதங்களே எனக்குச் சிறந்த பணம் வேதங்கள் எனக்கு உயர்ந்த ப்ரகாசம். வேதங்கள் எனக்கு உத்தமமான பரப்ரம்மம் இப்படிப்பட்ட என்னுடைய எல்லா வேதங்களும் அஸுரர்களினால் பலாத்காரமாய் அபகரிக்கப்பட்டன வேதங்களில்லாத இந்த லோகங்கள் எனக்கு இருட்டாயிருக்கின்றன வேதங்கள் அபகரிக்கப்பட்ட பிறகு லோகங்களை ஸ்ருஷ்டிக்கவேண்டுமென்றாரம்பித்த நான் என்ன செய்வேன். வேதங்கள

நாசமடைந்ததினால் உண்டான துக்கம் எனக்கு மிகவும் பெரியதாயிருக்கிறது. ஆஶ்சர்யம்! இப்படிப்பட்ட துக்கமாகிய ரோகம் என்னுடைய மனதை மிகவும் வருத்தப்படுத்துகிறது. இப்படிப்பட்ட துக்கமாகியஸமுத்திரத்தில் முழுகி இருக்கிற என்னை இப்பொழுது யார் கரை தூக்கி விடுவார்கள்? ஓ! புத்திமானாகிய ராஜஶ்ரேஷ்டனே, இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கிற பருமமாவிற்குப் பகவானை ஸ்தோத்திரம் செய்ய வேண்டுமென்கிற புத்தி உண்டானது. பிறகு பரபுவாகிய பருமமா கையைக்கூப்பிக்கொண்டு உயர்ந்த மந்திரத்தை ஜபம் செய்தார்' என்னாரம்பித்து 'இந்த ஸமயத்தில், ஓ! ராஜனே, குதிரையின் தலைபோன்ற தலையையுடைய பகவான் பாதாளத்திலிருக்கிற எல்லா வேதங்களையுமெடுத்துக்கொண்டு வந்து பருமமாவிற்குக் கொடுத்தார். ஓ! ராஜாவே, பிறகு அந்தப் பருமமா தன்னுடைய ஸ்வபாவத்தை அடைந்தார். இப்படி புருஷோத்தமனாகிய பகவான் அந்த மதுகைடபர்கள் என்கிற அஸுரர்களைக்கொன்றதினாலும், வேதங்களைத் திரும்பக்கொடுத்ததினாலும் பருமமாவின் துக்கத்தைப்போக்கடித்தார்' என்று சொல்லியிருக்கிறது. குருபாதகத்திலிருந்து விடுவித்தது ருத்திரனுக்கு குருவை (தகப்பனை) பற்றிச் செய்த பாபம் என்றர்த்தமாகவுமாம். குருவாகிய பாபம் என்று விஶேஷித்துச் சொல்லப்படுகிறதாகவுமாம். பராமமணர்களுக்குள் சிறந்தவனும் தகப்பனுமாகிய பருமமாவின் தலையை அறுத்ததைவிட அதிகமான பாபம் ஸம்பவிக்காதல்லவா. மேலும் தெரிந்தவன் அக்ரமம் செய்தால் அதிக சிக்ஷை செய்யவேண்டுமென்று ஸ்மருதியில் சொல்லப்படுகிறது. ஸர்வஜ்ஞன் என்று பெயருடைய இந்த ருத்திரன் இந்தத்தன்னுடைய பாபத்தைத்தான் அறியவில்லை என்பது முசிதமல்ல. மாத்ஸ்ய புராணத்தில் இந்த ருத்திரன் தன்னாலேயே 'பிறகு கோபத்தையுடையவனும், சிவந்த கண்களையுடையவனுமாயிருக்கிற என்னால் இடது கைக் கட்டைவிரல் நகத்தின் நுனியினால் அந்த பருமமாவினுடைய தலை அறுக்கப்பட்டது. பருமமா சொல்லுகிறார்: ஒரு குற்றமும் செய்யாத என்னுடைய தலை எந்தக் காரணத்தினால் உன்னாலறுக்கப்பட்டதோ ஆகையினால் நீ சாபத்தை யடைந்து கபாலத்தைக் கையிலேந்திக் கொண்டிருக்கப்போகிறாய். ருத்திரன் சொல்லுகிறார்: பருமஹத்தி தோஷத்தினால் கலக்கப்பட்டவனாகி இந்தப் பூமியில் புண்யதீர்த்தங்களையெல்லாம் சுற்றிக்கொண்டிருந்த நான், ஓ! தேவியே, ஹிமவத்பர்வதத்தைக் குறித்துச் சென்றேன். அவ்விடத்தில் லக்ஷ்மீபதியாகிய நாராயணனால் தன்னுடைய தேஹத்திலொரு பக்கம் நகத்தின் நுனியால் கீறப்பட்டது. அதிலிருந்து அதிகமான ரக்தத்தின் தாரை பெருகிற்று. பகவானுடைய அனுக்ரஹத்தினால் ஓ! பார்வதியே,

அந்த ப்ரும்ம கபாலம் ஆயிரம் சுக்கலாய் வெடித்துக் கீழே விழுந்து கனவில் கண்ட பணம் போலப் போய்விட்டது' என்று சொல்லப் பட்டிருக்கிறது. சில புராணங்களில் ஶோவைை ஜலத்தினால் அந்தக் கபாலம் நிறைக்கப்பட்டு விடுவிக்கப்பட்டது' என்று சொல்லப்பட்டது. இவை இரண்டும் கல்பங்கள் வெவ்வேறாகையினால் சில கல்பங்களில் சிலவிதமாக நடந்ததாகச் சொல்லிக்கொள்ள வேண்டியது. ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாத பகவானுடைய திவ்ய விக்ரஹத்தில் யுத்தம் முதலிய இடங்களிலும் இந்த இடத்திலும் இரத்தம், ஶோவை, முதலியது பகவானாலே மாயையினால் ஸ்ருஷ்டிக்கப்பட்டதென்று எண்ணத் தக்கது. ருத்திரனுக்கு அஸுரர்களினால் உண்டான பீடையாகிற ஆபத்தை விடுவித்ததும் அந்தகாஸுரனோடு யுத்தம் செய்யும்பொழுது பரஸித்தமாயிருக்கிறது. அதுவும் மாத்ஸ்ய புராணத்தில் ருத்திரனால் ப்ரயோகிக்கப்பட்ட ஆயுதங்களினால் அடிக்கப்பட்ட அந்தகாஸுரனுடைய இரத்தத் திவலைகளினால் அநேகம் அந்தகாஸுரர்கள் உண்டாக, 'பிறகு அந்த ருத்திரன் அநேகம் அந்தகாஸுரர்களினால் எதிர்க்கப்பட்டவராய் பிறப்பில்லாதவரும் ப்ரபுவுமாகிய வாஸுதேவனைச் ஶரணமாக அடைந்தார். பிறகு அந்தப் பகவானாகிய விஷ்ணு ஶுஷ்கரேவதியை உண்டாக்கினார். அது அந்தகாஸுரர்களின் இரத்தங்களை உலர்த்திவிட்டது' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியே ருத்திரனுக்கு அவனே கொடுத்த வரத்தில் ஶக்தியைப் பரீக்ஷிப்பதற்காக ஆரம்பித்த வ்ருகாஸுரனுடைய துஷ்டத்தனத்தினால் உண்டாக்கப்பட்ட பயத்தை விடுவித்ததும் அறியத்தக்கது. இவ்விடத்தில் இந்திரன் முதலியவர்களுக்கு ஹிரண்யகஶிபு, ராவணன், த்வாஸுஸ, முதலியவர்களினால் உண்டாக்கப்பட்ட ஆபத்தை விடுவித்ததும் சேர்த்துக் கொள்ளவேண்டியது. இது பொதுவாக ஸபாபர்வத்தில் [1] 'ஏஷ தேவேஷ்வர ஸுராணாம் ச அஸுராணாமபி ஸர்வ ஶ: பயாபயகர: க்ருஷ்ண: ஸர்வ லோகேஶ்வரேஶ்வர: ॥' என்று சொல்லப்பட்டது. 'க்ஷிதி' என்னும் பதத்தினால் ஒருவராலும் ஜயிக்க முடியாத திரிபுரர்களை ஜயிக்கவேண்டுமென்கிற ஆசை முதலிய ஆபத்துக்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டியது. இதுவும் மஹா

---

1 ஏஷ:-இந்த, ஸர்வலோகேஶ்வரேஶ்வர:-எல்லா லோகங்களுக்கும் ஈஶ்வரனாகிய, க்ருஷ்ண -ஸ்ரீக்ருஷ்ணன், ஏவம் - இப்படி, ஸுராணாமபி - தேவதைகளுக்கும், அஸுராணாம் ச - அஸுரர்களுக்கும், ஸர்வஶ -எல்லாக்காலங்களிலும், பயாபயகர -பயத்தையும் அபயத்தையும் செய்கிறவர்.

பாரதத்தில் 1 'விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமித தேஜஸ:। தஸ்மாத் தனுர்ஜ்யா ஸம்ஸ்பர்ஶம் ஸ விஷேஹே மஹேஶ்வர:॥' என்று சொல்லப்பட்டது. ஸ்ரீ விஷ்ணுதர்மத்திலும் 2 'த்ரிபுரம் ஜக்னுஷ: பூர்வம் ப்ரஹ்மணா விஷ்ணுபஞ்ஜரம் । ஶங்கரஸ்ய த்விஜஶ்ரேஷ்ட ரக்ஷணாய நிரூபிதம்॥ வாகீஶேந ச ஶக்ரஸ்ய பலம் ஹந்தும் ப்ரயாஸ்யத:।' என்று சொல்லப்பட்டது. பகவானுடைய மூன்று திருநாமங்களை விதிக்குமிடத்திலும் அந்த மூன்று பெயர்களின் ப்ரபாவத்தினாலே ருத்திரனுக்குக் காலகூட விஷத்தினாலுண்டான ஆபத்திலிருந்து தாண்டினது 3 'அச்யுதாநந்த கோவிந்த இதி நாமத்ரயம் ஹரே:। ஓம் நமஸ் ஸம்புடீக்ருத்ய ஜபன் விஷம் அதோ ஹர:॥' என்பதினால் தெரிவிக்கப்பட்டது. பாணாஸுர யுத்தத்திலும் பகவானாகிய வாஸுதேவனோடு யுத்தம் செய்ய ஆரம்பித்த ருத்திரனை ஜ்ரும்பணாஸ்த்ரத்தினால் அந்த யுத்தமாகிற ஆபத்திலிருந்து பகவான் தாண்டுவித்தாரென்பதும் ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் 4 'ஜ்ரும்பணாஸ்த்ரேண கோவிந்தோ ஜ்ரும்பயா

---

1 அமித தேஜஸ -அதிக பராக்கிரமத்தையுடைய, பகவத -பகவானாகிய, பவஸ்ய - ருத்திரனுக்கு, விஷ்ணு -விஷ்ணுவானவர், ஆத்மா - அந்தராத்மா, தஸ்மாத் - ஆகையினாலே ஸ -அந்த, மஹேஶ்வர:-ருத்திரன், தனுர்ஜ்யா ஸம்ஸ்பர்ஶம் - தனுஸ்ஸின் நாணக்கயிற்றைத்தொடுவதை, விஷேஹே - பொறுத்தார்

2 பூர்வம் - முன்பு, த்ரிபுரம் - திரிபுரத்தை, ஜக்னுஷ: -அழிக்கிற, ஶங்கரஸ்ய - ருத்திரனுடைய, ரக்ஷணாய - காப்பாற்றுவதற்காக, த்விஜஶ்ரேஷ்ட - த்விஜர்களில் ஶ்ரேஷ்டனாகிய ஜமதக்னியே, ப்ரஹ்மணா - ப்ரஹ்மாவினாலே, விஷ்ணுபஞ்ஜரம் - விஷ்ணுபஞ்சரம் என்கிற மந்திரமானது, நிரூபிதம் - செய்யப்பட்டது, பலம் - பலாஸுரனை, ஹந்தும் கொல்லுவதற்கு, ப்ரயாஸ்யத:-ப்ரயாஸப்பட்டுக்கொண்டிருக்கிற, ஶக்ரஸ்ய ச - இந்திரனுக்கோவெனில் வாகீஶேந - ப்ருஹஸ்பதியினால் (விஷ்ணுபஞ்சரமந்திரம் சொல்லப்பட்டது)

3 ஆனுஷ்டுபம் - அனுஷ்டுப் வ்ருத்தமாயிருக்கிற, பரம் - உயர்ந்த, அச்யுதானந்த கோவிந்த மந்த்ரம்-அச்யுதானந்த கோவிந்த என்றாரம்பிக்கும் மந்திரத்தை, ஓம் நமஸ்ஸம்புடீக்ருத்ய - ப்ரணவத்திற்கும் நமஸ்ஸுக்கும் நடுவில்வைத்து, ஹர -ருத்திரன், ஜபன் - ஜபித்துக்கொண்டு, விஷதர -விஷத்தைத் தாங்கினார்

4 கோவிந்த -ஸ்ரீக்ருஷ்ணன், ஶங்கரம் - ருத்திரனை, ஜ்ரும்பணாஸ்த்ரேண-ஜ்ரும்பணாஸ்திரத்தினால், ஜ்ரும்பயாமாஸ - ஸதம்பமாக நிற்கும்படிச் செய்தார், தத:-பிறகு, தைத்யா: - அஸுரர்களும், ப்ரமதா: ச - ப்ரமதகணங்களும், ஸமந்தத:-நாலு பக்கங்களிலும், ப்ரணேஶு -கூச்சலிட்டார்கள், ஜ்ரும்பாபிபூத:-ஜ்ரும்பாஸ்திரத்தினால் அவமானம் செய்யப்பட்ட, ஹர -ருத்திரன், ரதோபஸ்தே - தேர்நடுவில், உபாவிஶத - உட்கார்ந்தார், ததா - அப்பொழுது, அக்லிஷ்ட காமணா-ப்ரயாஸமில்லாமல் காரியத்தைச்செய்கிற, க்ருஷ்ணேன-ஸ்ரீக்ருஷ்ணனோடு, யோத்தும் - யுத்தம்செய்ய, ஶக்த - சக்தியுள்ளவராகவில்லை

ரிவஸ ஶங்கரம் । ததஃ ப்ரணேமு தேவாஸ்தே ப்ரஹ்மாத்யாஸ் ஸர்ஷிகா:॥ ஜ்ரும்பிதம் ஶிவம் த்ருஷ்ட்வா தத்ர ததா ஜிதஸ்ஸர்வகுணை: । ஜம்பி வாக ஸமாக்க பக்ஷிராஜேந விஷ்ணுநா ॥' என்று சொல்லப் பட்டது. ஸ்ரீமத் ராமாயணத்திலும் பரசுராமன் 1 'ஹுங்காரேண மஹாதேவ: ஸ்தம்பிதோத த்ரிலோசன: । ஜ்ரும்பிதம் தத் தநுர்த்ருஷ்ட்வா ஶைவம் விஷ்ணு பராக்ரமை: । அதிகம் மேநிரே விஷ்ணும் தேவாஸ் ஸர்ஷிகணாஸ்ததா ।' என்று சொன்னார். ஸ்ரீபதரிகாஶ்ரமத்தில் ருஷி வேஷம் தரித்துக்கொண்டவராய் தாமனுக்குப் பிள்ளையாய், நரனுக்கு ஸஹாயனாயிருக்கும் நாராயணனுடன் யுத்தம் செய்ய ஆரம்பித்து அவரால் ஸம்ஹாரம் செய்யவேண்டுமென்று நினைக்கப்பட்ட ருத்திரன் தகப்பனாருடையவும் பிள்ளையினுடையவும் நடுவில் நுழைந்திருக்கிற பருமனால் தெரிவிக்கப்பட்டவராய் அவரைச் சரணமாக அடைந்து எல்லா லோகங்களுக்கும் சரணயனாகிய அந்த நாராயணனால் காப் பாற்றப்பட்டாரென்று மஹாபாரதத்தில் 2 'ப்ரஸாதயாமாஸ பவோ தேவம் நாராயணம் ப்ரபும் । ஶரணம் ச ஜகாமாத்யம் வரேண்யம் வரதம் ஹரிம் ॥' என்றாரம்பித்துச் சொல்லப்பட்டது. அவர்களுக்கு விசேஷமான பலங்களைக் கொடுத்ததும் அந்த மஹா பாரதத்திலேயே குண்டதரோபாக்யானத்தில் 3 'யுக கோடி ஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ: । புனஸ்த்ரைலோக்யதாத்ருத்வம் ப்ராப்தவாநிதி ஶுஶ்ரும ॥'

---

1 மஹாபாஹு:-பாஹு-பலத்தையுடையவராகிய, த்ரிலோசன: - மூன்று கண்களையுடைய ருத்திரன், அத-பிறகு, ஹுங்காரேண-ஹும் என்னும் ஶப்தத்தினால், ஸ்தம்பித -ஸ்தப்தமாக நிறுத்தப்பட்டார், ஶைவம் - சிவனுடையதாகிய, தத - அந்த, தனு:-தனுஸ்ஸை, விஷ்ணு பராக்ரமை:-பகவானுடைய பராக்ரமங்களினால், ஜ்ரும்பிதம் - முறிந்ததாக, த்ருஷ்ட்வா - பார்த்து ததா—அப்பொழுது, ஸர்ஷிகணா:-ருஷிகளின் கூட்டங்களோடு கூடிய, தேவா: தேவதைகள், விஷ்ணும் - பகவானை, அதிகம் - மேற்பட்டவனாக, மேனிரே - எண்ணினார்கள்

2 பவ:-ருத்திரன், தேவம் - தேவனையும், ப்ரபும் - ப்ரபுவாயிருக்கிற, நாராயணம் - நாராயணனை, ப்ரஸாதயாமாஸ - அனுக்ரஹம் செய்யும்படி பிரார்த்தித்தார், வரதம் - வரத்தைக் கொடுக்கிற, ஆத்யம் - முதன்மையான, வரேண்யம் - சிறந்த ஹரிம் - விஷ்ணுவை, ஶரணம் ச - ஶரணமாகவும், ஜகாம - அடைந்தார்

3 பத்மபூ:-ப்ருமமா, யுககோடிஸஹஸ்ராணி-ஆயிரம் கோடி யுகங்கள், விஷ்ணும் - பகவானை, ஆராத்ய - ஆராதனம் செய்து, புன: -மறுபடியும், த்ரைலோக்ய தாத்ருத்வம் - மூன்று லோகங்களுக்கும் ப்ரும்மாவாக விருக்கையை, ப்ராப்தவான்-அடைந்தார், இதி - என்று, ஶுஶ்ரும - கேள்விப்படுகிறோம்

என்று சொல்லப்பட்டது. வேறு உபாக்யானத்திலும் 1 'புரா ஸ்ருஷ்ட: மயா ப்ரஹ்மா மத்யஜ்ஞமயஜத் ஸ்வயம் | ததஸ்தஸ்மை வராந் ப்ரீதோ ததாம்யஹமநுத்தமாந் || மத்புத்ரத்வம் ச கல்பாதௌ லோகாத்யக்ஷத்வமேவ ச |' என்று சொல்லப்பட்டது. தாமபுத்திரருடைய துக்கத்தைப் போக்குகிற ஸந்தாபத்திலும் 2 'விஶ்வரூபோ மஹாதேவ: ஸர்வமேதே மஹாக்ரதௌ | ஜுஹாவ ஸர்வபூதாநி ஸ்வயமாத்மாநமாத்மநா ||' என்றாரம்பித்து 3 'மஹாதேவஸ்ஸர்வமேதே மஹாத்மா ஹுத்வாத்மாநம் தேவதேவோ பபூவ || விஶ்வாந் லோகாந் வ்யாப்ய விஷ்டப்ய கீர்த்த்யா விராஜதே த்யுதிமாந் க்ருத்திவாஸா: ||' என்று சொல்லப்பட்டது. இதுவே பஹ்ருசசாகையில் 'இந்த தேவனாகிய விஷ்ணுவிற்கு ஹவிஸ்ஸுக்களினால் ப்ரீதியை உண்டுபண்ணி ருத்திரன் ருத்திரனுடையதாகிய பெருமையை அடைந்தார்' என்றர்த்தமுள்ள வாக்யம் சொல்லப்படுகிறது. அப்படியே ருத்திரனுக்கு பசுக்களுக்குப் பதியாக இருக்கையும் வரனாக வேண்டிக்கொண்டதினால் உண்டானது என்பதும் 'அந்த ருத்திரன் வரத்தை வேண்டிக்கொள்ளுகிறேன் நானே பசுக்களுக்கு அதிபதியாயிருக்க வேண்டும் என்று சொன்னார்; ஆகையினால் ருத்திரன் பசுக்களுக்குப் பதியானார்' என்றர்த்தமுள்ள வாக்யத்தினால் சொல்லப்படுகிறது. திருநாராயணீ

---

1 புரா - முன்பு, மயா - என்னால், ஸ்ருஷ்ட - ஸ்ருஷ்டிக்கப்பட்ட, ப்ருஹ்மா - ப்ருஹ்மாவானவர், ஸ்வயம் - தானே, மத்யஜ்ஞம் - என்னைப்பற்றிய யாகத்தை, அயஜத - செய்தார், தத - பிறபாடு, ப்ரீத - ப்ரீதியை யடைந்தவனாகிய, அஹம் - நான், தஸ்மை - அந்த ப்ருஹ்மாவின் பொருட்டு, கல்பாதௌ - ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில், மத்புத்ரத்வம் - எனக்குப் பிள்ளையாயிருக்கையையும், லோகாத்யக்ஷத்வம் - லோகங்களுக்கு யஜமானனாக இருக்கையுமாகிற, அனுத்தமான - மிகவும் சிறந்த, வரான - வரங்களை, ததாமி - கொடுக்கிறேன்.

2 விஶ்வரூப - ப்ரபஞ்சத்தை ரூபமாகவுடைய, மஹாதேவ: - ருத்திரன், ஸர்வமேதே - ஸர்வமேதமென்கிற, மஹாக்ரதௌ - பெரிய யாகத்தில், ஆத்மனா - மனஸ்ஸினால், ஸர்வபூதாநி - எல்லா ப்ராணிகளையும், ஆத்மானம் - தன்னையும், ஸ்வயம் - தானே, ஜுஹாவ - ஹோமம் செய்தார்.

3 மஹாத்மா - மஹாத்மாவாகிய, மஹாதேவ - ருத்திரன், ஸர்வமேதே - ஸர்வமேத என்கிற யாகத்தில், ஆத்மானம் - தன்னை, ஹுத்வா - ஹோமம் செய்து, தேவதேவ - தேவதேவனாக, பபூவ - ஆனார், விஶ்வான - எல்லாலோகான - லோகங்களை, வ்யாப்ய - வ்யாபித்துக்கொண்டு, விஷ்டப்ய - தாங்கிக்கொண்டு, த்யுதிமான - காந்தியை யுடையவனாயும், க்ருத்திவாஸ: - யானைத் தோலை வஸ்திரமாக வுடையவனாயும், விராஜதே - விளங்குகிறார்.

யத்தில் எல்லாத் தேவதைகளும் பகவானை ஆராதிக்கிறவர்கள் என்பதும் அவருக்கு வசப்பட்ட கதியை உடையவர்களென்பதும் 1 'தம் தேவா ருஷயஶ்சைவ நாநா தநு ஸமாஶ்ரிதா: | பக்த்யா ஸம்பூஜயந்தீஹ கதிம் சைஷாம் ததாதி ஸ: ||' என்று சொல்லப்பட்டது. யஜ்ஞாகரஹாராத்யாயத்திலும் பகவானே எல்லாக் காமங்களினாலும் ஆராதனம் செய்யத்தக்கவன் என்பதும், ப்ருமமா முதலிய எல்லோரும் அவனுடைய அனுக்ரஹத்தினால் யஜ்ஞத்தில் பாகங்களையடைந்தவர்களென்பதும் 2 'ததஸ்தே விபுதா: ஸர்வே ப்ரஹ்மா ச ருஷயஶ்ச யே | வேதத்ருஷ்டேந விதிநா வைஷ்ணவம் க்ரதுமாரபந் || தஸ்மிந் ஸத்ரே ததா ப்ரஹ்மா ஸ்வயம் பாகமகல்பயத் | தேவா மஹர்ஷயஶ்சைவ ஸர்வே பாகாநகல்பயந் || தே கார்தயுகதர்மாண: பாகா: பரமஸத்க்ருதா: | ப்ராபுராதித்யவர்ணம் தம் புருஷம் தமஸ: பரம் ||' என்றும், பிறகு பகவானுடைய வாக்யம் 3 'யேந ய: கல்பிதோ பாக: ஸ ததா ஸமுபாகத: | ப்ரீதோஹம் ப்ரதிஶாம்யத்ய பலமாவ்ருத்தி லக்ஷ

1 தேவா -தேவதைகளும், ருஷயஶ்சைவ - ருஷிகளும், நாநா தநுஸமாஶ்ரிதா -அனேகச ஶரீரங்களை அடைந்தவர்களாய்க்கொண்டு, தம் என்ம-அந்த இந்தப் பகவானை, பக்தயா - பக்தியினால், ஸம்பூஜயந்தி - பூஜை செய்கிறார்கள், ஸ. - அந்தப்பகவான், ஏஷாம் — இவர்களுக்கு, கதிம் - கதியை, ததாதி - கொடுக்கிறான்

2 தத -பிறபாடு, தே - அந்த, ஸர்வே - எல்லா, விபுதா -தேவதைகளும், ப்ருமமா — ப்ரும்மாவும், தேச - அந்த, மஹர்ஷய -மஹருஷிகளும், வேதத்ருஷ்டேன - வேதத்தினால் கண்டறியப்பட்ட, விதிநா - விதியினால், வைஷ்ணவம் - விஷ்ணுவைத் தேவதையாகயுடைய, க்ரதும - யஜ்ஞத்தை, ஆரபந - ஆரம்பித்தார்கள், தஸ்மிந - அந்த, ஸத்ரே - யாகத்தில், ப்ரும்மா - ப்ரும்மாவானவர், ததா - அப்பொழுது, ஸ்வயம - தான், பாகம் - பாகத்தை, அகல்பயத - செய்தார், அதாவது பகவானுக்கு ஸமர்ப்பித்தார், தேவா: - தேவதைகளும், ஸர்வே - எல்லா, மஹர்ஷயஶ்ச - மஹருஷிகளும், பாகாந - பாகங்களை, அகல்பயந - செய்தார்கள், கார்த்தயுகதர்மாண -க்ருதயுக தர்மப்படி செய்யப்பட்ட, பரம ஸத்க்ருதா -மிகவும் பூஜை செய்யப்பட்ட, தே - அந்த, பாகா: - பாகங்கள், தமஸ -தமோகுணத்திற்கு, பரம - மேலே இருக்கிற, ஆதித்யவர்ணம - ஸூர்யனுடைய வர்ணத்தைப் போன்ற வர்ணத்தையுடைய, தம - அந்த, புருஷம - புருஷனை, ஆபு:-அடைந்தன.

3 யேன - எவனால், ய:-எந்த, பாக -பாகம், கல்பித:-செய்யப்பட்டதோ, ஸ:-அது, ததா - அப்படியே, ஸமுபாகத -வந்து சேர்ந்தது, ப்ரீத -ப்ரீதியை யடைந்திருக்கிற, அஹம - நான், அத்ய - இப்பொழுது, ஆவ்ருத்தி லக்ஷணம் - திரும்பி வருவதை லக்ஷணமாகவுடைய, பலம் — பலத்தை, ப்ரதிஶாமி - கொடுக்கிறேன்

ர்வ்யக்திர் லக்ஷணம்॥' என்றும், அப்படியே 1 'யே ச யஜ்ஞைர் யக்ஷ்யந்தே ஸர்வலோகேஷு வை ஸுரா:। கல்பயிஷ்யந்தி வோ பாகாந் தே நரா வேதகல்பிதாந்॥ யோ மே யதா கல்பிதவாந் பாகமஸ்மிந் மஹாக்ரதௌ। ஸ ததா யஜ்ஞபாகார்ஹோ வேதஸூத்ரே மயா க்ருத:॥' என்றும் நிரூபிக்கப்பட்டது காமகாண்டத்தில் முதல் அத்யாயத்தில் 2 'த்ரிபுவனேச்வர தேவ! கம் தேவமதிகம் தவ। யஸ்மாந் மானஸமவ்யக்ரம் க்ருத்வா நித்யமாராத்யஸே॥ ஜபஹோமநமஸ்காரைஸ்தம் வதஸ்வ தயாமய।' என்று பார்வதியினால் கேட்கப்பட்ட ருத்திரன் 3 'ச்ருணுஷ்வைகம் மஹாபா

---

1 யேச - எவர்களும், யஜ்ஞை - யஜ்ஞங்களினால், யக்ஷ்யந்தே - ஹோமம் செய்யப்போகிறார்களோ, ஸுரா - ஓ! தேவதைகளே, ஸர்வலோகேஷு - எல்லா லோகங்களிலும், தே - அந்த, நரா - மனிதர்கள், வ: - உங்களுக்கு, வேதகல்பிதாந் - வேதங்களினால் விதிக்கப்பட்ட, பாகாந் - பாகங்களை, கல்பயிஷ்யந்தி - செய்யப்போகிறார்கள், ய: - எவன், மே - எனக்கு, அஸ்மிந் - இந்த, மஹாக்ரதௌ - மஹா யாகத்தில், பாகம் - பாகத்தை, யதா - எப்படி, கல்பித்வாந் - செய்தானோ, ஸ: - அவன், ததா - அப்படியே, வேத ஸூத்ரே - வேதத்தைச் சேர்ந்த அதாவது கல்பஸூத்திரத்தில், யஜ்ஞபாகார்ஹ - யஜ்ஞத்தில் பாகத்தையடையத் தகுந்தவனாக, மயா - என்னால், க்ருத - செய்யப்பட்டான்

2 த்ரிபுவனேச்வர - மூன்று லோகங்களுக்கு ஈச்வரனாகிய, தேவ - ருத்திரனே, யஸ்மாத் - எவனிடத்திலிருந்து, மானஸம் - மனதை, அவ்யக்ரம் - சலிக்காததாக, க்ருத்வா - செய்து, ஜபஹோம நமஸ்காரை - ஜபம், ஹோமம், நமஸ்காரம் இவைகளினால், தவ - உனக்கு, அதிகம் - மேற்பட்டவனாகிய, கம் - எந்த, தேவம் - தேவனை, நித்யம் - தினந்தோறும், ஆராத்யஸே - ஆராதனம் செய்கிறீர், தம் - அவனை, வதஸ்வ - சொல்லும்

3 மஹாபாகே - சிறந்தவளாகிய பார்வதியே, த்வம் - நீ, ச்ருணுஷ்வ - கேள், யதா - எப்படி, நித்யம் - தினந்தோறும், அஹம் - நான், நமாமி - ஸேவிக்கிறேனோ, ததா - அப்படியே, ப்ரும்மாத்யா - ப்ரும்மா முதலியவர்களும், முனய: ச ஏவ - ருஷிகளும், தபோத்யாந ஸமாதிபி - தபஸ், த்யானம், த்யானம், இவைகளினால், யம் - எந்தப் பகவானை, ஸதா - எப்பொழுதும், ஆராத்யந்தி - ஆராதனம் செய்கிறார்களோ, ஸூரய: - நித்ய ஸூரிகள், ஸதா - எப்பொழுதும், பச்யந்தி - எவனைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்களோ, தம் - அந்தப் பகவானையும், தஸ்மிந் - அவனிடத்தில், தர்மஸ்ய - தர்மத்தினுடைய, நிர்ணயம் - நிச்சயத்தையும், யதார்த்தம் - உண்மையாக, வக்ஷ்யே - சொல்லப்போகிறேன், அஜ்ஞானார்ணவமக்னும் - அஜ்ஞானமாகிற ஸமுத்திரத்தில் முழுகி இருக்கிற, ஸர்வேஷாம் - எல்லா, ஆத்மனும் - ஆத்மாக்களுக்கும், அயம் - இந்த, ச்ரீமாந் - லக்ஷ்மியோடு கூடினவனாகிய, விஷ்ணு: - விஷ்ணுவானவர், உத்தாரார்த்தம் - தாண்டிவைக்கிறதற்காக ஏற்பட்ட, தாமோடுப - தாமமயமாகிய தெப்பமாக, உதாஹ்ருத: - சொல்லப்பட்டான்.

யத்ர நித்யம் ஸநாதநம் ப்ரஹ்மாத்ய ஸநகாத்யைஶ்ச ஸதைவ யே யோகிந: யாந்தி யத்ர யாந்தி ஸதா ஸ்ரீ ஸ்ரீ யோகிந: பரம் பதம் தந்ததைவ யதா ஸூக்ஷ்ம பஸ்யந்தி ஸூரய: தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பஶ்யந்தி ஸூரய: ஸ்ரீ ஜாத உத்தராயணே ஜாதஸ்ஸ:॥' என்று சொன்னார் ஸ்ரீ நாரஸிம்ஹ புராணத்திலும் 1 'ப்ரஹ்மாத்யா ஸர்வதேவா விஷ்ணுமாராத்ய தேவா: ஸ்வம் ஸ்வம் பதமநுப்ராப்தா: கேஶவஸ்ய ப்ரஸாதத:॥' என்று சுருக்கமாகச் சொல்லப்பட்டது. பிறகு ருத்திரன் ஈஶ்வரனல்லவென்பதில் மற்றொரு காரணத்தையும் சொல்லுகிறார் — 'யஸ்ய வாமேநாக்ரே' என்றாரம்பித்து. இவ்விடத்தில் தவந்தவஸமாஸத்தில் சேர்க்கப்பட்டிருந்த போதிலும் 'பவ-ம்' என்னும் பதம் கங்கையைத் தரித்ததாகிய கதையைச் சொல்லுகிறபடியினால் புத்தியினால் பிரித்து வைத்துக்கொண்டு 'ஸ:' என்று இவ்விடத்தில் அதைச்சொல்லியிருக்கிறது. அன்றிக்கே 'ஸ:' என்பது ஶிவன் என்கிற பெயர் பரஸித்தமாயிருக்கிறதென்பதைச் சொல்லுகிறதாகவுமாம். அப்படியே ஸ்ரீ பாகவதத்தில் 2 'ஸம்சிந்தயேத் பகவதஶ்சரணாரவிந்தம் வஜ்ராங்குஶத்வஜஸரோருஹலாஞ்சநாட்யம் ॥ யச்சௌசநிஸ்ஸ்ருதஸரித்ப்ரவரோதகேந தீர்த்தேந மூர்த்நி விக்ருதேந ஶிவஶ்ஶிவோऽபூத் ॥' என்று சொல்லப்பட்டது. மஹா பாரதத்தில் உத்யோக பர்வத்திலும் இந்த அபிப்ராயத்தினால் 3 'அத்ர ப்ரஹ்ம விதாம் ஶ்ரேஷ்ட: பதந்தீம் கங்கநாத் ச்யுதாம் । ப்ரக்ருஹ்ய

1 ப்ருஹ்மாத்ய:-ப்ருஹ்மா முதலிய ஸர்வே - எல்லா, தேவா: - அந்த, ஸுரா: - தேவதைகள், புரா - முன்பு, விஷ்ணும் - விஷ்ணுவை, ஆராத்ய - ஆராதனம் செய்து, கேஶவஸ்ய - விஷ்ணுவினுடைய, ப்ரஸாதத: -அனுக்ரஹத்தினால், ஸ்வம் ஸ்வம் - தங்கள் தங்களுடையதாகிய, ஸ்தானம் - ஸ்தானத்தை, அனுப்ராப்தா: - அடைந்தார்கள்.

2 வஜ்ராங்குஶத்வஜஸரோருஹ லாஞ்சனாட்யம் - வஜ்ரம்,மாவட்டி, கொடி, தாமரைப்பூ, இவைகளாகிற அடையாளங்கள் நிறைந்த, பகவத: -பகவானுடைய சரணாரவிந்தம் - தாமரைப்பூக்களைப்போன்ற திருவடிகளை, ஸஞ்சிந்தயேத் - த்யானம் செய்யவேண்டும், ஶிவ: -ருத்திரன், மூர்த்நி - தலையில், விக்ருதேந - தரிக்கப்பட்ட, தீர்த்தேந - பரிசுத்தமாகிய, யச்சௌசநிஸ்ஸ்ருதஸரித் ப்ரவரோதகேந - எந்தத் திருவடிகளை அலம்பினதினால் உண்டாகிய கங்கையின் ஜலத்தினால், ஶிவ:-பரிசுத்தனாக, அபூத் - ஆனார்.

3 அத்ர - இவ்விடத்தில், ப்ருஹ்ம விதாம் -ப்ருஹ்மவித்துக்களுக்குள் சிறந்தவராகிய, மஹாதேவ: -ருத்திரன், ககநாத் - ஆகாசத்திலிருந்து, ச்யுதாம் - நழுவியிருக்கிற, பதந்தீம் - கீழேவிழுகிற, கங்காம் - கங்கையை, ப்ரக்ருஹ்ய - தாங்கி, மாநுஷேலோகே - மனுஷ்யலோகத்தில், ப்ரதமௌ- கொடுத்தார்.

[illegible] ॥' என்று சொலலபபட டது இது ஈஶ்வர ஸம்ஹிதையில ஆராதனம செயதவராகிய பரும மாவினாலேயே 1 '[illegible] ॥' என்று ஸ்பஷ்டமாகச சொலலபபட்டது இபபடிக கஙகை ருததிரனுக கும பரிசுததியைக் கொடுககககூடியதா யிருநதால அபபொழுது 2 '[illegible]' என்றுசொலலி யிருபபது எபபடிப பொருநதும? என்னில இபபடி இவவிடததில ஸ்வபாவத்திலேயே பரிசுதத்மாக இருககை ருஷிகள ஸபாஶம செய்த தறகுக் காரணமாகச சொலலபபடுகிறது இஙகு சொலலபபடாததும அபபடிக கலபிககவேண்டிய திலலாததுமாகிய மறறொருவருடைய ஸமபநதம இநதக கஙகை பரிசுததமாக இருப்பதறகுக காரணமாகக கலபிபபது யுகதமலல அபபடிக கலபிததபோதிலும அறிவிககககூடிய காரணமாகக கலபிபபது உசிதம அதாவது ருததிரனால தலையினால தரிககபபட்டபடியினால பரிசுத்தமென்று தெரிநதுகொண்டு ஸபாஶம செய்தார்கள என்றாததம. பொதுவாகச சொலலி இருபபதினால ருத திரனுககும மறறவர்களுககும் பரிசுததியைக கொடுககககூடிய தென பது அபிபராயததில கொளளபபட்டது ஆகையினால் '[illegible]

1 ததா - அபபொழுது, மஹாமுனே - ஓ' மஹருஷியே, ஹரிபகதயா - பகவானிடத்தில பகதியினால், தர்ம:-தாமமானது, தரவீபூத:-ஜலமாக ஆச்சுது, தர்மபாநீயம் - தாமமாகிய ஜலததை, கருஹீதவா - எடுததுககொணடு, துஷ்ட யே - ஸநதோஷததிறகாக, நாதஸ்ய - பகவானுடைய, பதம-திருவடியை, பரயா-மிகுநத, பக்தயா - பகதியினால, க்ஷாளிதம - அலமபப்பட்டது, பாதயாகயாதிபி:- பாதயம், அர்கயம், முதலியவைகளினால், ஆசசிதம் - ஆராதனம் செய்யப்பட் டது, தத - அநத, அமபு - ஜலததை, ஹர:-ருத்திரன, பாவனாததம - தன்னைப் பரிசுததம செயவதறகாக, யோகய -தகுநதவனாக, அஸமி - ஆகிறேன், இதி - என்று, அவதாரணாத - நிஶசயம செய்வதினால, பரயா-மிகுநத, பகதயா - பகதி யினால், ஶிரஸா - தலையினால, ஜடாமத்யே - ஜடையின நடுவில், ததார - தாஙகி னார், அத: - பிறகு, பஹூந - அனேகம, வாஷாயுதாந - லக்ஷம் வருஷங்கள, ஹர:-ருததிரன், ததா - அப்படியே, நமுமோச - விடவிலலை.

2 பவாஙகபதிதம - ருததிரனுடைய ஶரீரததில விழுந்த, தோயம் - ஜலத் தை, பவிதரமிதி - மிகவும பரிசுததமென்று, பஸ்ப்ருஶு:-ஸ்நானம் செய் தாரகள.

மாத்ரு ஸம்ஸம்ஶப்தவாச ஶவித்ருத்வ ஶப்தவாமதா' என்கிற இடத்தி லும் 'ஹாரஸ்' என்பதை 'ஶவித்ருக்வ' என்பதோடு அந்வயித்து ருத்திரனுக்குப் பரிசுத்தியைக் கொடுக்கும் தன்மையை உடையதென்று அர்த்தமறிந்து கொள்ளத்தக்கது 13



கஸ்யோத³ரே ஹரவிரிஞ்சமுக²: ப்ரபஞ்ச:
கோ ரக்ஷதீமமஜநிஷ்ட ச கஸ்ய நாபே⁴: ।
க்ராந்த்வா நிகீ³ர்ய புநருத்³கி³ரதி த்வத³ந்ய:
க: கேந வைஷ பரவாநிதி ஶக்யஶங்க: ॥ 14

கஸயோதரே ஹரவிரிஞச முக பரபஞச ?
கோ ரக்ஷதீ மமஜ நிஷ்ட ச கஸய நாபே ?
கராநதவா நிகீர்ய புனருதகிரதி தவதநய
க ? கேந வைஷ பரவாநிதி ஶகய ஶங்க:? ||

ப - ரை] கஸ்ய — வேறெவனுடைய, உதரே - வயிற்றில், ஹர விரிஞ்சமுக: ப்ரபஞ்ச:-ருத்திரன், பருமமா, முதலிய பரபஞ்சம் (இருக் கிறது), க: - வேறுயார், இமம் - இநத பரபஞசத்தை, ரக்ஷதி - காப் பாற்றுகிருன், கஸ்ய - வேறெவனுடைய, நாபே: - தொபபிளிலிருநது, (இநத டரபஞ்சம) அஜநிஷ்ட - உண்டானது, த்வதந்ய: — உம்மைததவிர வேறு, க: - யாா, க்ராந்த்வா - (இநத ப்ரபஞ்சததை) அளந்து, அனறிககே ஆக்ரமித்துக்கொணடு என்றுகவுமாம், நிகீர்ய — உள்ளே விழுங்கி, புந: - மறுபடியும், உத்கிரதி - வெளியில் உமிழ்கிருன். ஏஷ: - இந்த பரபஞ்சம், கேந - உம்மைத்தவிர வேறு எவனுல், பரவாந் - பரதேவதையை உடையது, இதி - என்று, ஶக்யஶங்க: - ஸந்தேஹிக்க முடியும் 4

பா] இபபடி அநதநத தேவதைகளினிடததில பகதியுடையவா களிலை பரதேவதையெனறு கலபனை செய்யபபடட பருமமா ருத்தி ரன் இவாகளினுடைய சரிததிரஙகளிலை அவர்கள ஈஶ்வராகளல்ல என்பதும, காமஙகளுககு வசபபட்டவாகளென்பதும, பகவானே ஸர் வேஶ்வரனென்பதும உறுதிபபடுத்தபபடடது. பிறகு ஈஶ்வராக ளல்லவென்று ஒபபுககொளளபபடட மறற வஸ்துககளும் கீழ்ச் சொல்லிய தேவதைகளும் ஒரு வயத்யாஸமு மில்லாமல பாதந் திராகள, ஸ்ருஷ்டிககபபடுகிறவாகள, ஸம்ஹரிக்கப் படுகிறவாகள,

ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்॥' என்றும் சொல்லப்பட்டது ஆஶ்ரயித்தவர்களின் பிரிவை ஸஹிக்காத ஸ்வபாவமாகவுமாம் அதையும் 1 'க்ஷணேபி தே யத்விரஹோ(அ)திதுஸ்ஸஹ:' என்று மேலே சொல்லப்போகிறார் சிக்ஷிக்கவேண்டுமென்று ஆரம்பித்திருந்தபோதிலும் 2 'ஸாம்நைவ ஹிதயா வாசா' என்று சொல்லியிருக்கிற விதமாக நல்லவார்த்தையையே ப்ரதானமாகவுடையவனா யிருக்கையாகவுமாம் 'தயாளு:' என்பது தனக்கு வேறொரு ப்ரயோஜனத்தை எதிர்பாராமலே அயலாருடைய துக்கத்தைப் போக்கடிக்க வேண்டுமென்கிற ஆசையுடையவன் இதுவும் 3 'ஆந்ருஶம்ஸ்யம் அநுக்ரோஶ: ஶ்ருதம் ஶீலம் தம: ஶம:। ராகவம் ஶோபயந்த்யேதே ஷட்குணா: புருஷோத்தமம்॥' என்றிவை முதலியவைகளினால் சொல்லப்படுகிறது மிகவும் துக்கம் நிறைந்ததும் வயத்பாஸமுள்ளதுமாகிய ஸ்ருஷ்டியைச் செய்ததினால் நைர்க்ருண்யம் முதலிய தோஷங்கள் உண்டாகாது என்று 4 'வைஷம்ய நைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத் ததா ஹி தர்ஶயதி' என்று ஸூத்ரகாரனாலேயே நிராகரிக்கப்பட்டது ஆகையினாலேயே மோக்ஷமும் சிலருக்குச் சில காலங்களில் கிடைப்பதும் பொருந்தும் 'மதுர:' என்பது அவனே ரஸம்' என்றும், 'ஆனந்தமே ப்ருஹ்மம்' என்றும், 'ஸுகமே ப்ருஹ்மம் எங்கும் நிறைந்தது ப்ருஹ்மம்' என்று மாத்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளில் ப்ரஸித்தமாகிய எல்லையில்லாத ஆனந்த ஸ்வரூபம். ஆகையினாலேயே உபாயத்தை யனுஷ்டிக்கும் தசையிலும் 'மதுரம்' என்பது 5 'ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோ(அ)த்யர்த்தம்

---

1 தே - உனக்கு, க்ஷணேபி – ஒருக்ஷணமும், யத்விரஹ - எவருடைய பிரிவு, அதிதுஸ்ஸஹ -மிகவும் பொறுக்கமுடியாததோ

2 நல்லவார்த்தையோடுகூடிய வார்த்தையினால்.

3 ஆந்ருஶம்ஸ்யம் - தயை, அநுக்ரோச:-அனுதாபம், ஶ்ருதம் - ஶாஸ்த்ரம், ஶீலம் - நல்ல நடத்தை, தம:-வெளி இந்திரியங்களை அடக்குதல், ஶம:-மனதை அடக்குதல், ஏதே - இந்த, ஷட்குண -ஆறுகுணங்கள், புருஷோத்தமம் - புருஷோத்தமனாகிய, ராகவம் - ராமனை, சோபயந்தி - அலங்கரிக்கின்றன

4 வைஷம்யநைர்க்ருண்யே—வைஷம்ய - பக்ஷபாதம், நைர்க்ருண்ய - தயை இல்லாமை, இவைகள், ந - பகவானுக்கு இல்லை ஸாபேக்ஷத்வாத - ஜீவாத்மாக்கள் செய்த கர்மங்களை அபேக்ஷிக்கிறபடியினால், ததாஹி - அப்படியே, தர்ஶயதி- ஶ்ருதி சொல்லுகிறது.

5 ஜ்ஞாநின -ஜ்ஞானிக்கு, அஹம் - நான், அத்யர்த்தம்-மிகவும், ப்ரிய:-ப்ரியன், ஸச - அந்த ஜ்ஞானியும், மம—எனக்கு, ப்ரிய,-அப்படியே ப்ரியன்.

ஹம் ஸ ச மம ப்ரிய:’ என்றும், 1 ‘கதயந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச’ என்றும் 2 ‘க்வ நாகப்ருஷ்டகமநம் புநராவ்ருத்தி லக்ஷணம் | க்வ ஜபோ வாஸுதேவேதி முக்திபீஜமநுத்தமம் ||’ என்றும் சொல்லப்படுகிறது வார்த்தையினாலும் ஸரீரத்தினாலும் ஆனந்தமாக இருக்கும் தன்மை சொல்லப்படுகிறதாகவுமாம் இதுவும் 3 ‘ப்ரியவாதீ ச பூதாநாம் ஸத்யவாதீ ச ராகவ:’ என்றும், 4 ‘ஸோமவத் ப்ரியதர்ஶந:’ என்றும், 5 ‘ரூபௌதார்ய குணை: பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்’ என்றும், 6 ‘ஸாக்ஷாந்மந்மத மந்மத:’ என்றுமிவை முதலிய இடங்களில் ப்ரஸித்தமாயிருக்கிறது ஆகையினாலேயே கொல்லவந்த தசையிலும் ப்ரீதியையுடைய பீஷ்மருக்கும் கோபத்தையுடைய ஶிசுபாலனுக்கும் ஆனந்தமாக இருந்ததென்பது ப்ரஸித்தம் ‘ஸுமுக:’ என்பது தன்னை ஆஶ்ரயித்தவர்களின் அபராதங்களினாலும் அதை எடுத்துக் காட்டுகிறவர்களினாலும் கலக்கமுடியாதவன் ஸுக்ரீவன் முதலானவர்களைக் குறித்து இப்படியே 7 ‘மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந | தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்’ என்று தாமே சொல்லியிருக்கிறார் ‘ஸம:’ என்பது ஜாதி, குணம், நடத்தை, முதலியவைகளினால் வ்யத்யாஸத்தையுடையவர்களுக்கும் ஶரணமாக அடையத் தகுந்தவனாக இருப்பதில

---

1 மாம் - என்னை, நித்யம் - தினந்தோறும், கதயந்த: - சொல்லிக்கொண்டு, துஷ்யந்தி - ஸந்தோஷப்படுகிறார்கள், ரமந்தி ச - த்ருப்தியடைகிறார்கள்

2 புனராவ்ருத்தி லக்ஷணம் - திரும்பி வருவதை லக்ஷணமாகவுடைய, நாகப்ருஷ்டகமனம் - ஸ்வர்க்கலோகத்திற்குப் போவது, க்வ - எங்கே, வாஸுதேவேதி - வாஸுதேவா என்று, முக்திபீஜம் - மோக்ஷத்திற்குக் காரணமாகிய, அனுத்தமம் - உயர்ந்த, ஜப: - ஜபமானது, க்வ - எங்கே

3 ராகவ:-ராமன், பூதானாம் - எல்லா ப்ராணிகளுக்கும், ப்ரியவாதீ-ப்ரியமான வார்த்தையைச் சொல்லுகிறவன், ஸத்யவாதீ ச - ஸத்யமான வார்த்தையைச் சொல்லுகிறவன்

4 ஸோமவத் - சந்திரனைப்போல, ப்ரியதர்ஶந:-மிகவும் ப்ரியமான-பார்வையுடையவன்

5 ரூப - ரூபம், ஔதார்ய - ஔதார்யம், இவைகளாகிற, குணை:-குணங்களினால், பும்ஸாம் - மனிதர்களினுடைய, த்ருஷ்டிசித்தாபஹாரிணம் - கண், மனது இவைகளை அபஹரிக்கிற.

6 நேராக மன்மதனுக்கும் மன்மதனாகிய.

7 மித்ரபாவேந - மித்ரன் என்கிற எண்ணத்தினால், ஸம்ப்ராப்தம்-வந்தடைந்தவனை, கதஞ்சந - எப்படியும், நத்யஜேயம் - விடமாட்டேன், தஸ்ய - அவனுக்கு, தோஷ:- தோஷம், ஸ்யாத்யத்யபி-இருந்தாலுமிருக்கட்டும்.

வ்யத்யாஸமில்லாதவன் இது 'எல்லா ப்ராணிகளும் ஶரணம், ஸுஹ்ருத்' என்றாத்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் சொல்லப்படுகிறது ஸ்ம்ருதியிலும் 1 'ஸர்வலோக ஶரண்யாய' என்றும், 2 'ஸுஹ்ருதம் ஸர்வ பூதானாம்' என்றும், 3 'ஸமோऽஹம் ஸர்வ பூதேஷு' என்றிவை முதலிய இடங்களில் சொல்லப்பட்டது. 'க்ருதீ' என்பது தனக்காக ஒன்றும் செய்யவேண்டியதில்லாதவன் இதைத் தானே 4 'நமே பார்தாஸ்தி கர்தவ்யம்' என்று சொன்னார் அன்றிக்கே ஆஶ்ரிதர்களைக் காப்பாற்றுவதினால் தான் க்ருதக்ருத்யனாக இருக்கிறான் என்றாத்தமாகவுமாம் இதுவும் 5 'அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் । க்ருதக்ருத்யஸ்ததா ராம:' என்று சொல்லப்பட்டது அன்றிக்கே 'க்ருதம்' என்பது உபகாரம், 'க்ருதஜ்ஞ:' என்கிற இடத்தில் அப்படி அர்த்தம் சொல்லுவதைக் கண்டிருப்பதினால் அதை உடையவன் 'க்ருதீ', அதாவது தாமத்தை லோகத்தில் பரவச் செய்வதற்காகத்தான் அனுஷ்டானம் செய்கிறவன் என்றர்த்தம் எவ்விதத்திலும் ப்ரபஞ்சத்திற்குபகாரம் செய்வதையே வ்யாபாரமாகவுடையவன் என்றாத்தம் ஆஶ்ரிதர்களிடங்களில் இது விஶேஷமாக உண்டென்பது கீதையில் 6 'யோகக்ஷேமம் வஹாம்யஹம்', 7 'ததாமி புத்தியோகம்' என்றிவை முதலியவைகளினால் சொல்லப்படுகிறது. அயலாருபகாரம் செய்ததை அறிகிறவன் க்ருதஜ்ஞன், அதாவது அல்ப உபகாரத்தையும் பெரிதாக எண்ணுகிறவன் என்று

---

1 எல்லாலோகங்களுக்கும் ஶரணமாக அடையத்தகுந்தவனாகிய

2 எல்லா ப்ராணிகளுக்கும் ஸுஹ்ருத்தாகிய

3 அஹம் - நான், ஸர்வபூதேஷு - எல்லா ப்ராணிகளிடங்களிலும், ஸம:- ஸமமானவன்.

4 பார்த்த - ஓ அர்ஜுந, மே - எனக்கு, கர்த்தவ்யம் - செய்யவேண்டியது, நாஸ்தி - இல்லை

5 ததா - அப்பொழுது, ராம -ராமன், விபீஷணம் - விபீஷணனை, லங்காயாம் - லங்காபட்டணத்தில், ராக்ஷஸேந்த்ரம் - ராக்ஷஸர்களுக்கு ராஜாவாக, அபிஷிச்ய - பட்டாபிஷேகம் செய்து, க்ருதக்ருத்ய: - க்ருதக்ருத்யனாய் (ஸந்தோஷப்பட்டார்).

6 நான் புதிதான ஐஶ்வர்யத்தைக்கொடுப்பதையும், இருப்பதைக் காப்பாற்றுவதையும் செய்கிறேன்

7 தம் - அப்படிப்பட்ட, புத்தியோகம் - புத்தியின் ஸம்பந்தத்தை, ததாமி - கொடுக்கிறேன்

நாதபாயம இது 1 'ந ஸ்மரத்யபகாராணாம் ஶதமப்யாத்மவத்தயா। கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி॥' என்று சொல்லப்படுகிறது தானும 2 'கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம். ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்பதி॥' என்று சொல்லியிருக்கிறான் அன்றிக்கே எதாவது ஒரு ஸமயத்தில தன்னால செய்யப்பட்ட, தன்னை ஆஶ்ரயித்தவர்களின் ப்ரார்த்தனைப்படி நடக்காததை அந்தந்த ஸமயங்களில் அவர்கள் இஷ்டத்தைப் பூர்த்தி செய்யவில்லை என்று மிகுந்த அனுதாபத்துடன் நினைத்துக் கொண்டிருக்கிறான் ஆகையினால 'க்ருதஜ்ஞ:' என்னப்படுகிறானாகவுமாம இப்படியே 3 'ஶிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா' என்று தானே சொல்லியிருக்கிறான் இவ்விடத்தில 'அஸி (ஆகிறாய்)' என்று மத்யமபுருஷனாக (முன்னிலையாக)ச் சொல்லியிருப்பதினாலேயே நீ என்பதேற்பட்ட போதிலும அதிகமாகிய 'த்வம்' என்னும் பதத்தினால பொற்றாமரைப் பூவில வாஸனையைப்போலக் குணங்களுக்குத் தங்களுக்கு ஆதாரமான வஸ்துவினால பெருமையுண்டானதென்பது தெரிவிக்கப்படுகிறது இதுவும பெரியோர்களினால 4 'குணாஸ்ஸத்யஜ்ஞாநப்ரமுக உத த்வத்தயா ஶுபீயம் யாதா இதி ஹி நிர்ணேஷ்ம ஶ்ருதிவஶாத்' என்று சொல்லப்பட்டது 'அஸி (ஆகிறாய்)' என்று நிகழ்காலமாகச் சொல்லியிருப்பது காலங்களின் மாறுதல்களினால இப்படிப்பட்ட ஸ்வபாவங்களுக்கு

1 ஆத்மவத்தயா - நல்லஸ்வபாவமுடையவனாகையினால், அபகாராணாம்- அபகாரங்களின், ஶதமபி-அனேகத்தையும், நஸ்மரதி - நினைக்கிறதில்லை, கதம்சித - ஶ்ரமப்பட்டு, க்ருதேந-செய்யப்பட்ட, ஏகேந-ஒரு, உபகாரேண-உபகாரத்தினால, துஷ்யதி - ஸந்தோஷப்படுகிறான்

2 க்ருஷ்ணா - த்ரௌபதீ, தூரவாஸிநம - தூரத்திலிருக்கிற, மாம - என்னை, கோவிந்தேதி - கோவிந்தா என்று, ஆக்ரந்தத - கூப்பிட்டாள், யத - என்கிற எதுவோ, (அது) மே - எனக்கு, ப்ரவ்ருத்தம - மிகவும வருத்தியடைந்திருக்கிற, ருணமிவ - கடனைப்போல, ஹ்ருதயாத்-மனதிலிருந்து, நாபஸர்ப்பதி- போகிறதில்லை

3 ஶிரஸா - தலையினால், யாசத -யாசித்தவனாகிய, தஸ்ய - அந்தப் பரதனுடைய, வசனம் - வார்த்தை, மயா - என்னால், ந க்ருதம-செய்யப்படவில்லை

4 ஸத்யஜ்ஞாநப்ரமுகதய -ஸத்யம், ஜ்ஞானம், முதலிய, குணா -குணங்கள், த்வத்தத்தயா - உம்மை அடைந்திருப்பதினால், ஶுபீயம - ஶுபங்களாக இருக்கையை, யாதா -அடைந்தன, இதி - என்று, ஶ்ருதிவஶாத - ஶ்ருதி சொல்லி இருப்பதினால், நிர்ணேஷ்ம - நிஶ்சயம் செய்தோம,

மாறுதலுண்டாகுமோ என்கிற ஸந்தேஹத்தை நிராகரிப்பதற்காக 'ஸ்வாபாவிக:' என்பதற்குப் புண்யங்களின் மிகுதியினாலாவது மாறுதல்களினாலாவது அல்ல என்று தாத்பர்யம். நித்யஸூரிகள் முக்தர்கள் இவர்களுடைய குணங்கள் உமக்கு வசப்பட்டவைகள். உம்முடைய குணங்கள் மற்றவனுக்கு வசப்பட்டவைகளல்ல என்று தாத்பர்யம். 'ஜ்ஞானம், பலம், க்ரியை இவைகள் ஸ்வபாவத்தி லுண்டானவைகள்' என்றர்த்தமுள்ள வாக்யம் ச்ருதியில் சொல்லப்படுகிறதல்லவா. உம்மிடத்திலில்லாத கல்யாணகுணம் ஒன்றுமில்லை என்கிற அபிப்ராயத்தினால் பொதுவாகச் சுருக்கமாகச் சொல்லி முடிக்கிறார்—'ஸமஸ்த கல்யாண குணாம்ருதோததி:' என்று. 1 'ஸமஸ்தகல்யாணகுணாத்மகோ ஸௌ', 2 'தேஜோபலைச்வர்ய மஹாவபோத' என்றிவை முதலியது இங்கே எண்ணத்தக்கது. இவ்விடத்தில் 'கல்யாண குண' என்னும் பதத்தினால் குணங்களில்லாதது என்று சொல்லுகிற ச்ருதிவாக்யங்கள் உத்ஸர்காபவாத நியாயத்தினால் கெட்ட குணங்களைச் சொல்லுகிறதென்பது தெரிவிக்கப்படுகிறபடியினாலும், கல்யாணகுணங்கள் முழுமையுமிருக்கின்றன என்று சொல்லியிருப்பதினாலும், பரம்மம் குணமில்லாதது என்று சொல்லுகிறதும், சில குணங்களையுடையது என்று சொல்லுகிறதும் நிராகரிக்கப்பட்டது. 3 'யதா ரத்நாநி ஜலதேரஸங்க்யேயாநி புத்ரக! । ததா குணா ஹ்யநந்தஸ்ய ஹ்யஸங்க்யேயா மஹாத்மந:॥' என்றிவை முதலியவைகளை ஜ்ஞாபகப்படுத்துகிற 'குணாம்ருதோததி:' என்கிற பதங்களினால் குணங்கள் அளவில்லாதவென்பதும் முழுமையும் போக்யங்கள் என்பதும் தெரிவிக்கப்படுகிறது. பரம்மத்தின் ஸ்வரூபத்தைப்போல அவனுடைய குணங்களும் அனுபவிக்கத்தக்கவைகள் என்பது 'அவன் எல்லாக் கல்யாணகுணங்களையும் எல்லா வஸ்துக்களையுமறிந்த பரம்மத்துடன் அனுபவிக்கிறான்' என்றர்த்தமுள்ள ச்ருதிவாக்யத்தில் சொல்லப்படுகிறது. 'எந்த ஜீவாத்மா இந்த லோகத்தில் பரமாத்மாவை அறிந்துகொண்டு அவனைச் சரண

1 அஸௌ - இந்தப் பகவான், ஸமஸ்தகல்யாண குணாத்மக: - எல்லாக் கல்யாண குணங்களும் நிறைந்தவர்

2 தேஜஸ்ஸு, பலம், ஐச்வர்யம், ஜ்ஞானம் (முதலிய கல்யாண குணங்களுக்கு இருப்பிடம்).

3 புத்ரக - ஓ! குழந்தாய், ஜலதே: - ஸமுத்திரத்தினுடைய, ரத்னானி - ரத்னங்கள், யதா - எப்படி, அஸங்க்யேயானி - எண்ணிறந்தவைகளோ, ததா - அப்படியே, மஹாத்மன: - மஹாத்மாவாகிய, அனந்தஸ்ய - பகவானுடைய, குணா: - குணங்கள், அஸங்க்யேயா: - எண்ணிறந்தவைகள்

மாகவடைந்து இந்தக் கல்யாணகுணங்களையும் த்யானம் செய்கிறேன்' என்றாத்தமுள்ள தகரவித்யையில் சொல்லப்படுகிற ஶ்ருதிவாக்யத்தில் சொல்லுகிற ந்யாயத்தினாலே இந்த ஶ்ருதி வாக்யத்திலிருக்கும் 'கார' என்னும் பதம் கல்யாண குணங்களைச் சொல்லுகிறது 18



உபர்யுபர்யப்ஜபுவோபி பூருஷாந்
ப்ரகல்ப்ய தே யே ஶதமித்யனுக்ரமாத் ।
கிரஸ்த்வதேகைக குணாவதீப்ஸயா
ஸதா ஸ்திதா நோத்யமதோதிஶேரதே ॥ 19

உபர்யுபா யப்ஜ புவோபி பூருஷாந்
ப்ரகல்ப்ய தே யே ஶத மித்யனுக்ரமாத் ।
கிரஸ்தவ தேகைக குணா வதீப்ஸயா
ஸதா ஸ்திதா நோத்யமதோதி ஶேரதே ॥ 19

ப - ரை] அப்ஜபுவோபி - ப்ரும்மாக்களையும், பூருஷாந் - மனுஷ்யாகளாக, ப்ரகல்ப்ய - கல்பனைசெய்து, உபர்யுபரி - மேல மேலும், தே யே ஶதமித்யனுக்ரமாத்-'தேயேஶதம்' என்று சொல்லியிருக்கிற க்ரமத்தினால், ப்ரகல்ப்ய - கல்பனை செய்துகொண்டு, கிர꞉ - வேதவாக்யங்கள், த்வதேகைக குணாவதீப்ஸயா—த்வத்-உம்முடைய, ஏகைக - ஒவ்வொரு குணங்களின், அவதீப்ஸயா — எல்லையை அறிய வேண்டுமென்கிற ஆசையினால், ஸதா - எப்பொழுதும், ஸ்திதா - இருந்த போதிலும, உத்யமத꞉ - ஆரம்பத்திலிருந்து, நாதிஶேரதே - தாண்ட வில்லை. 19

பா] கீழச் சொல்லப்பட்ட எண்ணிறந்த குணங்கள ஒவ்வொன்றும எல்லையில்லாத மேன்மையை யுடையவைகள் என்பதை அபிப்ராயத்தில வைத்துக்கொண்டு சொலலுகிறா—'உபர்யுபரி' என்றாரம்பித்து 1 'உபர்யுப்யஸ ஸூரீவே', 2 'உஹ ஸஹதயோ꞉

---

1 உபரி, அதி, அத, இவைகள ஸமீபம என்னுமாதததைச் சொல்லுகின்றன.

2 உபயத, ஸாவத', என்னும பதஙகளோடு சேர்ந்திருக்கும்பொழுதும்,திக, உபரி முதலிய பதஙகள இரட்டித்துச் சொல்லப்பட்டிருக்கும் பொழுதும் இரணடாம வேற்றுமை செய்யவேண்டியது, அதைவிட மற்ற இடத்திலும காணப்படுகிறது

காயஞ்ரா யிமாவயஞ்ராதிஷ்டா த்ரிஷ்டா । த்வீயாऽऽதெ ஶ்ருவிதாணெஷ்டா தகொ஽நூ த்ராவி ஊஶ்ஶ்ருதெ॥' என்று சொலலியிருபபதிலை 'ஜ்யை ஹாவ:' எனபது இவவிடததில இரணடாம வேறறுமையாகச சொலலி இருககிறது ஐநதாம வேறறுமை இவவிடததில 'தவ:' எனனும விகுதியின அாததததைச சொலலாத விகுதியையுடைய 'உவரி' எனனும பததேதாடு சோநதிருபபதிலை உசிதமலல ஆறுமவேறறு மையும இரடடிததுச சொலலபபடுகிற 'உவரி' எனனும பததேதாடு சோநதிருககுமிடததில விசேஷமாக இரண்டாம வேறறுமையே விதிக கபபடடிருபபதிலை இவவிடததில அஙகீகரிககததககதலல (ஆகவே ஜ்யைஹாவ: உவயஞ்ாவரி – பரஜாபதிககு மேலே, வஞ்ராஷாநு - மனுஷ்யாகளை, வ்ருகலூ) - கலபனை செய்துகொணடு, அதாவது 'அது ஒரு பரஜாபதியின ஆனநதம' எனறு சொலலியிருககும வாகயதது றகுமேல 'தெ யெ ஶதம்' என்று கீழே சொலலியிருபபதைப போல வாகயததை வைததுக்கொணடு அது ஒரு மனுஷ்யனுடைய ஆனநதம எனறு கலபனைசெயது அதறகுமேலே கீழச்சொலலிய விதமாகவே அப படிபபடட மனுஷ்யாகளினுடைய ஆனநதம நூறுகொணடது மனுஷ்ய கநதாவாகளின ஆனநதம எனறு பெருககிககொண்டு போனால எனறு தாதபாயம ) அனறிககே 'ஜ்யைஹாவ: வஞ்ராஷாநு' எனறு ஒன்று சோதது அநத பரஜாபதியையே மறுபடியும மனுஷ்ய ஸ்தானததில கலபனைசெய்து எனறாததமாகவுமாம 'ஜ்யைஹாவ:' எனனும பததி லை 1 'வஜூஷ: வெதாவாவ ஸமவாநு ஜ்யெயாநி: விதாமஹ:' எனறிவை முதலிய இடஙகளில பரஸிததமாகிய ஜனமததிறு முண டான பரபாவம சொலலபபடுகிறது இததால ஆனநதவலலியில பரஜா பதி எனனும பததிலை சொலலபபடடது வயாகயானம செய்யப படடது 'ஜ்வரி' எனனும பதம இது அஸமபாவிதமா யிருநதபோதி லும இதைக கலபனை செயதுகொண்டு எனனும அாத்ததைக்காட்டு கிறது பருமமாவை ஸாாவபௌமனுகிய மனுஷ்யன ஸதானததில வைதது அது முதல ஸமபாவிதமிலலாம லிருநதபோதிலும பருமமா வரையிலுள்ள புருஷாகளை முனபு சொலலியவாகளைவிட மேனமையை யுடையவாகளாகக கலபனை செயதுகொணடுஎனறாததம 'தெ யெ ஶத மிதாநநதா:' எனபதறகு பாதயக்ஷமாயக கண்டறியபபடட ஶருதி

1 பகவான - பகவானுயும, அப்ஜயோநி; - தாமரைப்பூவில் உண்டானவராயு மிருககிற, பிதாமஹ - பருமமா, பருஷட - கேழககபபட்டவராய்க கொணடு, பரோவாச - சொன்னா

யில சொலலபபடுகிற கரமததினால ஶ்ருதியில இலலாத கணககிலலாத வரிசைகரமஙகளை ஊஹித்துககொண்டு எனறு தாதபாயம ‘ கிரஃ ’ எனபதினால உளளபடியே அாததததைச சொலலககூடிய ஶகதியை உடையதெனபது தெரிவிககபபடுகிறது ‘தெ யெ ஶதம்’ எனகிற பதங களைச சொலலி இருபபதினால வேதவாககுகள எனகிற விஶேஷம ஸிததிககிறது ஆனநதவலலியில ‘ஆனநதததின விசாரம இபபடிப படடது’ எனறாததமுளள வாககியம முதலாக ஆரமபிதது ஆனநதம எனறு பெயருடைய ஒரு குணம அளவிடமுடியாதெனறு சொலலபபட டது அபபடி யிருநதபோதிலும ‘யுவாவாக இருநதானேயானால’ எனறாததமுளள வாககியம முதலியவைகளினால குணம, விபூதி இவை களின் மேனமையைக காரணமாகவுடைய ஆனநதததின மேனமையின நிருபணம ஆரமபிககபபடடிருபபதினால பரமாதமாவினிடததிலும எணணிறநத குணஙகள, விபூதிகள இவைகளைக காரணமாகவுடைய அநத ஆனநதமே சொலலபபடுகிறபடியினால அதில உளளடஙகி இருப பதினால எலலாககுணஙகளும எலலை இலலாதவைகள எனபது ஏற படுகிறது எனகிற அபிபராயததினால சொலலுகிறாா—‘ஸ்வெஷ்வெகைக குணாவதீஷயா’ எனறு இவவிடததில குணஙகள, குணஙகளை யுடைய வஸ்து, இவைகளை வெவவேறாகச சொலலி இருபபதினால பக வானுடைய ஸ்வரூபததோடு பகவானுடைய குணஙகள ஒனறென்று சொலலுகிறவாகள நிராகரிககபபடடாாகள ஒனறுசோததுச சொலலி இருபபதோவெனில குணமாகவும குணததை உடையதாகவுமிருககிற ஸமபநதததினால பொருநதுகிறது அபபடிககிலலாவிடடால அவாகள மதததிலும தஙகளால நிராகரிககவேணடியதாக எணணபபடட நிர குணம எனனும வாதமே மிகுதியாக நிறகும ‘ஸதி’ எனனும பதம ‘ஸதாஷிதா’ எனகிற இடத்தில அநவயிககிறதாகவுமாம எபபொழு தும பாயததின தோடு கூடினவைகளாக இருநதபோதிலும எனறாத தம அனறிககே ‘ஸதாஷிதா கிரஃ’ எனறநவயிதது நிதயமாக இருக கிறபடியினால சொனனவாகளினுடைய தோஷம முதலியது இலலா தது எனபது தெரிவிககபபடுகிறது. அபபொழுது ‘ஶ்ருஷ்ட்வாஸி நோத்யேதி ஶோகே’ எனறநவயம சொலலிககொளள வேண் டியது அடிககடி கலபனை செய்துகொணடிருநதபோதிலும மறுபடி யும ஆரமபததையே மிகுதியாகிறது எனறு தாதபாயம இவவிடததில ‘அவனுககு இநத எலலாப பூமியும பணததினால நிறைநதிருநததேயா னல்’ என்றாததமுளள வாககியததினால அஸமபாவிததததைக கலபனை செய்தே ஆரமபிததிருககிறது ஆகையினால அதைபபோனற நியாயத

தினுலே மேன்மேலும் புருஷர்களைக் கல்பனைசெய்து வாக்யங்களைத் திருப்பிச் சொல்லுவதில் ப்ரயோஜனத் தாத்பர்யமுண்டென்று ஊஹிக்கப்பட்டது. முதலில் 'நாராயண' என்னும் பதத்தினுல் ஆனந்தவல்லியில் சொல்லப்பட்ட 'ப்ரும்ம' என்னும் பதத்திற்கு அர்த்தமாயிருப்பதினுல் 'ஸ:' என்னும் பதத்தினுல் சொல்லப்படுகிறன 'எந்த இந்தப் பரமாத்மா புருஷனிடத்தில் இருக்கிறுனே, எந்த இந்தப் பரமாத்மா ஸூர்யனிடத்தி லிருக்கிறுனே அவன் ஒருவன்' என்று ஜீவாத்மாக்களுக்குள்ளிருக்கிற எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாகிய பரமாத்மாவும் ஸூர்யமண்டலத்தின் நடுவிலிருக்கிற தாமரைப் பூக்களைப் போன்ற கண்களையுடைய புருஷனும் ஒன்று என்று சொல்லியிருக்கிற படியினுல் இவ்விடத்தில் விஜ்ஞானமயனை ஆத்மாவைவிட வேறு வஸ்துவாகிய ஆனந்தமயன் ப்ரபஞ்சத்திற்கு அந்தராத்மாவாகிய நாராயணனே என்பதை வ்யக்தமாகச் சொல்லுகிறது. 19



த்வதாச்ரிதாநாம் ஜகதுத்பவஸ்திதி
ப்ரணாச ஸம்ஸார விமோசநாதய: |
பவந்தி லீலா விதயச்ச வைதிகா
த்வதீய கம்பீர மநோநுஸாரிண: || 20

த்வதாச்ரிதாநாம் ஜகதுத்பவ ஸ்திதி
ப்ரணாச ஸம்ஸார விமோசநாதய |
பவந்தி லீலா விதயச்ச வைதிகாஸ
த்வதீய கம்பீர மநோநுஸாரிண || 20

ப - ரை] த்வதாச்ரிதாநாம் — உம்மை ஆச்ரயித்தவர்களுக்காக, ஜகதுத்பவஸ்திதி ப்ரணாச ஸம்ஸார விமோசநாதய:— ஜகத் - லோகங்களினுடைய, உத்பவ - உத்பத்தி, ஸ்திதி - காப்பாற்றுதல், ப்ரணாச- நாசம், ஸம்ஸாரவிமோசந - மோக்ஷத்தைக் கொடுத்தல், ஆதய: - முதலிய, லீலா: - விளையாட்டுக்களும், வைதிகா: - வேதங்களில் சொல்லப்பட்ட, விதயச்ச - விதிகளும், த்வதீய கம்பீர மநோநுஸாரிண: - உம்முடையதாகிய மிகவும் கம்பீரமான மனதை அனுஸரித்தவைகளாக, பவந்தி — உண்டாகின்றன. அன்றிக்கே த்வதாச்ரிதாநாம் - உம்மை ஆச்ரயித்தவர்களாகிய, ப்ரும்மருத்ராதிகளுக்கு, ஜகதுத்பவஸ்திதி ப்ரணாசஸம்ஸாரவிமோசநாதய:-ஜீவாத்மாக்களின் உத்பத்தி, ஸ்திதி, நாசம், மோக்ஷத்தைக் கொடுத்தல் முதலியவைகளை, லீலா: - விளையாட்

கேகளாகவும், வைதிகா: - வேதத்தில் சொல்லபபடுகிற, விதய: - விதிகள, த்வதீய கம்பீரமநோநுஸாரிண: - உம்மை ஆஶ்ரயித்தவர்களின கம்பீரமாகிய மனதை அனுஸரித்தவைகளாகவும், ஸந்தி - ஆகின்றன, என்றாத்தமாகவுமாம் 20

பா] இபபடிபபட்ட எல்லையில்லாத ஆனந்தத்தையுடைய பகவானுக்கு லோகங்களின வயாபாரம தன்னுடைய ப்ரயோஜனததிற்காக வலல, பரிபூர்ணனில்லாமல போகவேண்டி வருவதினால, அயலாருடைய ப்ரயோஜனததிற்காகவுமல்ல, ஸம்ஸாரம துக்கரூபமாயிருக்கிற படியினால; என்ற ஆக்ஷேபம வரில சில ஆகாரங்களினால இரண்டுவிதமாகவும இருக்கிறது என்பதையும ப்ரபஞ்சததிற்குபகாரமாகிய வயாபாரஙகள இவன் செய்வது கணக்கில்லாதது என்பதையும சொல்லிக்கொண்டு முனபு சொல்லபபட்ட குணஙகளின மேன்மையையே உறுதிபபடுததுகிறார—'த்வதாஶ்ரிதாநாம்' என்று ஆரமபிததது உன்னை ஆஶ்ரயிததவர்களுக்காக அதாவது உன்னை ஆஶ்ரயிததவர்களுக்கு இஷ்டபலம ஸித்திபபதற்காகவும, அவர்களுக்குப போகயமாவதற்காகவும என்று தாதபரயம இததால முன்பு சொல்லபபட்ட எண்ணிறந்த குணங்கள், விபூதிகள இவைகளின பெருமை இதை அனுபவிக்கக்கூடியவர்களில்லாமையினால காட்டிலே காய்ந்த நிலவாகுமே என்கிற ஆக்ஷேபமும நிராகரிக்கபபட்டது லோகததை ஸ்ருஷ்டிததது பகவானிடததில பக்தியுடையவர்களுக்காக என்பது 'எல்லாத்தேவதைகளும இவனுக்குக் காணிக்கை கொண்டுவருகிறார்கள' என்றும, 'ஸர்வஜ்ஞனாகிய இவன எல்லாவற்றையும பார்க்கிறான, எல்லாவற்றையும எல்லாவிதததினாலு மடைகிறான' என்று மாததமுள்ள ஶ்ருதிவாக்யஙகளினால தெரிவிக்கபபடுகிறது 'ஜந்ம ஸ்தேமபங்கலீலஸ்ய' என்னும பதஙகள 'ஜிஜ்ஞாஸா' என்னும ப்ரதயயததின் அர்தத்தை உளளே வைததது இவைகளைச் செய்கிறவனுடைய வயாபாரஙகளைச சொல்லுகிற ப்ரபஞ்சததிற்குப்ரதான காரணமாயும எல்லாவற்றிற்கு மந்தர்யாமியாயுமிருக்கிற பகவானே இந்த லோகஙகளைச ஶரீரமாகவுடையவனாகப பிறக்கிறான் என்று சொல்லபபடுகிறதாகவுமாம ஆகையினால தன ஶரீரங்களை நீட்டுவது முடக்குவதாகிற நாட்டியததைபபோல லீலை என்பதும பொருந்துகிறது இததால தன்னுடைய ப்ரயோஜனததிற்காக என்பது மேற்பட்டது 'ஜந்ம:' என்னும பதததினால அந்தர்யாமியாயிருந்து நியமனம செயவதும, அவதாரம செயவது முதலியதும சேர்ததுக்கொளளபபடுகிறது 'ஸந்தி' என்பதினால அபபடிபபட்ட லீலை

பொருத்தமுடைய தென்பதும கல்பங்களதோறும் தொடர்ந்துவருகிற தென்பதும் தெரிவிக்கப்பட்டதாகவுமாம. இவ்விடத்தில் 'தவ (உம்முடைய)' என்று சேர்த்துக்கொள்ள வேண்டியது. 'ஸகல' என்னும் பதத்தைப் பிரித்துக்கொண்டு நிமித்தகாரணமாயும உபாதான காரணமாயும இருக்கிற உம்மிடத்திலிருந்து உண்டாகின்றன என்று சேர்த்துக்கொள்ளவேண்டியதாகவுமாம 'வைதிகா: விதய:' என்பதற்கு வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிற விதிவாக்யங்கள் என்றாத்தம 'த்வதீய கம்பீர மநோநுஸாரிண:' என்பதற்கு உம்முடையதாயும, உம்மைத்தவிர மற்றவர்களினுல அறியமுடியாததாயும கலக்கமுடியாததாயுமிருக்கிற ஸங்கல்பத்தை அனுஸரித்தவைகள என்றாத்தம. அப்படியே 1 'ஶ்ருதி: ஸ்ம்ருதி ர்மமைவாஜ்ஞா' என்று சொல்லியிருக்கிறுர். இவைகளெல்லாம உன்னை ஆஶ்ரயித்தவாகளுக்காகவே. அன்றிக்கே இப்படிச சொல்லிக்கொள்ளவுமாம், 'த்வதாஶ்ரிதாநாம்' உம்மை ஆஶ்ரயித்தவர்களாகிய, 'ப்ரஹ்மா ஶிவ: ஶதமக:' என்று முன்பு சொல்லப்பட்ட ப்ருமமா, ருத்திரன் முதலியவர்களினுடைய என்றாத்தம. இவ்விடத்தில 'ஜகத்' என்னும பதம அதற்குத் தக்கபடி அண்டத்திற்குள்ளே இருக்கிற காரியவஸ்துக்களைச் சொல்லுகிறது. இவர்கள ஸம்ஸாரத்தை விடுவிக்கிறுர்கள என்பதும 2 'ஶங்கரஸ்ய து யோ பக்த: ஸப்தஜந்மாந்தரம் நர: । தஸ்யைவ து ப்ரஸாதேந விஷ்ணுபக்த: ப்ரஜாயதே ॥', 3 'த்ரிபி: ப்ரஜாபதே: பக்த: ஸப்தபி: ஶங்கரஸ்ய து । விம்ஶத்யாக்நீந்த்ர ஸூர்யாதே: விஷ்ணுபக்த: ப்ரஜாயதே ॥' என்றிவை முதலியவைகளில சொல்லிய நியாயத்தினுல அனுக்ரஹம செய்வது, உபதேஶம செய்வது, தாமத்தில பரவருத்திக்கும்படி செய்வது முதலியவைகளின் வழியாக இருக்கக்கூடும.

---

1 ஶ்ருதி, ஸ்ம்ருதி, இவைகள் என்னுடைய உத்திரவுகள்.

2 ய:-எந்த, நர -மனிதன், ஸப்தஜன்மாந்தரம - ஏழு ஜன்மம, ஶங்கரஸ்ய ருத்திரனுக்கு, பக்த:-பக்தனே, (அவன) தஸ்யைவ-அந்த ருத்திரனுடைய,ப்ரஸா-தேந - அனுக்ரஹத்தினுல், விஷ்ணுபக்த:-விஷ்ணுவிற்குப் பக்தனுக,ப்ரஜாயதே-ஆகிறுன்.

3 த்ரிபி:-மூன்று ஜன்மங்களினுல், ப்ரஜாபதே:-ப்ரும்மாவிற்கு, பக்த:-பக்தனுயிருப்பவனும, ஸப்தபி:-ஏழு ஜன்மங்களினுல், ஶங்கரஸ்ய - ருத்திரனுக்கு (பக்தனுயிருப்பவனும்), விம்ஶத்யா-இருபது ஜன்மங்களினுல், அக்னீந்த்ர ஸூர்யாதே:-அக்னி, இந்திரன், ஸூர்யன் முதலியவர்களுக்கு (பக்தனுயிருப்பவனும), விஷ்ணுபக்த.-விஷ்ணுவிற்குப் பக்தனுக, ப்ராஜாயதே - ஆகிறுன்.

'ஶ்ரீமா:' என்று சொல்லியிருப்பது இவ்விடத்தில் அவர்களுக்குப் பக வானுடைய அனுக்ரஹத்தினால் ஸ்ருஷ்டி முதலியவைகள் ஸுலபமாக வும், ஸ்வல்பமாயச் செய்யக்கூடியதாயு மிருக்கின்றன என்பதைத் தெரிவிப்பதற்காக. உம்மை ஆஶ்ரயித்தவர்களுக்கே இப்படியாகிறதா னால் உமக்குக் கேழக்கவேண்டியதில்லை என்பது இவ்விடத்தில் அபிப் ராயத்தில் கொள்ளப்பட்டது வேதத்தில் சொல்லப்பட்ட விதிகள் பகவானை ஆஶ்ரயித்தவர்களினுடைய மனதை அனுஸரித்திருக்கின்றன என்பதும் 'பிறகு உனக்குக் கர்மங்களில் ஸந்தேஹமாவது நடவடிக் கையில் ஸந்தேஹமாவ திருந்ததேயானால் அந்த விஷயத்தில் விசாரம் செய்கிறவர்களாயும், பரமத்தை அறிந்துகொண்டவர்களாயும், அப்படி விசாரம் செய்யத்தகுந்த யோக்யதை யுடையவர்களாயும், ஓரிடத்தில் பக்ஷபாத மில்லாதவர்களாயும், க்ரூரமான ஸ்வபாவமில்லாதவர்களாயும், தர்மத்தையே விரும்பினவர்களாயும் எவர்கள் இருப்பார்களோ அவர் கள் அந்த விஷயத்தில் எப்படி நடக்கிறார்களோ அப்படி நடக்கக்கட வாய், பிறகு இப்பொழுது கீழ்ச் சொல்லப்பட்ட விஷயங்களிலும் விசாரம் செய்கிறவர்களாயும், பரமத்தை அறிந்து கொண்டவர்களா யும் அப்படி விசாரம் செய்யத்தகுந்த யோக்யதை யுடையவர்களா யும், ஓரிடத்தில் பக்ஷபாதமில்லாதவர்களாயும், க்ரூரமான ஸ்வபாவம் இல்லாதவர்களாயும், தர்மத்தையே விரும்பினவர்களாயும் எவர்கள் இருப் பார்களோ அவர்கள் அந்த விஷயத்தில் எப்படி நடக்கிறார்களோ அப்படி நடக்கக்கடவாய், இது உனக்கு ஶாஸ்த்ரம், இதுவே உபதே சம்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்களி லேற்பட்டிருக்கிறது ஸ்ம ருதியிலும் 1 'ஶ்ருதி: ஸ்ம்ருதி: ஸதாசார:' 2 'வேதோऽகிலோ தர்ம மூலம் ஸ்ம்ருதிஶீலே ச தத்விதாம்' என்று சொல்லப்பட்டது 'விதி' எனனும் பதம் இவ்விடத்தில் வைதிகங்களான தர்மங்களின் அனுஷ் டானத்தைச் சொல்லுகிறதாகவுமாம் முதலாவது யோசனையில் பகவா னால் தர்மத்தை ஸ்தாபிப்பதற்காகச் செய்யப்படுகின்றன இவ்விடத் தில் பகவானோடு மிகுந்த ஸாம்யத்தை யடைந்தவர்களாகிய முக்தர்கள் லோகங்களின் ஸ்ருஷ்டி முதலியவைகளைச்செய்கிறார்கள் என்கிற அர்த

---

1 வேதம், ஸ்ம்ருதி, பெரியோர்களின் அனுஷ்டானம் (இவைகள் ப்ரமா ணங்கள் )

2 அகில - எல்லா, வேத:- வேதமும், தத்விதாம் - அந்த வேதத்தை அறிந்த வர்களினுடைய, ஸ்ம்ருதிஶீலே ச - ஸ்ம்ருதியும், அனுஷ்டானமும், தர்மமூலம் - தர்மத்திற்கு ப்ரமாணம்

த்தம் ஏன் சொல்லப்படவில்லை? இது பரமஸம்ஹிதையில் 1 'கேந ரூபேண ஹி த்ருஶ்யந்தே முக்தாஸ்தவ ஶரீரிண: | ஏதத் ஆசக்ஷ்வ தேவேஶ குஹ்யாத் குஹ்யதரம் பரம் ||' என்று பருமமாவினால் கேழ்க்கப்பட்டிருக்கும்பொழுது பகவானால் 2 'முக்தா ஏவ பவந்த்யேதே ந பேதோஸ்தி தத்ர கஶ்சந | யதாஹம் விஹராம்யேவம் ததா முக்தாஶ்ச தேஹிந: ||' என்று சொல்லப்பட்டது என்று சொல்லப்பட்டிருக்கிறது ஆகையினால் முக்தன் பகவானோடு ஒன்றாகையினால் ஜகத்தின் வ்யாபாரம் அவனுக்கு மிருக்கலாமே என்னில் இது உசிதமல்ல, அவ்விடத்திலும் 'தவ ஶரீரிண: (எல்லாவற்றையும் ஶரீரமாகவுடைய உம்மோடு)' என்று அனுவதிக்கப்படுகிற எல்லாவற்றையும் ஶரீரமாகவுடையவனாக இருப்பதற்கு அனுகுணமாகவே ஒன்றென்று சொல்லியிருப்பது ஶ்ருதிகளிலும் ஸ்ம்ருதிகளிலும் மேற்பட்ட மிகுந்த ஸாம்யமாயிருக்கையைச் சொல்லுகிறதென்று தாத்பர்யம் சொல்லவேண்டு மாகையினாலும், 'ஸாம்யஸார்ஷ்ட்யவியோகைக்யம்' என்றிவை முதலியவைகளில் சொல்லியிருக்கிற ந்யாயத்தினாலும் அப்படிக்கில்லாவிட்டால் 'யதாஹம் விஹராமி' என்றாரம்பித்து மேலே த்ருஷ்டாந்தமாயும் தார்ஷ்டாந்திகமாயும் வெவ்வேறாகச் சொல்லியிருப்பது பொருந்தாது. ஆகையினாலிவ்விடத்தில் முக்தர்கள் விளையாடுகிறது, பகவானோடு ஸமமென்று சொல்லியிருப்பது, 'சாப்பிட்டுக்கொண்டும் விளையாடிக்கொண்டும்' என்றும், 'இவனுடைய ஸங்கல்பத்தினாலே பித்ருக்கள் உண்டாகிறார்கள்' என்று மாத்திரமுள்ள உபநிஷத் வாக்யங்களில் சொல்லப்பட்ட சில வ்யாபாரங்களைப்பற்றியது இதுவே அந்த ஸம்ஹிதையில் கடைசிப் படலத்தில் 3 'ஸாயுஜ்யம் ப்ரதிபந்நா யே தீவ்ரபக்தாஸ்தபஸ்விந: | கிங்கரா

1 ஶரீரிண. - எல்லா வஸ்துக்களையும் ஶரீரமாகவுடைய, தவ - உமக்கு, முக்தா: - முக்தர்கள், கேந - எந்த, ரூபேண - ஆகாரத்தினால், த்ருஶ்யந்தே - வ்யத்யாஸப்படுகிறார்கள், தேவ - ஓ! தேவனே, குஹ்யாத - எல்லா ரஹஸ்யங்களையும்விட, பரம - மேலான, குஹ்யதரம - ரஹஸ்யமான, ஏதத - இதை, மே - எனக்கு, ஆசக்ஷ்வ - சொல்லும்

2 ஏதே - இந்த முக்தர்கள், அஹமேவ - நானாகவே, பவந்தி - ஆகிறார்கள், தத்ர - இந்த விஷயத்தில், கஶ்சித - ஒரு, பேத - பேதமும், ந - இல்லை, அஹம - நான், யதா - எப்படி, விஹராமி - விளையாடுகிறேனோ, ததா - அப்படியே, முக்தா: - முக்தர்களான, தேஹின. - ப்ராணிகளும.

3 தீவ்ரபக்தா: - மிகுந்த பக்தியை யுடையவர்களாய், தபஸ்வின - தபஸ்ஸை செய்துகொண்டிருக்கிற, யே - எவர்கள், ஸாயுஜ்யம் - ஸாயுஜ்யத்தை, ப்ரதிபந்நா: -

ததா நித்யம் ஸவந்தி நிருபத்ரவா:॥' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியே முக்தர்களுக்கு லோகங்களின் வ்யாபாரத்தில் ஶக்தி இருக்கிறது ப்ராப்தி இல்லை என்று சொல்லுகிறபக்ஷத்திலும் விசாரிக்கு நிற்காது முக்தர்களுக்கு எல்லாவற்றையும் ஶரீரமாகவுடையவர்களா யிருக்கை இல்லையல்லவா, ஶ்ருதியில் சொல்லப்படாமையினாலும், உசிதமல்லவாகையினாலும். அதில்லாமல்போனால் 'நானே பஹுவாகக்கடவேன்' என்று ஸங்கல்பம் செய்யக்கூடிய ஶக்தி எப்படி உண்டு? அப்படிப்பட்ட ஶக்தி இருந்தால் ப்ராப்தி இல்லை என்று சொல்லுவதும் உசிதமல்ல. இப்படியே நித்யஸூரிகளுக்கும் இதுவும் பாஷ்யத்தில் ஶ்ருதியிலிருக்கும் 'அநந்த' என்னும் பதத்திற்கு வ்யாக்யானம் செய்யுமிடத்தில் 'தனக்கு மேற்பட்ட எல்லையையுடைய ஸ்வரூபங்களையுடைய நித்யஸூரிகள் விலக்கப்பட்டார்கள்' என்று அருளிச் செய்யப்பட்டது. ஆகையினால் கீழ்ச் சொன்னதே அர்த்தம். 20



> நமோ நமோ வாங்மநஸாதி பூமயே
> நமோ நமோ வாங்மநஸைக பூமயே ।
> நமோ நமோऽநந்த மஹா விபூதயே
> நமோ நமோऽநந்த தயைக ஸிந்தவே ॥ 21

> நமோ நமோ வாங்மனஸாதி பூமயே
> நமோ நமோ வாங் மனஸைக பூமயே ।
> நமோ நமோநந்த மஹா விபூதயே
> நமோ நமோநந்த தயைக ஸிந்தவே ॥ 21

ப-ரை] வாங்மநஸாதி பூமயே - வாக்குக்கும் மனதிற்கும் எட்டாதவராகிய (உம்மின்பொருட்டு), நமோ நம: - ஸேவிக்கிறேன், வாங்மநஸைக பூமயே - வாக்கு, மனது இவைகளுக்கு ஒரேவிஷயமாகிய (உம்மின்பொருட்டு), நமோ நம:-ஸேவிக்கிறேன், அநந்தமஹாவிபூதயே - அளவில்லாத பெரிய விபூதிகளை யுடைய (உம்மின் பொருட்டு), நமோ நம: - ஸேவிக்கிறேன், அநந்ததயைகஸிந்தவே - அளவில்லாத தயைக்கு ஒரே ஸமுத்திரமாகிய (உம்மின்பொருட்டு), நமோ நம: - ஸேவிக்கிறேன். 21

அடைந்தவர்களோ, தே, அவர்கள், மம - எனக்கு, நித்யம் - எப்பொழுதும், கிங்கரா: - தாஸர்களாகவும், நிருபத்ரவா: - உபத்திரவங்களில்லாதவர்களாகவும், பவந்தி - ஆகிறார்கள்.

பா] இப்படிக் கீழ்ச் சொல்லியவிதமாக ஸ்வபாவத்திலேயே ஸ்வாமியாயும் வேறொன்றையு மபேக்ஷிக்காமல் ஸ்வதந்திரனாயும் எல்லையில்லாத ஸௌலப்யத்தை யுடையவனாயு மிருக்கிற பகவானிடத்தில் தனக்கு ஸ்வரூபத்தினாலேற்பட்டதும் குணங்களினா லுண்டாக்கப்பட்டதுமா யிருக்கிற தாஸனாயிருக்கும் தன்மையைத் தெரிந்துகொண்டு அதற்குத் தகுந்ததான வ்யாபாரத்தைச் செய்கிறார்—'நமோ நம:' என்றாரம்பித்து நமஸ்காரத்தை நிரூபிக்கும் ஸந்தாபத்தில் 'நம:' என்னும் பதம் இவ்விதமாக அர்த்தம் செய்யப்படுகிறது. 1 'பகவதி ........ நமஇதி!' இவ்வர்த்தத்தையே அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு மஹாபாரதத்தில் 2 '........ நமேதி ச ஶாஶ்வதம்||' என்று சொல்லப்பட்டது. நமஸ்காரத்தின் பரபாவம் விஷ்ணு தர்மம் முதலியவைகளில் ப்ரஸித்தமாக இருக்கிறது. எங்கேயென்னில் 'புழுதியையுடைய பூமியில் யோசிக்காமல் பகவானை நமஸ்காரம் செய்து அந்தப் புழுதிகள் நெற்றியில் ஒட்டிக்கொள்ளுவதினால் அப்பொழுதே பாபங்க ளற்றவனாகிறான் ஒருவராலும் நடக்கக்கூடாததும் கரையில்லாததுமான ஸம்ஸாரமான காட்டில் ஓடுகிறவர்களுக்குப் பகவானை நமஸ்காரம் செய்வதொன்றே மோக்ஷமாகிற கரையைக் காட்டுகிறது ஸ்ரீ க்ருஷ்ணனிடத்தில் செய்யப்படுகிற ஸக்ருத்ப்ரணாமம் ஒன்றே பத்து அஶ்வமேதங்களின் அவப்ருத ஸ்நானத்திற்கு ஸமா

---

1 பகவதி - பகவானை விஷயத்தில், மம - எனக்கு, யா:-காசன - ஏதாவதொரு, க்ருதய - காரியங்களோ, தா: - அவைகளில், மம - எனக்கு, மமதா - என்னுடையவைகளென்பது, நாஸ்தி - இல்லை, தா - அவைகள், பகவத்ஏவ - பகவானுடைய (காரியங்கள்), பகவதி - பகவான் விஷயத்தில், அஹம் - நான், அமம: - என்னுடையதென்பதில்லாதவன், அஹமபி -நானும், நமம-என்னுடையவனல்ல, அஹம - நான, பகவதஏவ - பகவானுக்கே, அஸ்மி - ஆகிறேன், இதயேவ - என்று, மமதாம் - மமகாரத்தை, ய - எது, ஜயதி - ஜயிக்கிறதோ, அத:- ஆகையினால், நமஇதி - நம, என்று சொல்லப்படுகிறது

2 த்வயக்ஷர: - இரண்டெழுத்துடைய பதம், ம்ருத்யு :- ஸம்ஸாரத்திற்குக் காரணமாக, பவேத - ஆகும், த்ர்யக்ஷரம் - மூன்றெழுத்துக்களையுடைய பதம், ப்ருமமண - பரப்ரம்மத்தின், பதம் - ஸ்தானம், மமஇதி - மம என்கிற, த்வயக்ஷர. - இரண்டெழுத்துடைய பதம், ம்ருத்யு: - ம்ருத்யு, நமமஇதி-நமம என்கிற பதம், ஶாஶ்வதம் - அழிவில்லாத பதம்.

னம பத்து அஶ்வமேதஙகளைக செயதவன மறுபடியும ஜனமததை யடைகிறுன. ஸ்ரீ கருஷ்ணனை நமஸ்காரம செயதவன் மறுபடியும பிறபபதிலலை. காசாமபூஙகொததிறகு ஸமானமானவனுயும பீதாம பரததைத தரித்தவனுயுமிருககிற கோவிநதனை எவாகள் ஸேவிககிறுா களோ அவாகளுககுபபயமிலலை. யஜஞஸ்வரூபியாகிய பகவானிடததில செயயப்படுகிற நமஸ்காரமானது எலலா யஜஞஙகளையுமவிட உயாநத தாக எண்ணபபடடது மஹா யஜஞஸவரூபமாகிய பகவானை நமஸகா ரம செய்தால அஶ்வமேதததின் பலததை அடைவான் பூமியில தடி போலக கீழே விழுநது நமஸ்காரம செயவதினுல எவன பகவானை ஆரா தனம் செயவானேஅவன எபபடிபபடட கதியை அடைவானே அநதக கதியை அனேகம யஜஞஙகளினுலு மடையமாட்டான. ஓ' நாரதமுனி யே, எனனிடததில பகதியுடையவனுயும ஶ்ரததையோடு கூடினவனுயு மிருக்கிற எவன 'நமஃ' எனறு சொலலுவானே அவன சண்டாளனுக இருநதபோதிலும அவனுககு அழிவிலலாத லோகமுணடாகிறது தேவதைகளின கூட்டஙகளினுல அாசசனை செயயபபட்ட திருவடித தாமரைகளையுடைய விஷ்ணுவை எநத மனுஷ்யன உண்மையாக நமஸ் கரிககிறுனே அபபடிபபடட ஸகலபாபஙகளின பநததைப போககடிக் தவனுகிய அவனை நெய்யினுல ஆஹுதி செயயபபட்ட அகனியைப போல தூரததில பரிஹரிததுவிடு. சகரபாணியாகிய பகவானிடததில பகதியினுல செய்யபபடட ஒரு நமஸ்காரம ஒருவராலும தாணடமுடி யாத அனேகபாபங்களைப போக்கடிககிறது' எனறிவை முதலிய வச னஙகளினுல சொலலபபடுகிறது. இவவிடததில 'நமஃ' எனனுமபதத தை இரட்டிததுச சொலலி இருபபதும அதை அடிககடி திருபபிச சொலலி இருபபதும 1 'நித்யாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா: நம இதி ஏவ வாதிந:' எனறு சொலலியிருபபதைபபோல பரததுவம, ஸௌலப யம, இவைகளை ச சோநத குணஙகள, விபூதிகள, இவைகள எண்ணிறந திருப்பதை அனுபவிபபதினுலுணடாகிய பகதியின மிகுதியைக காட்டு கிறது. ஶ்ருதி முதலியவைகளிலும இபபடி இரட்டிததுச சொலலி யிருபபது முதலியவை காணபபடுகிறது. ஸ்தோததிரம செயயுமபொ ழுதும, பாதிஜஞை செய்யுமபொழுதும, அழுமபொழுதும, மிரட்டும பொழுதும, பயத்தைச சொலலுமபொழுதும, ஜயததைச சொல்லும

---

1 நித்யாஞ்ஜலிபுடா: - எபபொழுதும் கையைக்கூப்பிககொண்டவர்களாயும், ஹ்ருஷ்டா:- ஸந்தோஷத்தை யுடையவாகளாயும, நம இதயேவ — நம: என்றே, வாதின: - சொல்லிககொண்டிருப்பவாகளாயும் (இருககிறுாகள்.)

பொழுதும், அடிக்கடி சொல்லுவ தலங்காரமாகவே இருக்கிறதென்று சொல்லுகிறார்களல்லவா 'வாஜ்ஞநஸாதி ஹஷ்டயே'; என்பது முதலிய நாலுபதங்களிலும் முன்பின முன்னிலையில் சொல்லியிருப்பதை யனுஸரித்து 'தாஸ்யம் (உம்மின பொருட்டு)' என்பதைச் சேர்த்துக்கொள்ளவேண்டியது 'அதிஹஷ்டயே' என்பதற்குத் தாண்டிய விஷயமாயிருக்கிற என்றர்த்தம் 'எவனிடத்திலிருந்து வாக்குகள் மனதுடன் கூட அவனை அடையாமல் திரும்புகின்றனவோ, எது வாயினால் சொல்லப்படாததோ' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளில் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட மேலான யோகிகளினுடையவும் வாக்கினும், மனதினும், அளவிடமுடியாம லிருக்கை இவ்விடத்தில் சொல்லப்படுகிறது குதருஷ்டிகளினால் சொல்லப்படுகிறபடி முழுமையும் வாக்குமுதலியவைகளுக்கு விஷயமாகாதது என்றர்த்தம் சொல்லில மற்ற ஶ்ருதிகள் தன்னுடைய வார்த்தை முதலியவைகளுக்கு விரோதம் வருகிறதென்பதை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'வாஜ்ஞ நவைக ஹஷ்டயே' என்று ஶ்ருதியிலும் 'எல்லாவேதங்களும் எந்தப் பகவானைச் சொல்லுகின்றனவோ, எல்லாவேதங்களும் எந்த இடத்தில் ஒரே அபிப்ராயத்தை உடையதாகின்றனவோ' என்றர்த்தமுள்ள வாக்யங்கள் சொல்லப் படுகின்றன ஸ்ம்ருதியிலும் 1 'வேதைஶ்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:', 2 'நதாஃஸ்ம ஸர்வவசஸாம் ப்ரதிஷ்டா யத்ர ஶாஶ்வதீ' என்றும் சொல்லப்படுகிறது அதுவுமன்றிக்கே தன்னுடைய அநுக்ரஹத்தை அடைந்தவர்களாகிய இடையர்கள், இடைப்பெண்கள், முதலியவர்களுக்கும் வாக்கு, மனது,இவைகளுக்கு ஒரேவிஷயமாக என்றர்த்தமாகவுமாம். வேறுவிஷயங்களில் பராங்முகனாக இருப்பதைத் தெரிவிப்பதற்காக 'ஏக' என்னும் பதம் கீழ்ச் சொல்லப்பட்ட மனதிற்கும் வாக்குக்கும் எட்டாத விஷயமாக இருக்கையை ஸ்தாபிக்கிறார்—'அநந்த மஹா விபூதயே' என்று 'அநந்த (அளவில்லாத)' என்பது ஆகையினாலேயே பரமமா முதலியவர்களின் விபூதிகளைவிடப் பெரியதாகிய விபூதியையுடையவன் 'அநந்த மஹா விபூதி:' என்னப்படுகிறான் 'இப்படியில்லை' என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவைகளில் மறுத்திருப்பதும் கீழே ப்ரஸ்தாவிக்கப்பட்ட

---

1 எல்லா வேதங்களினாலும் நானே அறியத்தகுந்தவன்.

2 ஸர்வவசஸாம் - எல்லா வாக்குக்களுக்கும், ப்ரதிஷ்டா - இருப்பதானது, யத்ர - எந்த இடத்தில, ஶாஶ்வதீ - அழிவில்லாமலிருக்கிறதோ (அப்படிப்பட்டவனை), நதா:- வணங்கினவர்களாக, ஸ்ம - ஆகிறோம்.

இவ்வளவு மாத்திரமென்பதை மறுக்கிறது என்றது ஸூத்திரத்தில் சொல்லப்பட்டது. விபூதி அதிகம் என்று சொல்லி இருப்பது குணங்களின் மிகுதியையும் குறிக்கிறது 'அநந்த தயைகஸிந்தவே' என பதினுல் எல்லாக் குணங்களின் மேன்மை குறிக்கப்படுகிறதாகவுமாம். தயை அளவில்லாமலிருப்பது தன்னை ஆஶ்ரயித்தவர்களுக்கு வாக்குக்கும் மனதிற்கும் ஒரே விஷயமாக இருப்பதற்குக் காரணம் கலக்கமுடியாமை முதலியவைகளை தாத்பர்யத்தில் வைத்துக்கொண்டு 'ஸிந்து' என்னும் பதம் சொல்லப்படுகிறது. ஸ்வபாவத்தினுலோவெனில் தயைக்கே இவன் ஆதாரம். இவன் அஸுரா முதலியவர்களிடங்களில் நிக்ரஹம் செய்வது முதலியதும் தன்னை ஆஶ்ரயித்தவர்களிடத்தில் அதிகமான தயையினுல் அவர்களை ரக்ஷிப்பதில் முடிவுபெறுகிறதென்று தாத்பர்யம். ஆக இவ்விடத்தில் நான்காம் வேற்றுமையை யுடைய பதங்களினுல் முன்பு சொல்லிய மேன்மை, ஸௌலப்யம், இவைகள் உபஸம்ஹாரம் செய்யப்படுகின்றன. அடையத்தகுந்தவனுக யிருக்கை, ப்ராப்யனுக இருக்கை, இவைகள் சுருக்கிச் சொல்லப்படுகின்றன வாகவுமாம். இவ்விடத்தில் 'நம:' என்னும் பதத்தினுல் மேலே சொல்லப்போகிற வேறொரு ப்ரயோஜனத்தையு மாசைப்படாதவனுயும், ப்ரபத்தியி லதிகாரியுமாகிய பகவானுக்குச் சேஷமாக இருப்பதிலொன்றிலேயே ஆசையுடையவனுயு மிருக்கிற ஜீவாத்மாவினுடைய, அவனுக்கு வசப்பட்ட ஸ்வரூபம் முதலியவைகளைப்பற்றிய நிரூபணமும் ஏற்படுகிறது.

அதிகாரே ப்ரபித்ஸூநாம் உபாயோத்தர க்ருத்யயோ: ।
ஃபலே ச பாரதந்த்ர்யாதி போத்யம் அத்ர நமோக்திகே ॥

ப — ரை] அத்ர - இந்த ஶ்லோகத்தில், நமோக்திகே - எட்டுநமஸ்ஸப்தங்களினுலும், ப்ரபித்ஸூநாம் - ப்ரபத்தி செய்யவேண்டு மென்கிற ஆசையுடையவர்களுக்கு, அதிகாரே - அதிகாரத்திலும், உபாயோத்தரக்ருத்யயோ: - உபாயம், ப்ரபத்திக்குப் பிறகு செய்யவேண்டிய கைங்கர்யங்களிலும், ஃபலே ச - ப்ரயோஜனத்திலும், பாரதந்த்ர்யாதி - பாரதந்திரனு யிருக்கை முதலியது, போத்யம் - அறியத்தக்கது

மேலும் இந்த எல்லா இடங்களிலும் நிவ்ருத்தி தர்மங்களெல்லாவற்றிற்கும்பொதுவாக அவஶ்யம்வேண்டியதாகிய தத்துவஜ்ஞானமும் அஹங்கார மில்லாமலிருக்கையும் நான்காம் வேற்றுமையுடைய பதங்களினுலும், 'நம:' என்கிற பதங்களினுலும் உறுதிப் படுத்தப்படுகிறது. அனுகூலமாக இருக்கவேண்டு மென்கிற எண்ணமும், ப்ராதி கூலத்தைத்

தவிர வேண்டுமென்கிற எண்ணமும், காணப்படுகிற படியினால் அவைகளின் வழியாக அவைகளை அங்கமாக வுடைய ஶரணாகதியும் ப்ரஸ்தாவிக்கப் பட்டதாகிறது. அதுவுமல்லாமல் ப்ரயாஸரூபமாகிய ப்ரபத்தியே இவ்விடத்தில் 'நமஃ' என்று சுருக்கமாக ப்ரஸ்தாவிக்கப் படுகிறதாகவுமாம். அடிக்கடி திருப்பிச் சொல்லி இருப்பதும் இவ்விடத்தில் 1 'ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம் உத்ருத்ய புஜமுச்யதே' என்றிவை முதலிய இடங்களிலே போலக் கீழ்ச் சொன்னதை உறுதிப் படுத்துவதற்காக 'நமஃ' என்னும் பதம் ஶரணாகதியைச் சொல்லுகிறதென்பதும் தமயந்தியின் சரித்திரத்தில் வ்யக்தமாக ஏற்படுகிறது. 2 'ஶரணம் ப்ரதி தேவாநாம் ப்ராப்தகாலமமந்யத' என்று சொல்லப்பட்ட அர்த்தத்தில் 3 'ஸா வாசா மநஸா சைவ நமஸ்காரம் ப்ரயுஜ்ய ஸா' என்று சொல்லியிருப்பதினால். அப்படியே 4 'ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாதவ: | கச்சத்வமேநம் ஶரணம் ஶரண்யம் புருஷர்ஷபா: ||' என்று மார்க்கண்டேயரினால் சொல்லப்பட்ட ஶரணாகதியைப் பற்றி 'நமஃ' என்னும் பதம் 5 'ஏவமுக்தா: த்ரய: பார்த்தா யமௌ ச புருஷர்ஷபா: | த்ரௌபத்யா ஸஹிதா: ஸர்வே நமஶ்சக்ருர் ஜநார்த்தநம் ||' என்று ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. இதின் மஹிமையும் யஜுஸ்ஸாகையில் 'எவன் இந்தப் பகவானின் பொருட்டு ஸமித்துக்களையும் ஆஜ்யாஹுதிகளையும் வேதமந்த்ரத்தினால் கொடுக்கிறானோ அவனைவிட எந்த மனிதன் நமஸ்காரத்தினால் தன்னை ஸமர்ப்

---

1 கையைத்தூக்கிக்கொண்டு மூன்று தடவை ஸத்யம் என்று சொல்லப்படுகிறது

2 தேவாநாம்ப்ரதி - தேவதைகளைக்குறித்து, ஶரணம் - ஶரணமாக அடைவதையே, ப்ராப்தகாலம் - காலத்திற்குத் தகுந்ததாக, அமந்யத - எண்ணினாள்

3 ஸா - அந்தத் தமயந்தீ, வாசா - வாக்கினாலும், மநஸா சைவ - மனதினாலும், நமஸ்காரம் - நமஸ்காரத்தை, ப்ரயுஜ்ய - செய்துவிட்டு.

4 ஸர்வேஷாம் - எல்லா, லோகாநாம் - லோகங்களுக்கும், பிதா - தகப்பனாரும், மாதா ச - தாயாரும், மாதவ: - பகவான்.

5 புருஷர்ஷபா - புருஷ ஶ்ரேஷ்டர்களே, ஶரண்யம் - ஶரணமாக அடையத் தகுந்தவனாகிய, ஏனம் - இந்தப் பகவானை, ஶரணம் - ஶரணமாக, கச்சத்வம் - அடையுங்கள், ஏவம் - இப்படி, உக்தா: - சொல்லப்பட்டிருக்கிற, த்ரய - மூன்று பேர்களாகிய, பார்த்தா: - குந்தியின் பிள்ளைகளும், யமௌ ச - நகுல ஸஹதேவர்களும், புருஷர்ஷபா: - பரதவம்ஶத்தில் சிறந்தவர்களாகிய, ஸர்வே - இந்த எல்லோரும், த்ரௌபத்யா ஸஹிதா: - த்ரௌபதியோடே கூடினவர்களாய்க்கொண்டு, ஜநார்த்தநம் - பகவானை, நமஶ்சக்ரு - நமஸ்காரம் செய்தார்கள்

பிக்கிருனே அவன் நல்ல யாகத்தைச் செய்தவன்' என்றாத்தமுள்ள வாக்யம் சொல்லப்படுகிறது அபிப்ராயத்தால் இதின் ஆத்தம 1 'ஸமித்ஸாதா⁴நகாதீ³நாம் யஜ்ஞாநாம் ந்யாஸமாத்மந:। நமஸா யோऽகரோத்³தே³வே ஸ ஸ்வத்⁴வர இதீரித:॥' என்று விவரணம் செய்யப்பட்டது அன்றிக்கே தனக்கு வசப்பட்டவையும் தனக்காக ஏற்பட்டதாயிருக்கிற கர்த்ருத்வம், போக்த்ருத்வம், இவைகளைப் பற்றிய ப்ரமம் இல்லாமல் மேலே ப்ரார்த்திக்கப் படுகிற முக்யமான ப்ரயோஜனத்தைப் ப்ரஸ்தாவிப்பதற்காக இந்த 'நம:' என்னும் பதமாகவுமாம் இவ்விடத்தில் 'ப⁴வது (உண்டாகட்டும்)' என்கிற பதம் சேர்த்துக்கொள்ள வேண்டும் உபாயத்தை யனுஷ்டிப்பதற்கு முன்பாகவே பலத்தைப் ப்ரார்த்திக்க வேண்டுமல்லவா இதை வைத்துக்கொண்டு அடுத்த ஶ்லோகத்தில் பலம் சொல்லப்படவில்லை இவ்விடத்தி லடிக்கடி சொல்லி யிருப்பது அதிகமான பக்தியினால் அவஸரத்தின் மிகுதியையும் நிதயமாகத் துடாந்திருக்கவேண்டு மென்பதையும் ப்ரகாசம் செய்கிறது. 21



ந த⁴ர்மநிஷ்டோ²ऽஸ்மி ந சாத்மவேதீ³
ந ப⁴க்திமாம்ஸ்த்வச்சரணாரவிந்தே³ ।
அகிஞ்சநோऽநந்யக³தி: ஶரண்ய
த்வத்பாத³மூலம் ஶரணம் ப்ரபத்³யே ॥ 22

நதாம நிஷ்டோஸமி நசாதம வேதீ
நபகதி மாமஸ த்வச சரணார விநதே |
அகிஞ்சனோநநய கதிஶ ஶரணய!
தவத பாதமூலம ஶரணம ப்ரபதயே ‖ 22

ப - ரை] (நான்) த⁴ர்மநிஷ்ட²: - கர்மயோகத்தில் நிஷ்டையுடையவனாகவும், நாஸ்மி - இல்லை, ஆத்மவேதீ³ - ஆத்ம ஜ்ஞானமுடையவனாகவும், ந - இல்லை, த்வச்சரணாரவிந்தே³ - தாமரைப்பூவைப்போன்ற உம்முடைய திருவடியில், ந ப⁴க்திமாந் – பக்தியையுடையவனுமில்லை, அகிஞ்சந:-ஒரு உபாயமுமில்லாத, அநந்யக³தி:-வேறொரு கதியுமில்லாத

1 ஸமித்ஸாதநகாதீனாம - ஸமித்தைத் த்ரவ்யமாகவுடையது முதலிய, யஜ்ஞானாம்-யஜ்ஞங்களுக்குள், ஆத்மன: - தன்னுடைய, ந்யாஸம் - ப்ரந்யாஸத்தை, ய:- எவன், நமஸா - நம: என்னும பதத்தினால், அகரோத - செய்தானோ, ஸ:- அவன், ஸ்வத்வர: - நல்ல யாகத்தைச் செய்தவன், இதி - என்று, ஈரித - சொல்லப்பட்டான.

நான், ஶரண்ய - ஓ! ஶரணமாக அடையத்தகுந்த பகவானே, த்வத்பாத மூலம் - உம்முடைய திருவடியை, ஶரணம்-ஶரணமாக. ப்ரபத்யே- அடைகிறேன். 22

பா] இப்படி அடையவேண்டிய ப்ரயோஜனமாயும், ஶரணமாக அடையத்தகுந்தவனாயு மிருக்கிற பகவானுடையவும், அவனை அடைகிறவனாயும், ஶரணமாக அடைய விரும்புகிறவனாயு மிருக்கிற ஜீவாத்மாவினுடையவும் ஸ்வரூபம் முதலியவைகள் பகவானால் ப்ரகாசம் செய்யப்பட்ட பிறகு அப்படிப்பட்ட பகவானுடைய பிரிவை ஸஹிக்காதவராய அந்தப் பகவானிடத்திலேயே தன் ஸ்வரூபத்திற்குத் தகுந்த ப்ரயோஜனத்தை அடைவதற்கு விரோதியாகிய காமங்களை நிவ்ருத்திப்பதற்காகத் தன்னதிகாரத்திற்குத் தகுந்ததாகிய ப்ரபத்தியை விசதமாக அனுஷ்டிக்கிறார்—'நதர்ம' என்றாரம்பித்து. எவனுக்குத் தர்மத்தில் நிஷ்டை இருக்கிறதோ அவன் 'தர்மநிஷ்ட:' என்னப்படுகிறான் தர்மமாகிற நிஷ்டையையுடையவன் என்றுமாம். தர்மத்தில், 'நிதிஷ்டதி (நிற்கிறான்)' என்றர்த்தமாகவுமாம், அதாவது நான் உள்ளபடியே இருக்கிற கர்மயோகம், அதின் அங்கங்கள், இவைகளில் யோக்யதை இல்லாதவன் என்றர்த்தம் ஆகையினாலேயே 'நசாத்மவேதீ' என்பதற்குப் பரிசுத்தமான ஜீவாத்மாவை அறிவதை ஸ்வபாவமாக வுடையவனு மல்ல ஜ்ஞானயோகமாயும் அதற்கங்கமாயு மிருக்கிற பூர்ணமான ஜ்ஞானமெனக்கில்லை என்றர்த்தம் இவை இரண்டுமில்லாமையினாலேயே 'ந பக்திமாந், 1 'பக்த்யா த்வநந்யயா ஶக்ய:' என்றிவை முதலிய இடங்களில் சொன்ன பக்தி எனக்கில்லை. இவ்விடத்தில் 2 'ஶரணம் த்வாம் ப்ரபந்நா யே த்யாநயோக விவர்ஜிதா: । தேபி ம்ருத்யு மதிக்ரம்ய யாந்தி தத் வைஷ்ணவம் பதம் ॥' என்கிற ப்ரஹ்மாவின் வசனம் நினைக்கத்தக்கது 'த்வச்சரணாரவிந்தே' என்பதினால் பரிசுத்த மென்பதும் போக்ய மென்பதும் தெரிவிக்கப்படுகிறது இவ்விடத்தில் வரிசை க்ரமம் இப்படி—ஶாஸ்த்ரங்களின் அர்த்தங்களைப் பற்றிய தத்த்வஜ்ஞானத்தினால் கர்மயோக முண்டாகிறது அதினால் ஜயிக்கப்பட்ட மனத்தை யுடையவனுக்குப் பரிசுத்தமான ஜீவாத்மாவை த்யானம் செய்வதாகிய ஜ்ஞான

---

1 வேறொரு இடத்திலும் செல்லாத பக்தியினால் என்னை அறிய முடியும்

2 யே - எவர்கள், த்யான யோக விவர்ஜிதா: - பக்தியோக மில்லாதவர்களாய், த்வாம் - உம்மை, ஶரணம் - ஶரணமாக, ப்ரபந்நா: - அடைந்தார்களோ, தேபி - அவர்களும், ம்ருத்யும் - ஸம்ஸாரத்தை, அதிக்ரம்ய - தாண்டி, தத் - அந்த, வைஷ்ணவம் - விஷ்ணுவினுடைய, பதம் - ஸ்தானத்தை, யாந்தி - அடைகிறார்கள்

யோகமுண்டாகிறது. அதின் வழியாகவாவது நேராகக் கர்மயோகத்தின் வழியாகவாவது ஆத்மாவின் ஸாக்ஷாத்காரம் உண்டாகிறது. அதினால் அடையப்பட்ட அதிகாரத்தை யுடையவனுக்குப் பக்தி யோகமுண்டாகிறது. அதினால் பகவானை அடைவதுண்டாகிறது—என்பது இந்த ஜன்மத்தில் கர்மயோக மில்லாமற் போனபோதிலும் முன் ஜன்மத்தில் செய்த கர்மயோகத்தினால் ஜ்ஞானயோக முண்டாகலாமே. இந்த ஜன்மத்தில் கர்மயோகம் ஜ்ஞானயோக மிரண்டுமில்லாமற்போனபோதிலும் 'ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு' என்றிவை முதலிய இடங்களில் சொல்லிய விதமாகப் பக்தி யோகமுண்டாகலாமே என்று நினைத்து மேல் மேல் இல்லை என்று சொல்லி இருக்கிறது என்று மாத்ரம் சொல்லலாம். இப்படி நான் வேறு ஒருவித உபாயமு மில்லாதவன் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அகிஞ்சந:' என்று. அன்றிக்கே கர்மயோகம் முதலியவைகளுக்குக் காரணங்களாகிய குணம் காமம், முதலியவைகளையும் ஸம்பாதிப்பதுமுடியாது என்கிற அபிப்ராயத்தினால் 'அகிஞ்சந:' என்றுசொல்லி இருக்கிறதாகவுமாம். இப்படிப்பட்ட உனக்கு என்னால் என்ன ப்ரயோஜனம்? வேறொரு ஶரண்யனையாவது வேறொரு ப்ரயோஜனத்தையாவது அங்கீகரிக்கலாமே? என்னில் அதற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'அநந்யகதி:' என்று. வேறொரு ஶரண்யரும் வேறொரு ப்ரயோஜனமும் இல்லாதவன் என்றர்த்தம். இவை இரண்டிலும் காரணத்தை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'ஶரண்ய' 'த்வத்பாதமூலம்' என்று 'ஶரண்ய' என்று அழைத்ததினால் 1 'மாமேகம் ஶரணம் வ்ரஜ', 2 'மாமேகமேவ ஶரணமாத்மாநம் ஸர்வதேஹிநாம் । யாஹி ஸர்வாத்மபாவேந யாஸ்யஸி ஹ்யகுதோபயம் ॥' என்கிற அவனுடைய வார்த்தைகளை தெரிவிக்கப்படுகின்றன. அப்படியே 3 'ஸர்வலோக ஶரண்யாய', 4 'ஶரண்யம்

---

1 என்னொருவனையே ஶரணமாக அடை.

2 ஸர்வ தேஹிநாம் - எல்லா ப்ராணிகளுக்கும், ஆத்மாநம் - ஆத்மாவாகிய, மாம் ஏகமேவ - என்னொருவனையே, ஸர்வாத்மபாவேந - எல்லாவற்றிற்கு மிவன் ஆத்மா என்கிற அபிப்ராயத்தினால், ஶரணம் - ஶரணமாக, யாஹி - அடை, அகுதோபயம் - ஒருவனிடத்திலிருந்தும் பயமில்லாத ஸ்தானத்தை, யாஸ்யஸி - அடையப்போகிறாய்.

3 எல்லா லோகத்திற்கும் ஶரண்யனாகிய.

4 திவ்யா: - உயர்ந்த, மஹர்ஷய: - மஹருஷிகள், த்வாம் - உன்னை, ஶரண்யம் - ஶரண்யனாகவும், ஶரணம்-ரக்ஷகனாகவும், ஆஹு: - சொன்னார்கள்.

ஶரணம் ச காமோஹந் ஜீவாநாம் ஸுஹ்ருதப:’ என்றிவை முதலியதும் ஜ்ஞாபகப்படுத்தப்படுகிறது. அப்படியே லைங்க புராணத்திலும் 1 ‘ய ஏக: புருஷஶ்ரேஷ்ட: பரமாத்மா ஸநாதந: । யஸ்மாத் ப்ரஹ்மா ததஸ் ஸர்வம் தமாஶ்ரித்யைவ முச்யதே ॥’ என்றும், புராண ஸார ஸமுச்சயத்தில் 2 ‘நாந்யம் தேவம் உபாஸீத விஷ்ணோ: பரமகாரணாத் । மாயாம் உத்தர்தும் காமோ வை மாயீயோ தேவதாகண: ॥ நவாந்யஜ்ஞாந காமாப்யாம் நாந்யபக்த்யா பரம் பதம் । ப்ராப்நோதி புருஷ: தஸ்மாத் தமேவ ஶரணம் வ்ரஜேத் ॥’ என்றும் சொல்லப்பட்டது. ஸங்கர்ஷண ஸம்ஹிதையிலும் 3 ‘ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய தமேவ ஶரணம் வ்ரஜேத் । பகவந்தம் வாஸுதேவம் பராநந்த விபூதிதம்’ என்றும், ஜயாக்ய ஸம்ஹிதையில் 4 ‘தமேவ ஸர்வபாவேந ப்ரயாஹி த்வம் மஹாமுநே । அந்யத் ஸர்வம் பரி

1 ய: - எந்த, ஏக: - ஒருவனாகிய, ஸநாதந - அநாதியாகிய, பரமாத்மா - பரமாத்மாவானவன், புருஷஶ்ரேஷ்ட - புருஷர்களுக்குள் சிறந்தவனோ, யஸ்மாத் - எவனிடத்திலிருந்து, ப்ருமமா - ப்ருமமா, தத: - அவனிடத்திலிருந்து, ஸர்வம்-எல்லா வஸ்துக்களும் (உண்டானதோ), தம் - அவனை, ஆஶ்ரித்யைவ - அடைந்தே, முச்யதே - மோக்ஷத்தை அடைகிறான்

2 மாயாம் - ப்ரக்ருதியை, உத்தர்த்துகாம: - தாண்டவேண்டுமென்கிற ஆசையுடையவன், பரமகாரணாத் - முதல் காரணமாகிய, விஷ்ணோ: - விஷ்ணுவைவிட, அந்யம் - வேறு, தேவம் - தேவதையை, நோபாஸீத - உபாஸிக்கக் கூடாது, தேவதாகண: - மற்றத் தேவதைகளின் கூட்டம், மாயீய -மாயீயான பகவானிடத்திலிருந்து உண்டானது அந்யதஜ்ஞானகாமப்யாம் - வேறொருவனைப் பற்றிய ஜ்ஞானம், காமம், இவைகளினால், பரம்பதம் - பரம்பதத்தை, நப்ராபநோதி - அடைவதில்லை, அந்யபக்த்யா - வேறொருவரிடத்தில் பக்தியினாலும், ந - அடைகிறதில்லை, தஸ்மாத் - ஆகையினால், புருஷ: - புருஷன், தமேவ - அந்தப் பகவானையே, ஶரணம் - ஶரணமாக, வ்ரஜேத் - அடையவேண்டும்

3 ஸர்வதர்மாந் - எல்லாத் தர்மங்களையும், பரித்யஜ்ய - விட்டுவிட்டு, தமேவ- அந்த, பராநந்தவிபூதிதம் - மேலான ஆனந்த மயமாகிய விபூதியைக் கொடுக்கிற, பகவந்தம் - பகவானாகிய, வாஸுதேவம் - வாஸுதேவனை, ஶரணம்- ஶரணமாக, வ்ரஜேத் - அடையவேண்டும்

4 மஹாமுநே - ஓ! மஹருஷியே, த்வம் - நீ, தமேவ-அந்தப் பகவானையே, ஸர்வ பாவேந - எல்லாம் இவனே எனகிற அபிப்ராயத்தினால், ப்ரயாஹி - ஶரண மடை, அந்யத்ஸர்வம் - மற்ற எல்லாவற்றையும், பரித்யஜ்ய - விட்டு, தமேவ - அந்தப் பகவானையே, ஶரணம் - ஶரணமாக, வ்ரஜேத - அடையவேண்டும்.

த்யஜ்ய தமேவ ஶரணம் வ்ரஜேத்॥' என்றும், விஷ்வக்ஸேன ஸம்ஹிதையில் 1 'ஸர்வாந் தர்மாந் ஸர்வாந் காமாந் ஐஹிகாமுஷ்மிகாநபி। ஸந்த்யஜ்ய விதிநா நித்யம் ஷட்விதாம் ஶரணாகதிம்॥ ஆசார்யாநுஜ்ஞயா குர்யாத் ஶாஸ்த்ரத்ருஷ்டேந வர்த்மநா॥ காலேஷ்வபி ச ஸர்வேஷு' என்றிவை முதலிய வசனங்களும் ப்ரஸித்தமாயிருக்கிறது. அதைத் தவிர மற்ற எல்லா இடத்திலும் அதிகமான பயமுண்டு என்று தெரிவிப்பதற்காக 'ஸர்வத்ராதிபயம்' என்று சொல்லப்பட்டது. அடையவேண்டிய ப்ரயோஜனமாகிய உம்முடைய பாதமூலத்தை யடைந்தவர்களுக்கு மறுபடி திரும்பிவராமலிருத்தலுண்டு. ஆகையினால் அதைத் தரிப்பது எனக்கு மிகுந்த ப்ரயோஜனம் என்பதும் தெரிவிக்கப்படுகிறது. 'அநந்யகதி:' என்பதின் ஶக்தியினாலும் இது ஏற்படுகிறது. மோக்ஷத்திலாசை யுடையவனாகிய நான் ஶரணமாக அடைகிறேன்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் சொல்லப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார் — 'ஶரணம் ப்ரபத்யே' என்று. இவ்வளவு தூரம் தன்னுடைய நிஷ்டையைச் சொல்லியிருப்பதினால் த்வயமந்த்ரத்தில் முதல் கண்டம் ஶப்தத்தினாலும் அர்த்தத்தினாலும் தெரிவிக்கப்பட்டது. ப்ரபத்தியைச் சொல்லும் ஸந்தர்ப்பத்திலிருக்கிற 'ஶரண' என்னும் பதம் உபாயம் என்னும் அர்த்தத்தைச்சொல்லுகிறது என்று அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் 2 'உபாயே க்ருஹரக்ஷித்ரோ: ஶப்த: ஶரணமித்யயம்। வர்த்ததே ஸாம்ப்ரதம் த்வேஷ உபாயார்த்தைகவாசக:॥' என்று சொல்லப்பட்டது. ப்ரபத்தியின் ப்ர

---

1 ஐஹிகாமுஷ்மிகாநபி - இந்த லோகத்திலுண்டானவைகளும், பரலோகத்திலுண்டானவைகளுமாகிய, ஸர்வதர்மாந் - எல்லா தர்மங்களையும், ஸர்வகாமாந் - எல்லா ஆசைகளையும், ஸந்த்யஜ்ய - விட்டு, விதிநா - ஶாஸ்த்ர விதியினால், நித்யம் - எப்பொழுதும், ஆசார்யாநுஜ்ஞயா - ஆசார்யர்களின் அனுமதியினால், ஶாஸ்த்ர த்ருஷ்டேந - ஶாஸ்த்ரத்தில் அறியப்படுகிற, வர்த்மநா - வழியினால், ஸர்வேஷு - எல்லா, காலேஷு - காலங்களிலும், ஷட்விதாம் - ஆறு விதமான, ஶரணாகதிம் - ஶரணாகதியை, குர்யாத் - செய்யவேண்டும்

2 அயம் - இந்த, ஶரணம் இதி - ஶரணம் என்கிற, ஶப்த: - பதம், உபாயே - உபாயத்திலும், க்ருஹரக்ஷித்ரோ: - வீடு, ரக்ஷகன், இவர்களிடத்திலும், வர்த்ததே - ப்ரயோகிக்கப்பட்டு வருகிறது. ஏஷ: - இந்தப் பதம், ஸாம்ப்ரதம் து - இப்பொழுதோவெனில், அதாவது ஶரணாகதியைச் சொல்லும் ஸந்தர்ப்பத்தில், உபாயார்த்தைகவாசக: - உபாயம் என்கிற அர்த்தம் ஒன்றையே சொல்லுகிறது.

யோகமும் 1 'அஹமஸ்ம்யபராதாநாம் ஆலயோऽகிஞ்சநோऽகதி: । த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி: । சரணாகதிரித்யுக்தா ஸா தேவேऽஸ்மிந் ப்ரயுஜ்யதாம் ।' என்று தெரிவிக்கப்பட்டது. அந்த ப்ரபத்தியின் மஹிமையும் 2 'அநேநைவம் ப்ரபந்நஸ்ய பகவந்தம் ஸநாதநம் । தஸ்யாநுபந்தா: பாப்மாந: ஸர்வே நச்யந்தி தத்க்ஷணாத் ॥ க்ருதாந்யநேந ஸர்வாணி தபாம்ஸி தபோதந । ஸர்வ தீர்த்தா: ஸர்வ யஜ்ஞா: ஸர்வ தாநாநி தத்க்ஷணாத் ॥ க்ருதாந்யநேந மோக்ஷச்ச தஸ்ய ஹஸ்தே ந ஸம்சய: ।' என்று ப்ரகாசம் செய்யப்பட்டது. அந்த ப்ரபத்தி எல்லாப் பலங்களுக்கும் ஸாதனமென்பதும் 3 'யந்ந காமகாமேந ந ஸாத்யம் ஸாதநாந்தரை: ।

1 அஹம் - நான், அபராதாநாம் - குற்றங்களுக்கு, ஆலய: - இருப்பிடமாகவும், அகிஞ்சன: - வேறு உபாயங்களில்லாதவனாயும், அகதி: - வேறு கதியில்லாதவனாயும், அஸ்மி - ஆகிறேன், த்வமேவ - நீரே, மே - எனக்கு, உபாயபூத - உபாயமாக, பவ - ஆகவேண்டும், இதி - என்று, ப்ரார்த்தநாமதி: - ப்ரார்த்தனையாகிய புத்தி, சரணாகதி: - சரணாகதி, இதி - என்று, உக்தா - சொல்லப்பட்டது, ஸா - அது, அஸ்மிந் - இந்த, தேவே - பகவானிடத்தில், ப்ரயுஜ்யதாம் - ப்ரயோகிக்கத்தக்கது.

2 அநேந - இந்த மந்திரத்தினால், ஸநாதநம் - அநாதியாகிய, பகவந்தம் - பகவானை, ஏவம் - இவ்விதமாக, ப்ரபந்நஸ்ய - ப்ரபத்தி செய்தவனுக்கு, ஸர்வே - எல்லா, பாப்மாந: - பாபங்களும், தஸ்ய - அந்தப் பாபத்திற்கு, அனுபந்தா: - தொடர்ந்துவருகிற பலங்களும், தத்க்ஷணாத் - அந்த க்ஷணத்திலேயே, நச்யந்தி - நாசமடைகின்றன, தபோதந - தபஸ்ஸு செய்தவர்களுக்குள் ச்ரேஷ்டராகிய ருஷியே, அநேந - இவனால், ஸர்வாணி - எல்லா, தபாம்ஸி - தபஸ்ஸுக்களும், க்ருதாநி - செய்யப்பட்டதுகள், ஸர்வதீர்த்தா: - எல்லாத் தீர்த்தங்களில் ஸ்நானங்களும், ஸர்வ யஜ்ஞா: - எல்லா யாகங்களும், ஸர்வ தாநாநி - எல்லாத் தானங்களும், தத்க்ஷணாத் - அந்த க்ஷணத்திலேயே, அநேந - இவனால், க்ருதாநி - செய்யப்பட்டன, மோக்ஷச்ச - மோக்ஷமும், தஸ்ய - அவனுடைய, ஹஸ்தே - கையில் (இருக்கிறது), நஸம்சய - ஸந்தேஹமில்லை

3 யத் - எந்தப்பலம், காமகாமேந - காம்யபலங்களிலாசையுடைய, யேந - எவனால், ஸாதநாந்தரை: - மற்ற உபாயங்களினால், நஸாத்யம் - ஸாதிக்கமுடியாததோ, முமுக்ஷுணா - மோக்ஷத்திலாசையுடையவனால், யத் - எந்த மோக்ஷத்திலிருந்து, யதி: - யோகம் செய்பவன், நாவர்த்ததே - திரும்புவதில்லையோ (அப்படிப்பட்ட), பரமம் தாம - பரமபதம், பக்த்யா - பக்தியினால், நப்ராப்யதே - அடையப்படுகிறதில்லையோ, யத் - எந்தப்பலம், ஸாங்க்யேந - ஜ்ஞான யோகத்தினாலும், யோகேந - கர்மயோகத்தினாலும், ந - அடையப்படவில்லையோ, மஹாமுநே - ஓ! மஹாருஷியே, தத்தத் - அந்தந்தப் பலம், தேநதேந - அந்தந்த மனு

ஷடங்கலக்ஷணா யச்சாஸ்த்ரேஷு யோகேஷு ச லக்ஷித: । ப்ரபத்தே பரமம் யாதி யதோ நாத்வநே யதி: தேந தேநாப்யதே தத்தத் ந்யாஸேநைவ மஹாமுநே । பரிபூர்ணம் தேநைவ ஸாத்யதே ஸர்வம் ஷாட்குண்ய: ॥' என்று சொல்லப்பட்டது இவ்விடத்தில் 1 'அநந்ய ஸாத்யே ஸ்வாபீஷ்டே மஹாவிஶ்வாஸ பூர்வகம் । ததேகோபாயதா யாச்ஞா ப்ரபத்தி: ஶரணாகதி: ॥' என்று பரதமுனியினால் செய்யப்பட்ட லக்ஷணமும் பொருத்தமுடையது இவ்விடத்தில் 'அநந்ய ஸாத்யே' என்பதினால் ஶரணமாக அடையப் படுகிறவனைத் தவிர வேறு எவனாலும் தன்னாலும் ஸாதிக்க முடியாதென்பதும் அவனால் ஸாதிக்கக் கூடுமென்பதும் சொல்லப் படுகிறது 'ஸ்வாபீஷ்டே' என்பதினால் ஸுகமும், துக்கம் நிவ்ருத்திப்பதும், அதின் உபாயங்களும் சேர்த்துச் சொல்லப்படுகின்றன. இவ்விடத்தில் ப்ரமாணங்களுக்கு விருத்தமானதுபலமாகாது ஶரணயனான பகவானுடைய அபிப்ராயத்திற்கு விருத்தமாயிருப்பதும் ஆநுகூல்ய ஸங்கல்பம் முதலிய அங்கத்தோடு சேராது தன்னுடைய அனுகூலத்திற்கு விரோதமாயிருப்பதும் விவேகியாகிய இவனுக்கு 'ஸ்வாபீஷ்டே' என்பதினாலேயே நிராகரிக்கப்பட்டது உபாயம் லகுவானது என்பது முதலிய காரணங்களினால் அசைக்கமுடியாத விஶ்வாஸம் மஹாவிஶ்வாஸம் 'ததேகோபாயதா' எனனும் பதத்தினால் பரபத்தி செய்த பிறகு தன்னுடைய யத்தினத்தை அபேக்ஷிக்க வேண்டியதில்லை என்பதும் தெரிவிக்கப் படுகிறது. 'ப்ரபத்தி: ஶரணாகதி: ' என்று ஒரே அர்த்தங்களைச் சொல்லக்கூடிய பதங்களைச் சொல்லி இருக்கிறது 'ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப:' என்றிவை முதலிய இடங்களில் ப்ரபத்தி ஆறுவிதமென்று சொல்லி இருப்பது அங்கம், அங்கி, இவைகளைச் சேர்த்துச் சொல்லுவதை அபிப்ராயத்திலுடையது 'ஷடங்கம் தத்வாயனு' என்கிற இடத்திலும் ஆறங்கத்தை உடையது என்று சொல்லி இருப்பது அஷ்டாங்கயோக மென்று சொல்லி இருப்பதைப் போல. அப

---

ஷ்யனால, நயாஸேனைவ - ஶரணாகதியினாலேயே, ஆப்யதே - அடையப்படுகிறது, புருஷோத்தம: - புருஷ ஶ்ரேஷ்டனாகிய, பரமாத்மாச - பரமாத்மாவும், தேனைவ - அந்தப்ப்ராயாஸத்தினாலேயே, ஸாத்யதே - அடையப்படுகிறான்.

1 ஸ்வாபீஷ்டே - தனது விசசிக்கப்பட்ட பலம், அநந்யஸாத்யே- வேறொன்றினாலும் ஸாதிக்கமுடியாம லிருக்கும்பொழுது, மஹா விஶ்வாஸ பூர்வகம் - மஹா விஶ்வாஸத்தை முனனிட்டுக்கொண்டு, ததேகோபாயதா யாசனு - அவனொருவனே உபாயமாக இருக்கவேண்டுமென்று யாசிப்பது, ப்ரபத்தி - ப்ரபத்தியென்பதும், ஶரணாகதி - ஶரணாகதி யென்பதும

படிக்கில்லாவிடில் 1 ‘நிக்ஷேபாபரபர்யாயோ ந்யாஸ: பஞ்சாங்க ஸம்யுத: ।’, 2 ‘ப்ரபத்திம் தாம் ப்ரயுஞ்ஜீத ஸ்வாங்கை: பஞ்சபிராவ்ருதாம் ॥’ என்றிவை முதலிய வசனங்களோடு விரோதம் வரும். 3 ‘ஶாஶ்வதீ மம ஸம்ஸித்திரியம் ப்ரஹ்வீபவாமி யத் ॥ புருஷம் பரமுத்திஶ்ய ந மே ஸித்திரிதோந்யதா । இத்யங்கம் உதிதம் ஷஷ்டம் பலேப்ஸா தத்விரோதினீ ॥’ என்று அஹிர்புத்ந்யனால் சொல்லப்பட்ட மற்றொரு அங்கம் மோக்ஷத்திற்காகப் பண்ணுகிற ப்ரபத்தியில் மாத்திரம் அனுஷ்டிக்கவேண்டியது. இவ்விடத்தில் அங்கி பரந்யாஸமென்பதும் 4 ‘ஆத்மாத்மீய பரந்யாஸோ ஹ்யாத்ம நிக்ஷேப உச்யதே’ என்று நிஶ்சயம் செய்யப்பட்டது. ஆகையினால் இவ்விடத்தில் முன் ஶ்லோகத்தில் ‘நம:’ என்னும் பதத்தை ப்ரயோகித்திருப்பதினால் ஆனுகூல்ய ஸங்கல்பமும் ப்ராதிகூல்ய வர்ஜனமும் நிரூபிக்கப்பட்டன. ‘ந தர்மநிஷ்ட:’ என்பது முதலியவைகளினால் ஶக்தி இல்லாதவனுக்கு அதிலதிகாரமென்பதும் கார்பண்யமாகிற அங்கமும் நிரூபிக்கப்பட்டது. நம்மை ரக்ஷிக்கப்போகிறான் என்கிற விஶ்வாஸமோவெனில் ‘ஶரண்ய’ என்றழைத்ததினால் தெரிவிக்கப்படுகிறது. ரக்ஷிப்பதில் ஸாமர்த்திய முடையவனும் கருணையை யுடையவனுமா யிருப்பவன் ஶரண்யன் என்னப்படுகிறான். அவனே தன்னை ஆஶ்ரயித்தவனாகிய என்னை ரக்ஷிக்கப்போகிறான் என்று நம்பத்தகுந்தவன். ‘ப்ர’ என்னும் உபஸர்க்கத்தோடு சேர்ந்த ‘பத்யே’ என்னும் க்ரியாபதமும் நிஶ்சயம் விஶேஷமாயிருக்கிறதென்பதைத் தெரிவிக்கிறது. ‘க்ஷுத்ராஶ்ரயம்

1 நிக்ஷேபாபரபர்யாய: - நிக்ஷேபமென்கிற மற்றொரு பெயருடைய, ந்யாஸ - பரந்யாஸம், பஞ்சாங்க ஸம்யுத - ஐந்தங்கங்களை யுடையது

2 பஞ்சபி:-ஐந்தாகிய, ஸ்வாங்கை: - தன்னுடைய அங்கங்களுடன், ஆவ்ருதாம் - சேர்ந்திருக்கிற, தாம - அந்த, ப்ரபத்திம் - ப்ரபத்தியை, ப்ரயுஞ்ஜீத - செய்யவேண்டும்

3 பரமபுருஷம உத்திஶ்ய - பரம புருஷனைக் குறித்து, ப்ரஹ்வீபவாமி- வணங்குகிறேன், யத - என்கிற எதுவோ, இயம் - இது, மம - எனக்கு, ஶாஶ்வதீ - அழிவில்லாத, ஸம்ஸித்தி - ஸித்தி, மே - எனக்கு, இதோந்யதா - இதைவிட வேறு, ஸித்தி - ஸித்தி, ந - இல்லை, இதி - என்பது, ஷஷ்டம் - ஆறாவது, அங்கம - அங்கமாக, உதிதம் - சொல்லப்பட்டது, பலேப்ஸா - பலத்தி லாசை, தத்விரோதினீ - அதற்கு விரோதியானது.

4 ஆத்மாத்மீயபரந்யாஸ - தன்னையும், தனக்குச் சேர்ந்த வஸ்துக்களையும் பரந்யாஸம் செய்வது, ஆத்மநிக்ஷேப:-ஆத்ம நிக்ஷேப மென்று, உச்யதே - சொல்லப்படுகிறது.

ஶரணம் ப்ரபத்யே' என்பதிலே கோபத்ருத்வ வரணமும் ந்யா ஸமும் ஏற்பட்டது பராத்தத்தோடு சேர்ந்த ந்யாஸமல்லவோ ப்ரபத்தி என்னப்படுகிறது, பிக்ஷை முதலியவைகளை மாத்திரம் பரார்த்திப்பதிலும், ஆஜ்ஞை முதலியவைகளிலே ந்யாஸம் செய்வதிலும், ப்ரபத்தி என்னும் பதம் காணப்படாமையிலே இவ்விடத்தில் பெரிய உபாயத்தையும் லகுவான உபாயத்தையும் அதையாவது இதையாவ தனுஷ்டிக்க வேண்டுமென்று விகல்பமாகச் சொல்லுவது பொருந்தா தாகையிலே ப்ரபத்தி பக்திக்கு அங்கம் என்று ஸந்தேஹிக்கவேண்டிய தில்லை, ஸ்நானம் முதலியவைகளின் விகல்பங்களைப் போலவே வெவ் வேறு அதிகாரிகளுக்கு இது சொல்லப்பட்டதென்பது ஸ்தாபிக்கப்பட் டிருப்பதிலே

ப்ரணவாதி ந்யாயத: அத்ர ப்ரபத்தேஸ் தத்வவேதிபி: ।
யதாதிகாரம் அங்கத்வம் ஸ்வாதந்த்ர்யம் ச தர்ஶிதம் ॥

ப - ரை] அத்ர - இவ்விடத்தில், தத்வவேதிபி: — தத்துவத்தை அறிந்தவர்களிலே, ப்ரணவாதிந்யாயத: - ப்ரணவம் முதலியவைகளின் நியாயத்திலே, யதாதிகாரம் - அவரவர் அதிகாரத்திற்குத் தக்கபடி, ப்ரபத்தே: - ப்ரபத்திக்கு, அங்கத்வம் - அங்கமாக இருக்கையும், ஸ்வாதந்த்ர்யம் ச - ஸ்வதந்திரமா யிருக்கையும் (உண்டென்று), தர்ஶிதம் - காட்டப்பட்டது.

இவ்விடத்தில் 'ப்ரபத்யே' என்று நிகழ்காலமாகச் சொல்லி இருப்பதும் 'தேவதைகளுக்குக் கிருபபிடாகிய தாபத்தை அறுக்கி றேன்' என்றாற்றமுள்ள மந்திரத்திலே போல அனுஷ்டிக்கிற காலத்தை அபிப்ராயத்தில் கொண்டது. 22



ந நிந்திதம் கர்ம தத் அஸ்தி லோகே
ஸஹஸ்ரஶோ யந்ந மயா வ்யதாயி ।
ஸோऽஹம் விபாகாவஸரே முகுந்த!
க்ரந்தாமி ஸம்ப்ரதி அகதிஸ் தவாக்ரே ॥ 23

ந நிந்திதம் காம தத்ஸ்தி லோகே
ஸஹஸ்ரஶோ யந்ந மயா வயதாயி ।
ஸோஹம விபாகாவஸரே முகுந்த!
காந்தாமி ஸம்ப்ரத யகதிஸ தவாகரே ॥ 23

ப - ரை] யச் - எந்த (நிஷித்தகாரியம்), ந்யா - என்றால், ஸஹஸ்ரஶ: - அநேகம் தடவைகள், ந வ்யதாயி - செய்யப்படவில்லையோ, தச் - அப்படிப்பட்ட, நிந்திதம் - ஶாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்பட்ட, கர்ம - காமம், லோகே - லோகத்தில, நாஸ்தி - இல்லை, ஸோऽஹம் - அப்படிப்பட்ட நான், முகுந்த - ஓ! பகவானே, விபாககாலஸமயே - அவைகளின் பரிபாகம் வரும் ஸமயத்தில், தவாக்ரே - உம்மெதிரில், ஸம்ப்ரதி - இப்பொழுது, அகதி: - வேறுகதி இல்லாதவனாய், க்ரந்தாமி - கூப்பிடுகிறேன 23

பா] பிறகு ஏழு ஶ்லோகங்கள் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட உபாயத்தின் அனுஷ்டானத்தை ஸ்திரப்படுத்துவதற்காகச் சொல்லப்படுகின்றன அவைகளுக்குள் க்ரமமாகப் பரமாத்மா எல்லா விரோதிகளையும் போக்குவதற்குத் தகுந்த குண விஶேஷங்களை யுடையவனென்பதும், ரக்ஷிக்கப்படுகிறவன் ரக்ஷிக்கிறவன் இவர்களுக்கு ஒருவர்க்கொருவர் கிடைத்தது லாபமென்றும், தன்னை விட்டுவிட்டால் பரமாத்மாவிற்கு அனிஷ்டம் வருமென்பதும், தான் வேறுகதியையுடையவனல்லாமையினால் அவனால் விடத்தகாதவனென்பதும், ரக்ஷிக்கிறவனாகிய பரமாத்மா மிகவும் போக்யனாகையினால் மற்ற ப்ரயோஜனங்களில் தனக்கு ஆசை இல்லை என்பதும், இந்த உபாயம் ஸுலபமாகச்செய்யக்கூடிய தென்பதும், மிகவும் போக்யமானதென்பதும், தாத்பர்யத்தினால் ஸ்தாபிக்கப்படுகிறது அதில் முதல் ஶ்லோகத்தில் கீழ்ச் சொல்லியபடி உபாயங்களின் வரிசைகளில்லாமற் போனபோதிலும் தோஷங்களில்லாமலிருந்தாலதை ஆதாரமாக வைத்துக்கொண்டு க்ரமமாகக் கர்மயோகம் முதலியவைகளை யுண்டாக்கி மோக்ஷமாகிற ப்ரயோஜனத்தை அடையலாமே; அதற்காக ப்ரபத்திசெய்வதினாலென்ன ப்ரயோஜனம்" என்று க்ஷேபம் வரில அதற்கு ஸமாதானமாகத்தான் அகிஞ்சனனென்பதையே உறுதிப்படுத்துகிறார்— 'ந நிந்திதம்' என்கிற பாதி ஶ்லோகத்தினால். 'நிந்திதம்' என்பதற்கு நிந்திக்கப்பட்ட காரியம் என்றர்த்தம் 1 'யதார்யா: க்ரியமாணம் ஹி ஶம்ஸந்தி ஸ தர்ம:, யம் கர்ஹந்தே ஸோऽதர்ம:' என்றுபஸ்தம்பர் சொன்னார் இவ்விடத்தில் 'நிந்தித' என்னும் பதத்தினால் காம்ய காம

1 ஆர்யா - பெரியோர்கள், க்ரியமாணம - செய்யப்படுகிற, யத - எந்தக் காரியத்தை, ப்ரஶம்ஸந்தி - ஸ்தோத்திரம் செய்கிறார்களோ, ஸ. - அது, தர்ம - தர்மம், யத - எந்தக் காரியத்தை, கர்ஹந்தே - நிந்திக்கிறார்களோ, ஸ. - அது, அதர்ம: — அதர்மம்.

மும் சொத்துச் சொல்லப்படுகிறது, முமுக்ஷுவைக் குறித்து அதுவும் நிந்திக்கப்பட்டதாகையினால் 'லோகே' என்பதற்கு ஸம்ஸாரிகளாகிய ஜனங்களெல்லாவற்றிலும் என்றர்த்தம் அன்றிக்கே 'லோக்யந்தே அநேந (இதினால் வஸ்துக்களறியப்படுகின்றன)' என்கிற வ்யுத்பத்தியினால் 'லோக:' என்பது ப்ரமாணம் அதில் இல்லை என்பதினால் அப்படிப்பட்ட காம்ய ப்ரமாணத்தில் மேற்படவில்லை என்றர்த்தம் இவ்விடத்தில் ஶாஸ்த்ரமாகிய ப்ரமாணம் சொல்லப்படுகிறது 'ஸஹஸ்ரஶ:' என்பது கணக்கில்லாத ஆவ்ருத்தியைச் சொல்லுகிறது 1 'ஶதம் ஸஹஸ்ரமயுதம் ஸர்வமாநந்த்ய வாசகம்' என்றல்லவோ சொல்லுகிறார்கள் 'யஜ்' என்பதற்குச் ஶரணாகதனை விட்டுவிடுவது முதலியது என்றர்த்தம். அதுவும் வேதங்களினால் நிந்திக்கப்பட்டது. அப்படியே மநு 2 'ஶரணாகதம் பரித்யஜ்ய வேதம் விப்லாவ்ய ச த்விஜ:। ஸம்வத்ஸரம் யவாஹாரஸ்தத் பாபமபஸேதி॥' என்றும், 3 'பாலக்நாம்ஶ்ச க்ருதக்நாம்ஶ்ச விஶுத்தாநபி தர்மத:। ஶரணாகதஹந்த்ரூம்ஶ்ச ஸ்த்ரீஹந்த்ரூம்ஶ்ச ந ஸம்வஸேத்॥' என்றும் சொல்லி இருக்கிறார் ரகுவும் ராக்ஷஸனைக்குறித்து 4 'ஶக்தோऽபி ரக்ஷணே யோ லோபாத் பயாத்வா ஶரணா

---

1 ஶதம், ஸஹஸ்ரம், அயுதம், என்கிற பதங்கள் எண்ணிறந்தவைகளென்பதைச் சொல்லுகின்றன.

2 ஶரணாகதம் - ஶரணமாக அடைந்தவனை, பரித்யஜ்ய - விட்டு, த்விஜ - ப்ராம்மணனாயிருந்து, வேதம் - வேதத்தை, விப்லாவ்ய - அத்யயனம் செய்யாமலிருந்து, தத்பாபம் - அதினாலுண்டான பாபத்தை, ஸம்வத்ஸரம் - ஒரு வருஷம், யவாஹார: - யவதான்யத்தை ஆகாரமாகச் செய்து கொண்டு, அபஸேதி - போக்குகிறான்

3 பாலக்நாந் - ஶிசுக்களைக் கொன்றவர்களையும், க்ருதக்நாந் - உபகாரத்தை மறந்தவர்களையும், ஶரணாகதஹந்த்ரூந் - ஶரணாகதர்களைக் கொன்றவர்களையும், ஸ்த்ரீஹந்த்ரூந் - ஸ்திரீகளைக் கொன்றவர்களையும், தர்மத: - தர்மத்தினால், விஶுத்தாநபி - பரிசுத்தர்களானபோதிலும், நஸம்வஸேத் - சேரக்கூடாது

4 ரக்ஷணே - காப்பாற்றுவதில், ஶக்தோऽபி - சக்தியுள்ளவனாயிருந்தும், லோபாத் - ஆசையினாலாவது, பயாத்வா - பயத்தினாலாவது, ய: - எந்த, புருஷ: - மனிதன், லோகே - லோகத்தில், ஶரணாகதம் - ஶரணமாக அடைந்தவனை, த்யஜேத் - விடுவனோ, ஸ: - அவன், ப்ருமஹத்யாம் - ப்ரும்மஹத்தி தோஷத்தை, விந்ததி - அடைகிறான், யே - எவர்கள், மஹாபாதகிந: - மஹாபாதகிகளோ (அவர்களும்), ப்ராயஶ்சித்தேந - ப்ராயஶ்சித்தத்தினால், ஶுத்யந்தி - ஶுத்தியடைகிறார்கள், ஶரணாகத ஹந்த்ரூணாம் - ஶரணாகதர்களைக் கொன்றவர்களுக்கு, க்வாபி - ஒரு கார்யத்திலும், ஶுத்தி - பரிசுத்தி, நவித்யதே - இல்லை, மஹாபாதகிநோபி - மஹாபாதகிகளும், ஹயமேதேந - அஶ்வமேதயாகத்தினால், பூயந்தே - பரிசுத்தம் செய்யப்படுகிறார்கள், ரஜனீசர - ஓ! ராக்ஷஸனே, ஶரணாகத ஹந்தார: - ஶரணாகதர்களைக் கொன்றவர்கள், நதேவ - பரிசுத்தம் செய்யப்படுகிறதில்லை.

மதம்। யஸ்ய ப்ரஸாதாத் ஸோ ஹரிவோப்ரதோ ஸ ஹஸ்த்யம் ஸவித்ருதி॥ ஶரணாகதம் ஹந்யாத் ஶரணாகதஹிம்ஸகா ஹிதே। ஶரணாகத ஹந்தாரம் ஶாஸ்த்ர: ஶாஸ்த்ரேண விந்ததே॥ ... ஶரணாகத ஹந்தாரோ நகேவல ராஜநீவ ர॥’ என்று சொல்லியிருக்கிறார் 1‘ஸுதுராசாரோ(அ)பி சேத் புமாந் கோபி நாகாத் உத்தாரோ। முச்யதே ந து பாபாத்மா ஶரணாகதஹிம்ஸக:॥’ என்றிவை முதலியது பரமமாவிஞல் சொல்லப்பட்டது. ப்ருஹஸ்பதியும் 2 ‘நாஸ்ய பீஜம் ரோஹதி ரோஹகாலே நாஸ்ய வர்ஷம் வர்ஷதி வர்ஷகாலே। பீதம் ப்ரபந்நம் ப்ரததாதி ஶத்ரவே ந ஸோ(அ)ந்தரம் லபதே த்ராணமிச்சந்। மோகமந்நம் விந்ததே அப்ரசேதா: ஸ்வர்காத் லோகாத் ப்ரஶ்யதி நஷ்டசேஷ்ட:॥ பீதம் ப்ரபந்நம் ப்ரததாதி ஶத்ரவே ஸேந்த்ரா தேவா: ப்ரஹரந்த்யஸ்ய வஜ்ரம்॥’ என்று சொன்னார் இப்படியே 3 ‘ஶாஸ்த்ரேஷு நிஷ்க்ருதி

---

1 ஸுதுராசார அபிசேத - மிகவும் கெட்ட நடவடிக்கை யுடையவனாக இருந்தபோதிலும், புமாந் - மனிதன், கோபி - ஒரு உபாயத்தினால், நாகாத் - நரகத்தி லிருந்தும், முச்யதே - விடப்படுகிறான், பாபாத்மா - பாபிஷ்டனாகிய, ஶரணாகத ஹிம்ஸக -ஶரணாகதனைக் கொன்றவன், நது -விடப்படுகிறதில்லை

2 பீதம் - பயந்தவனையும், ப்ரபந்நம் - ஶரணமாக அடைந்தவனை (எவன்), ஶத்ரவே - சத்துருவின் பொருட்டு, ப்ரததாதி - கொடுக்கிறானோ, அஸ்ய – இவனுக்கு, ரோஹகாலே - முளைக்கவேண்டிய காலத்தில், பீஜம் - விரை,நரோஹதி- முளைக்கிறதில்லை, வர்ஷகாலே - மழைபெய்ய வேண்டியகாலத்தில், வர்ஷம் - மழை, நவர்ஷதி - பெய்கிறதில்லை, ஸ -அவன், த்ராணம - ரக்ஷிப்பதை, இச்சந் இச்சித்துக்கொண்டு, அந்தரம - இடத்தை, நலபதே - அடைகிற தில்லை, பீதம் - பயந்தவனை, ப்ரபந்நம - ஶரணமாக அடைந்தவனே, ஶத்ரவே - சத்துருவின் பொருட்டு, ய – எவன், ப்ரததாதி – கொடுப்பானோ, அப்ரசேதா - புத்தியில்லாதவனாகிய அவன, மோகம-வீணாக, அன்னம-ஆஹாரத்தை, விந்ததே - அடைகிறான், அதாவது ஸாப்பிடுகிறான, நஷ்ட - பாபத்தோடு கூடிய, சேஷ்ட - வியாபாரத்தை யுடைய (அவன்), ஸ்வர்க்காத் லோகாத் - ஸ்வர்க்க லோகத்தி லிருந்து, ப்ரஶ்யதி - நாசமடைகிறான், ஸேந்த்ரா. - இந்திரனோடு கூடிய, தேவா: - தேவதைகள், தஸ்ய அவனுக்கு, வஜ்ரம - வஜ்ராயுதத்தை, ப்ரஹரந்தி - அடிக்கிறார்கள், அதாவது அவனே வஜ்ராயுதத்தினால் அடிக்கிறார்கள் என்றர்த்தம்.

3 மஹாபாதகிநாமபி - மஹாபாதகிகளுக்கும், ஶாஸ்த்ரேஷு - ஶாஸ்த்ரங்களில், நிஷ்க்ருதி, - ப்ராயஶ்சித்தம, த்ருஷ்ட - பார்க்கப்பட் டிருக்கிறது, ஶரணாகத ஹந்துஸ்து:-ஶரணாகதனைக் கொன்றவனுக்கோவெனில், க்வசித - ஒருஶாஸ்த்ரத்திலும, நிஷ்க்ருதி, - ப்ராயஶ்சித்தம, நத்ருஷ்டா - காணப்படவில்லை, லோபாத்- ஆசையினுலாவது, த்வேஷாத - த்வேஷத்தினுலாவது, பயாத்வாபி -

த்ருஷ்டா ப்ரஹ்மாவதகினா ஹ்யபி | ஶரணாகத ஹந்துஸ்து ந த்ருஷ்டா நிஷ்க்ருதி: க்வசித் | மோஹாச் சேஷாத் பயாத்வாபி யஸ்த்யஜேச் சரணாகதம் | ப்ரஹ்மஹத்யா ஸமம் தஸ்ய பாபமாஹுர் மனீஷிண:॥" என்றிவை முதலியது மறியத்தக்கது. அபய ப்ரதான ப்ரகரணத்தில் ஸ்ரீராமனும் 1 'ருஷே: கண்வஸ்ய புத்ரேண கண்டுனா பரமர்ஷிணா | ஶ்ருணு காதாம் புரா கீதாம் தர்மிஷ்டாம் ஸத்யவாதினா ॥ பத்தாஞ்ஜலிபுடம் தீனம் யாசந்தம் ஶரணாகதம் ॥ ந ஹந்யாதாந்ருஶம்ஸ்யார்த்தமபி ஶத்ரும் பரந்தப | ஆர்த்தோ வா

பயத்தினாலாவது, ஶரணாகதம் - ஶரணமாக அடைந்தவனை, ய:-எவன், த்யஜேத் - விட்டு விடுவானோ, மனீஷிண: - புத்திமான்கள், தஸ்ய - அவனுடைய, பாபம் - பாபத்தை, ப்ரஹ்மஹத்யா ஸமம் ப்ரஹ்மஹத்திக்கு ஸமமாக, ஆஹு: - சொன்னார்கள்.

1 கண்வஸ்ய - கண்வரென்கிற, ருஷே: - ருஷியினுடைய, புத்ரஸ்ய - புத்ரனாகிய, கண்டுனா - கண்டுவென்கிற, ஸத்யவாதினா - உண்மையைச்சொல்லுகிற, பரமர்ஷிணா - மஹருஷியினால், புரா - முன்னால், கீதாம் - சொல்லப்பட்ட, தர்மிஷ்டாம் - தர்மத்தில் நிலையை யுடைய, காதாம் - ஶ்லோகத்தை, ஶ்ருணு - கேள், பத்தாஞ்ஜலிபுடம் - கையைக் கூப்பிக்கொண்டவனையும், தீனம் - துக்கப்பட்டுக்கொண்டும், யாசந்தம் - ப்ரார்த்தித்துக் கொண்டும், ஶரணாகதம் - ஶரண மாக அடைந்திருக்கிறவனை, ஶத்ருமபி - அவன் ஶத்துருவா யிருந்த போதிலும், பரந்தப - சத்துருக்களைக் கொல்லும் ஸ்வபாவத்தையுடைய ஸுக்ரீவ, ஆந்ருஶம்ஸ்யார்த்தம் - இவன் தயையில்லாதவன் என்கிற தோஷம் வராம லிருப்பதற் காக, ந ஹந்யாத - கொல்லக் கூடாது, பரேஷாம் - சத்துருக்களுக்குள், ஶரணாகத: - ஶரணாகதிசெய்தவனாகிய, அரி - சத்துரு, ஆர்த்தோவா - அதிகத் துக்கத்தை யுடையவனாக இருந்தபோதிலும், யதிவா த்ருப்த:, - த்ருப்தனா யிருந்த போதிலும், க்ருதாத்மனா-புத்திமானா யிருப்பவனால், ப்ராணான் - ப்ராணன்களை, பரித்யஜ்ய - விட்டுவிட்டு, ரக்ஷிதவ்ய - ரக்ஷிக்கத் தக்கவன், ஸ - அவன், பயாத்-பயத்தினாலாவது, லோபாத்வா - லோபத்தினாலாவது, காமாத்வா - காமத்தினாலா வது, யதாஸத்யம் - ஸத்யப்படிக்கு, ஸ்வயா - தன்னுடைய, ஶக்த்யா - ஶக்தியி னால், ந ரக்ஷித: சேத் - காப்பாற்றப்படாமல் போனானே யானால், தத்வத்- அதினா லுண்டாகிய பாபம், லோககர்ஹிதம் - லோகத்தினால் நிந்திக்கப்பட்டதாகும், தஸ்ய- அந்த, ரக்ஷிண - காப்பாற்றுகிறவன், பஶ்யத: - பார்த்துக்கொண்டிருக்கும் பொ ழுது, விநஷ்ட: - நாசமடைந்திருக்கிற, ஶரணாகத - ஶரணாகதன், அரக்ஷித: - கா ப்பாற்றப் படாதவனாகக் கொண்டு, தஸ்ய - அவனுடைய, ஸர்வம் - எல்லா,ஸுக்ரு தம் - புண்யத்தையும், ஆதாய - க்ரஹித்துக்கொண்டு, கச்சேத் - போவானே, (அந்தப் பாபம்) அஸ்வர்க்யம் - ஸ்வர்க்கத்திற்குத் தடையா யிருக்கும், அயஶஸ்யம்- அபகீர்த்தியைக் கொடுக்கும்,பலவீர்யவிநாஶனம்-பலம், பராக்ரமம், இவைகளைநாசம் செய்து விடும்.

யதி வா த்ருப்த꞉ பரேஷாம் ஶரணாகத꞉ ॥ அரி꞉ ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய꞉ க்ருதாத்மநா ॥ ஸசேத் பயாத்வா மோஹாத்வா காமாத்வாபி ந ரக்ஷதி । ஸ்வயா ஶக்த்யா யதா ஸத்த்வம் தத் பாபம் லோககர்ஹிதம் ॥ விநஷ்ட꞉ பஶ்யதஸ்தஸ்ய அரக்ஷிண꞉ ஶரணாகத꞉ । ஆதாய ஸுக்ருதம் தஸ்ய ஸர்வம் கச்சேதரக்ஷித꞉ ॥ ஏவம் தோஷோ மஹாநத்ர ப்ரபந்நாநாமரக்ஷணே । அஸ்வர்க்யம் சாயஶஸ்யம் ச பலவீர்யவிநாஶநம் ।' என்று சொல்லியிருக்கிறார். இப்படிப்பட்ட ஶரணாகதனை விட்டுவிடுவது முதலியதும் எது என்னால் செய்யப்படவில்லையோ அப்படிப்பட்டதில்லை 'மயா' என்பதற்கு ஆசை முதலியவைகளினால் கெடுக்கப்பட்ட மனத்தையுடையவனும் போகமாகிற பாலைவனத்தில் வழி நடப்பவனுமிருக்கிற என்னால் என்று தாத்பர்யம். இப்படி எண்ணிறந்த பாபங்களினால் வ்யாபரிக்கப்பட்ட தன்னுடைய தசையை அநுவாதம் செய்துகொண்டு பகவான் வேறொரு ஶரண்யனில்லாதவர்களுக்குக் காப்பாற்றுகிறவன் என்று தன்னுடைய நிஶ்சயத்தையும் மேல்பாதி ஶ்லோகத்தினால் ப்ரகாசம் செய்கிறார்— 'ஸோऽஹம்' என்று இப்பொழுதும் இப்படிப்பட்ட ஸ்வபாவத்தை யுடையவனாய் அவைகளுக்கு ப்ராயஶ்சித்தம் செய்யவேண்டிய ஸமயத்தில் உன்னால் விதிக்கப்பட்ட அந்தந்த ப்ராயஶ்சித்தங்களில் ப்ரவ்ருத்தியாதவனாய் அதில் ஆசை, அதில் அதிகாரம், ஶக்தி, அநுதாபம் முதலியவைகளை அறியாத நான் என்று தாத்பர்யம் 'ஸம்ப்ரதி விபாகாவஸரே' என்றநுவதித்துக் கொள்ளவேண்டியது ப்ராயஶ்சித்தம் செய்யவேண்டிய காலம் தாண்டிப்போன பிறகு தடுக்கமுடியாத உத்பத்தியையுடைய அந்தந்தப் பாபங்களின் பலங்களை அநுபவித்தல்லது நிவ்ருத்தி செய்யமுடியாத ஸமயத்தில் என்றர்த்தம் 'முகுந்த' என்பதற்கு ஶரணமாக அடைந்தவர்களினுடைய அநாதியாக உண்டாகிய அபராதங்களின் கூட்டத்தை அநாதரவு செய்துவிட்டு மோக்ஷத்தை அடையும் இடத்தைக்கொடுப்பவனே என்றர்த்தம் அப்படியே ஸ்ரீஸாத்வத ஸம்ஹிதையில் 1 'துராசாரோபி ஸர்வாஶீ க்ருதக்நோ நாஸ்திக꞉ புரா । ஸமாஶ்ரயேதாதிதேவம் ஶ்ரத்தயா ஶரணம் யதி ॥ நிர்தோ

---

1 புரா - முன்னால், துராசாரோபி - கெட்ட நடத்தை யுடையவனாகவும், ஸர்வாஶீ - எல்லாவற்றையும் ஸாப்பிடுகிறவனாயும், க்ருதக்ந - செய்த உபகாரத்தை மறந்தவனாகவும், நாஸ்திக - நாஸ்திகனாகவும், அபி-இருந்தபோதிலும், ஶ்ரத்தயா - விஶ்வாஸத்தினால், ஆதிதேவம் - பகவானை, ஶரணம் - ஶரணமாக, ஸமாஶ்ரயேத்யதி - அடைந்தானே யானால், தம - அந்த, ஜந்தும்-ப்ராணியை, பரமாத்மந꞉-பரமாத்மாவினுடைய, ப்ரபாவாத் - மஹிமையினால், நிர்தோஷம் - தோஷமில்லாதவனாக, வித்யாத்-அறியவேண்டும்.

ஷ்டம் விஜிதம் ஜந்தூம் ஶ்ருண்வாந்தரேணாந்தரஸ்॥' என்று சொல்லப்பட்டது புண்டரீகனுடைய சரித்திரத்திலும் 1 'அஶ்வமேத ஶதைரிஷ்ட்வா வாஜபேய ஶதைஸ்ததா। ந ப்ராப்னுவந்தி ஸத்கதிம் நாராயண பராங்முகா:। யே நருஶம்ஸா துராத்மாந: பாபாசார ரதாஸ்ததா॥ தேஅபி யாந்தி பரம் தாம நாராயணாஶ்ரயா:।' என்று சொல்லப்பட்டது 'க்ருதாகஸ:' என்பதற்குக் கூப்பிடுகிறேன் என்றாத்தம். இத்தால் 2 'ஶரணாகதம் யதா க்ருத்ஸ்னம் க்ருஷ்ணஸ்ய ஶீலம் உபேக்ஷ்ய விஸ்ருஜ்ய। ஶ்ரண்ம் ப்ரபத்யஸ்வ ஸர்வ ஸாதுப்யோ ஶரணாகத வத்ஸலஃ॥' என்று ஶரண்யனுடைய வார்த்தை தெரிவிக்கப்படுகிறது. 'க்ருதாகஸ:' என்பதற்குப் புண்யங்களின் பலத்திலிருந்தும் மிகவும் பயந்தவனாகையினால் கீழ் ஶ்லோகத்தில் சொல்லியபடி வேறொருகதி இல்லாதவன் ஆகையினால் கொல்லத்தக்கவனாயிருந்தபோதிலும் ஶரணமாக அடைந்தவனை விட்டுக்கொடுக்கமாட்டார்கள் என்று எல்லாச ஶரண்யர்களுக்கும் பொதுவாகவுறப்பட்டது 3 'விபீஷணோ வா ஸுக்ரீவ யதி வா ராவண: ஸ்வயம்' என்றிவை முதலியவைகளைச் சொல்லுகிற உமக்குண்டென்பதைப் பற்றிக் கேழ்க்கவேண்டியதில்லை என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார் — 'தவ' என்று 'அக்ரே' என்பதற்கு எல்லா ப்ரபஞ்சத்தையும் ப்ரத்யக்ஷமாக அறிகிற உமக்கு எல்லா இடங்களிலும் நேராகப் பார்ப்பதுண்டாகையினால் அப்படிப்பட்ட இடத்திலென்றாத்தம் அன்றிக்கே திவ்யமங்கள விக்ரஹத்தோடுகூடினவனாகிய ஶரண்யனுடைய எதிரிலென்று இவ்விடத்தில் அபிப்ராயமாகவுமாம் ஶக்தி இல்லாதவர்களும் கருணை இல்லாதவர்களுமாயிருப்பவர்களின் எதிரில் ஆபத்தை அடைந்தவர்கள் கூப்பிடத்தகாததல்லவா என்று தாத்பர்யம் அதுவுமன்றிக்கே ஸம்ஸாரத்தையும்

---

1 அஶ்வமேத ஶதை: - நூறு அஶ்வமேத யாகங்களினாலும், வாஜபேயஶதை: - நூறு வாஜபேயயாகங்களினாலும், இஷ்ட்வா - யாகஞ்செய்தும், நாராயண பராங்முகா: - பகவானிடத்தில் பக்தி இல்லாதவர்கள், ஸத்கதிம் - நல்ல கதியை, ந ப்ராப்னுவந்தி - அடைகிற தில்லை, யே - எவர்கள், நருஶம்ஸா: - தயையில்லாதவர்களோ, துராத்மான: - கெட்ட ஸ்வபாவமுடையவர்களோ, ததா - அப்படியே, பாபாசார ரதா: பாபத்தைச் செய்வதிலேயே ஆசையுடையவர்களோ, தே - அந்த, நராஅபி - மனிதர்களும், நாராயணாஶ்ரயா: - நாராயணனை ஆஶ்ரயித்தவர்களாய், பரம் தாம - பரமபதத்தை, யாந்தி - அடைகிறார்கள்.

2 226-ம் பக்கம், 2-ம் புட்குறிப்பு பார்க்க

3 ஸுக்ரீவ - ஓ ! ஸுக்ரீவனே, விபீஷணோவா - விபீஷணனாயிருந்த போதிலும், ராவண - ராவணன், ஸ்வயம்வா - தானாகவே இருந்தபோதிலும் (அழைத்துக்கொண்டுவா)

நடத்துகிறவனாகையினால் புண்யம் பாபம் இவைகளின் பலத்தைக் கொடுக்கிறவராயிருக்கிற உம்மிடத்திலிருந்து பயந்த நான் உம்முடைய எதிரிலேயே கூப்பிடுகிறேனென்று தாத்பர்யமாகவுமாம். ஆசை முதலியவைகளைத் தொடர்ந்துவருகிறதற்குக் காரணமாகிய புண்யங்களின் பலத்திலிருந்து பயம் இவ்விடத்தில் அதிகமாகக் கூப்பிடுவதற்குக் காரணம். அன்றிக்கே பக்தியோகத்தை அனுஷ்டித்து அதின் பலத்தை அடையாதவனைப்போலக் காமங்களுக்குத் தகுந்த சிக்ஷையைச் செய்கிற உம்மெதிரில் கூப்பிடுகிறதினால் மபராதம் செய்கிறேன் என்று தாத்பர்யமாகவுமாம். இப்படி முன் ஶ்லோகத்தில் அங்கங்களோடு கூடிய தான் வேறொரு உபாயமில்லை என்று சொல்லப்பட்டது. இந்த ஶ்லோகத்திலோ அதற்குக் காரணமாகிய பாபங்கள் அதிகம் என்பது அனுஸந்தானம் செய்யப்பட்டது. கீழ் ஶ்லோகத்தில் 'ஶரண்ய' என்று சொன்னது இந்த ஶ்லோகத்தில் 'ஶரணாகத' என்பதினால் ஸ்தாபிக்கப்பட்டது. ஆகையினால் இவ்விடத்தில் பொறுக்கமுடியாத ஸம்ஸாரத்தை நிவ்ருத்தி செய்வதற்கு உபாயங்களில் ஆசை இல்லாமையினால் உண்டாக்கப்பட்ட துக்கத்தினால் வருத்தத்தை அடைந்தவனும் ஶரண்யனுடைய குணங்களைப்பற்றிய நிஶ்சயத்தை யுடையவனுமிருப்பவன் மோக்ஷத்திற்காக ப்ரபத்தி செய்வதற்கதிகாரி என்பது தெரிவிக்கப்பட்டது. அப்படியே 1 'அஹம் ஸ்மி தேவ தேவேஶ ஸம்ஸாரே ஸ்மிந் பயாவஹே । த்ராஹி மாம் புண்டரீகாக்ஷ! நஜாநே ஶரணம் பரம் ॥' என்றும், 2 'வ்ருதைவ பவதோ யாதா பூயஸீ ஜந்ம ஸந்ததி: । தஸ்யாமந்யதமம் ஜந்ம ஸஞ்சிந்த்ய ஶரணம் வ்ரஜ ॥

---

1 தேவேஶ - ஓ! தேவதைகளுக்கு ஈஶ்வரனாகிய பகவானே, அஹம்-நான், பயாவஹே - பயத்தை உண்டுபண்ணுகிற, அஸ்மிந் - இந்த, ஸம்ஸாரே - ஸம்ஸாரத்தில், பீத: - பயந்தவனாக, அஸ்மி - ஆகிறேன், புண்டரீகாக்ஷ - தாமரைப் பூவைப்போன்ற கண்களை யுடையவனே, மாம் - என்னை, த்ராஹி - காப்பாற்றும், பரம் - உம்மைத்தவிர வேறு, ஶரணம் - காப்பாற்றுகிறவனை, நஜாநே-நான் அறியவில்லை.

2 பவத: - உமக்கு, பூயஸீ - அனேகமான, ஜந்மஸந்ததி: - ஜன்மங்களின் வரிசை, வ்ருதைவ - வீணாகவே, யாதா - கழிந்தது, தஸ்யாம்-அதில், அந்யதமம் - ஒரு, ஜந்ம - ஜன்மமாக, ஸஞ்சிந்த்ய - (இந்த ஜன்மத்தையும்) நினைத்து, ஶரணம் வ்ரஜ - ஶரணாகதியைச்செய், பாரத - பாரதவம்ஶத்தில் பிறந்தவனே, அத - பிறகு, பாதகபீத: - பாபங்களிலிருந்து பயந்திருக்கிற, த்வம் - நீ, ஸர்வபாவேந - அவனே எல்லாம் என்கிற அபிப்ராயத்தினால், விமுக்தாந்யஸமாரம்ப: - வேறுகார்யத்தின் ஆரம்பங்களை விட்டவனாய், நாராயணபர: - நாராயணனிடத்திலேயே ஆசையுடையவனாக, பவ - ஆய்விடு.

ஈய வாதக்க ஸீதஸூம ஸவஷு ஸாவெந ஸாரத ! | விஶ்ஷூகா நூ ஸஊ
ரம்ஸெஸா நாராயண வரொ ஸவ ॥' என்றும், 1 'ஸவஷுயொஹூ ஊநா
யாஸ ஊஹூஊத ஊநஙஙவஊம் | ஹூணதாதிஷு ஹாரம் விஷ்ணும் ஶரணம்
மஹூஊஸஷுஸி॥' என்றிவை முதலியது சொல்லப்பட்டது 23



நிஊஜ்ஜதொஃநஞ ஸவாணஷுவாஞ
ஸூராய ஜெஊ கூலஙுஶிவாஸி ஙூஃ |
கூயாஃவி ஙூம் ஸஶவநிஃாநீ
ஊநாதூஊம் வாதூஶிஃம் ஃயாயாஃ ॥ 24

நிமஜ்ஜதோநந்த பவார்ணவாந்தஶ்
சிராய மே கூலமிவாஸி லப்த: |
த்வயாபி லப்தம பகவந் நிதாநீ
மனுத்தமம் பாத்ர மிதம் தயாயா: || 24

ப - ரை] ஈநஞ - ஓ! பகவானே, ஸவாணஷுவாஞஃ - ஸம்ஸார மாகிற ஸமுத்திரத்தின நடுவில், அனறிககே ஈநஞ ஸவாணஷுவாஞஃ - அளவில்லாத ஸம்ஸார ஸமுத்திரத்தின நடுவில் என்றாததமாகவுமாம், நிஊஜ்ஜதஃ - முழுகிக்கோண்டிருககிற, ஜெ - எனககு, ஸிராய - வெகுகாலம் கழிதது, கூலஙிவ - கரைபோல, ஙூஃ - அடையபபட்டவனுக, ஈஸி - ஆகிறுய், ஸஶவநு - ஓ! பகவானே, கூயாஃவி - உம்மாலும், ஊஃம்- இநத, ஃயாயாஃ - தயைககு, ஈநாதூஊம் - இதறகு மேற்படடதிலலாத, வாதூம் - பாத்ரம், ஙூம் — அடையபபடடது. 24

பா] ஸமஸாரம அனுதியாக இருக்க இபபொழுது எவவிதமான விசேஷத்தினுல கூபபிடபபடுகிறது என்று க்ஷேபம் வரில அதறகு ஸமாதானமாக 'ஈநநூஹிஃ', 'ஶரணூ', என்கிற இரணடு பதஙகளினுலும் தெரிவிககபபட்ட ரக்ஷிககததகுநதவன ரக்ஷிககிறவன் இவாகளுக்கு ஒருவாககொருவா கிடைபபது லாபம எனகிற ஜஞானமிப்பொழுதுண்டானது என்பதைச சொலலுகிறுா—'நிஊஜ்ஜதஃ' என்றுரமபி தது அனுதியாக நடநதுகொண் டிருககிற முழுகுவது இபபொழுது

---

1 ஸர்வயோகயம் - எலலோராலும ஆஶ்ரயிககததகுநதவனையும், அனுயாஸமஶரமமிலலாதவனையும், அப்ரமாதம - அஜாககிரதை இல்லாதவனையும், அநுபமமதனககு ஸமமில்லாதவனையும, பாணதாரததிஹாம - தன்னை ஆஶ்ரயித்தவர்களின் துககததைப் போக்குகிறவனைபு மிருககிற, விஷ்ணும் - விஷ்ணுவை, ஶரணம் - ஶரணமாக, கநதும் - அடைவதற்கு, அாஹஸி - தககவனுகிறுய்.

யில்லை என்கிற அபிப்ராயத்தினால் நிகழ் காலமாகச் சொல்லியிருக்கிறது 'அநந்த' என்பதற்கு ரூபம், ஸ்வரூபம், குணம், விபூதி, இவைகளினால் அளவிட முடியாதவனே என்றர்த்தம் எல்லா இடத்திலும் எப்பொழுதும் ஸமீபத்திலிருக்கிற உம்மிடத்தில் 'இந்த நான் க்ரீஷ்மகாலத்தில் குளிர்ந்த தடாகத்தைப்போல் பரப்ரம்மத்தை ப்ரவேசித்தவனாகிறேன், மிகுந்த மேலான ஸுகத்தை யடைந்து சாந்தியை அடைகிறேன், ஸுகமாகவு மிருக்கிறேன்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் சொல்லப்பட்ட பரப்ரம்மத்தில் முழுகுதல் வேறொருவரையும் ஶரணமாக வடையாத மற்றெல்லோருக்கும் ஏற்பட்டது நானோவெனில் ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தில் முழுகுகிறேன் என்றர்த்தம் அன்றிக்கே 'அநந்த' என்பது ஸம்ஸார ஸமுத்திரத்திற்கு விஶேஷணமாகவுமாம் நிவ்ருத்தி செய்கிறவனாகிய உன்னுடைய மஹிமையைப் போலவே நிவ்ருத்திக்கத் தகுந்த என்னுடைய ஸம்ஸாரமும் அளவில்லாதது என்று தாத்பர்யம் ஸம்ஸாரத்தை ஸமுத்திரமாக நிரூபித்ததினால் 1 'ஸம்ஸாரார்ணவமக்நாநாம் விஷயாக்ராந்தசேதஸாம்। விஷ்ணுபோதம் விநா நாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம்॥', 2 'ஸம்ஸாரஸாகரம் கோரம்' என்றிவை முதலிய ப்ரமாணங்கள் தெரிவிக்கப்படுகின்றன. ஸனகாமுதலியவர்களைப்போலக் கரைக்கு ஸமீபமான இடத்தில் நான் இருக்கவில்லை என்கிற அபிப்ராயத்தினால் நடுவில் என்று சொல்லியிருக்கிறது இதற்கு முன்பு அனாதியான காலத்திலடையப்படவில்லை என்று துக்கத்தை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டாவது இப்பொழுது கிடைத்த லாபத்தினாலுண்டான ஸந்தோஷத்தை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டாவது 'சிராய' என்று சொல்லப்பட்டது. 'மே' என்பதற்குக் காமங்களின் ப்ரவாஹங்களினால் இதற்கு முன் இதைத் தாண்டுவதற்குபாயத்தை அறியாதவனாகிய எனக்கு என்று தாத்பர்யம். 'மாமேகம் ஶரணம் வ்ரஜ (என்னொருவனையே ஶரணமாக அடை)' என்று சொல்லுகிற உம்மை உபேக்ஷித்துக் கொண்டும் இப்பொழுதும் முழுவதற்குக் காரணங்களையே ஸம்பாதித்துக் கொண்டிருக்கிறவனையும் உம்மாலேயே உம்மை ஆஶ்ரயிப்பதற்கு ஸங்கல்பிக்கப் பட்டவனாயு மிருக்கிற எனக்கு என்று தாத்பர்யம்.

---

1 ஸம்ஸாரார்ணவமக்நாநாம் - ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தில் முழுகினவர்களாயும், விஷயாக்ராந்தசேதஸாம் - விஷயங்களினால் வ்யாபிக்கப்பட்ட மனதையுடையவர்களாயு மிருப்பவர்களுக்கு, விஷ்ணுபோதம்விநா - விஷ்ணுவாகிற தெப்பத்தைவிட, அந்யத்கிஞ்சித - வேறொரு, பராயணம் - கதி, நாஸ்தி - இல்லை

2 ஸம்ஸாரமாகிய ஸமுத்திரம் மிகவும் பயங்கரம்.

இவ்விடத்தில் 'ஶ்ரேஷ்டம்' என்கிற இடத்தில் ஆறாம்வேற்றுமை பொதுவான ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. அன்றிக்கே 'ஶ்ரேயஸே' என்றநவயித்துக் கொள்ளவுமாம் அதாவது ஸமுத்திரத்தின் நடுவில் முழுகுகிறவனுக்குக் கரை கிடைத்ததுபோல் ஆஸ்ரயத்தைக் காட்டுகிறது அவன் எங்கும் வ்யாபரித்தவனாகையினால் அவ்விடத்திலும் எனக்குக் கிட்டினான் என்று ப்ராணயனுடைய ஸௌலப்யத்தையும் தெரிவிக்கிறது 'ஶ்ரேஷ்டம் கவி' என்பதற்கு உபாயமாக இனி அடையவேண்டியதில் மிகுதி ஒன்றுமில்லை, அடைந்ததற்கு நழுவுதலுமில்லை என்று தாத்பர்யம். எனக்கு மாத்திரம் லாபம் என்பதில்லை பின்னை எப்படி என்னில் உன்னாலும் லாபமடையப்பட்டது அதாவது எல்லாரிடத்திலும் ஸமமானவன் என்பதைக் காப்பாற்றுவதற்காக ஸதாசார்யர்களின் கடாக்ஷம் முதலிய வ்யாஜத்தை எதிர்பார்த்தவனும் அது நேரிட்டதினால் ஸந்தோஷத்தை அடைந்தவனுமாயிருக்கிற உன்னாலும் லாபம் அடையப்பட்டது என்று தாத்பர்யம் இவ்விடத்தில் 'ஹரவது' என்றழைத்திருப்பதினால் அந்தப் பகவான் ஒருவனுக்கே எல்லா ப்ராணிகளினுடையவும் நன்மையை அறியுந்தன்மையும் அதைப் பூர்த்தி செய்விக்கக்கூடிய ஶக்தி முதலியவைகளும் இருக்கிறது என்று தெரிவிக்கப்படுகிறது ஜ்ஞானம் பலம் முதலிய கல்யாணகுணங்கள் நிறைந்தவனாகிய உனக்கும் இது பெரிய நன்மையான லாபம் இதை நீயே அறிவாய், உன்னால் மறுக்கமுடியாதென்றும் தாத்பர்யம் 'ஊஷாநீம்' என்பதற்கு ஸ்ரீமந் நாதமுனிகள் முதலான ஸதாசார்யர்களின் கடாக்ஷ முண்டாயிருக்கும்பொழுது என்றாத்தம் இதுவும் ஒருவராலும் ஆக்ஷேபிக்கமுடியாத அநாதியாகிய காரணங்களின் வரிசைகளுக்குத் தக்கபடி உம்மாலேயே ஸங்கல்பிக்கப்பட்டது என்று தாத்பர்யம் ஒருமையாகச் சொல்லி இருப்பதினாலும், 'ஶநாதம்' என்கிற பக்ஷமிருப்பதினாலும், தயை செய்யக்கூடிய பாத்திரம் தனக்கு ஸமமும் மேற்பட்டது மில்லாதது என்பது தெரிவிக்கப்படுகிறது ஸமமானதிருந்தபோதிலும் மேற்பட்டதில்லை என்பதில் மாத்திரம் தாத்பர்யமாகவுமாம். 'வாக்யம்' என்பது விஷயம் வாக்கினாலும் மனதினாலும் அளவிடமுடியாத எண்ணிறந்த அபராதங்களையுடைய தன்னை 'ஊஷம்' என்று விரலால் தொட்டுக் காட்டுகிறார் இதை விட்டுவிட்டால் வேறு எந்த விஷயத்தில் உம்முடைய கருணை முதலிய குணங்களின் கூட்டம் ப்ரயோஜனத்தோடு கூடினதாகும் இதற்கு மேற்பட்ட தயைசெய்யக்கூடிய விஷயம் இல்லையல்லவா 1 'கவி க்ஷுந்ந'

1 ஏகஸித - ஒருவன், முமுக்ஷு: - மோக்ஷத்தி லாசையுடையவனுக, அபிஸயாத் - ஆவான்

'மோக்ஷயிஷ்யாமி' என்பதாலேயோ உம்முடைய கருணை லோகத்தை ஸ்ருஷ்டிக்கிறது ஆகையினால் உம்மிடத்தில் பரபக்தியைத் தவிர வேறொன்றும் எனக்குச் செய்யவேண்டியதில்லை இப்பொழுது கூப்பிடுகிறதும் இந்த ஸம்ஸாரத்தில் வெறுப்பு மாத்திரத்தினாலுண்டானது. என்னுடைய பாரத்தை ஒப்புக் கொண்டவனாகிய உமக்கோவெனில் 'மோக்ஷயிஷ்யாமி' என்று உமக்கு மேலேயே சொல்லப்பட்ட செய்யவேண்டிய காரியம் மிகுதி இருக்கிறது என்று தாத்பர்யம் 24



அபூத பூர்வம் மம பாவி கிம் வா
ஸர்வம் ஸஹே மே ஸஹஜம் ஹி து:கம் |
கிந்து த்வதக்ரே ஶரணாகதாநாம்
பராபவோ நாத! ந தேऽநுரூப: ‖ 25

அபூத பூர்வம் மம பாவி கிம் வா?
ஸர்வம் ஸஹே மே ஸஹஜம் ஹி துக்கம் |
கிந்து த்வதக்ரே ஶரணாகதாநாம்
பராபவோ நாத! நதேநுரூப ‖ 25

ப-ரை] மம - எனக்கு, அபூதபூர்வம் - இதற்கு முன்புண்டாகாததாகிய, கிம் - எப்படிப்பட்ட துக்கம், பாவி - வரப்போகிறது, ஸர்வம் — எல்லாவற்றையும், ஸஹே - பொறுத்துக் கொள்ளுகிறேன், மே - எனக்கு து:கம் - துக்கமானது, ஸஹஜம் ஹி - ஸஹஜமாக ஏற்பட்டதல்லவா, கிந்து - ஆனல், த்வதக்ரே - உமமெதிரில், ஶரணாகதாநாம் - உம்மைச் ஶரணமாக அடைந்தவர்களுக்கு, பராபவ: - அவமானம், நாத - ஓ! இவர்களுக்கு யஜமானனாகிய பகவானே, தே - உமக்கு, அநநுரூப: - தகுந்ததல்ல 25

பா] இப்படி இருந்த போதிலும் பராதீனனாயும் ஶேஷபூதனாயுமிருப்பவர்களுக்கு ஸ்வதந்திரனாயிருக்கிற யஜமானனுடைய இஷ்டப்படி உபயோகப்படுத்திக்கொள்ளுவது பொறுக்கவேண்டியது தான் அப்படி இல்லாமற் போன போதிலும் தடுக்கமுடியாது மேலும் 1 'ஹரி: து:கா

1 ஹரி: - பகவான், பக்தேப்ய - தன்னுடைய பக்தர்களின் பொருட்டு, துக்கானி - துக்கங்களை, பிதா - தகப்பன், ஸ்வபுத்ராய - தன்னுடைய பிள்ளையின் பொருட்டு, ஶஸ்த்ரக்ஷாரக்நிகர்மாணியதா - ஆயுதம், காரம், நெருப்பு, இவைகளினால் செய்யவேண்டிய காரியங்களைப்போல, ஹிதபுத்யா - இது நன்மை என்கிற புத்தியினால், கரோதி - செய்கிறான், அதருடசேதஸாம் - உறுதியில்லாத மனதை

வாநி ஸந்த்ருஷ்ட்வா ஹிதம் ப்ராஜ்ஞா கரோதி ஹி। ஸம்ரக்ஷாமி கர்மா-ணி ஸர்வாண்யாய யதா விதா ॥ பரீக்ஷாம் ச ஜகந்நாத: கரோத்யுச்சாவசாம் ஸதா॥', 1 'யஸ்யாநுக்ரஹமிச்சாமி தஸ்ய வித்தம் ஹராமி அஹம்', 2 'பாந்தவைஸ்ச வியோகேந ஸதா பவதி து:கித:। தேந து:கேந ஸந்தப்தோ யதி மாம் ந பரித்யஜேத் ॥ தம் ப்ரஸாதம் கரிஷ்யாமி யஸ்ஸுரைரபி துர்லப:', என்று ஸ்ம்ருதிகளில் சொல்லப்படுகிறது ஆகையினால் தங்கள் தங்கள் காமங்களின் பலம் பொறுத்துக் கொள்ளத்தக்கது, கூப்பிடுவதினால் என்ன ப்ரயோஜனம்? என்னில் அதற்குப் பதில் சொல்லுகிறார்— 'ஸுக-து:க வஞ்சகம்' என்றாரம்பித்து இதற்கு முன்பு உண்டானவைகளைக் காட்டிலும் வேறுபட்டது என்றாத்தம் 'ஈச'என்பதற்கு 3 'அஜ்ஞோ ஜந்துரநீஸோயமாத்மந: ஸுகது:கயோ:। ஈஸ்வரப்ரேரிதோ கச்சேத் ஸ்வர்க்கம் வா ஸ்வப்ரமேவ வா।' என்று சொல்லப்பட்ட ஸ்வபாவத்தை யுடையவனும் காப்பம், ஜன்மம், கிழத்தனம், மரணம், நாசம் முதலிய துக்கங்களின் சக்கரத்தின் நடுவிலகப்பட்டுக் கொண்டிருக்கிற எனக்கு என்றாத்தம் 'ஹாவி' என்பதற்கு இனி வரப்போகிறது என்றாத்தம் 'கிம்' என்பது அப்படிப்பட்டது இல்லை என்கிற தாத்பாயத்தை உடையது 'வா' என்பது தன்னுலொப்புக்கொள்ளப் படாததாகிய அவைகள் பொறுத்துக்கொள்ளவேண்டியது என்கிற பக்ஷத்தை ஆரோபித்துக்கொண்டார்

---

யுடையவர்களுக்கு, ஜகந்நாத. - லோகங்களுக்கு நாதனாகிய பகவான், பரீக்ஷாமச - பரீக்ஷையையும் (செய்கிறார்)

1 யஸ்ய - எவனுக்கு, அனுக்ரஹம் - அனுக்ரஹத்தை, இச்சாமி - (செய்ய வேண்டுமென்று) ஆசைப்படுகிறேனோ, தஸ்ய - அவனுடைய, வித்தம் - பணத்தை, அஹம் - நான், ஹராமி - அபஹரிக்கிறேன்.

2 பாந்தவை - பந்துக்களுடன், வியோகேந - பிரிவினால், ஸதா - எப்பொழுதும், துக்கித. - துக்கத்தை அடைந்தவனாக, பவதி - ஆகிறான், தேந - அந்த, துக்கேந - துக்கத்தினால், ஸந்தப்த - தபிக்கப்பட்டவனாய், மாம - என்னை, நபரித்யஜேத்யதி - விடாமற்போவானேயானால், ய: - எந்த அனுக்ரஹம், ஸுரைரபி - தேவதைகளினாலும், துர்லப - அடையமுடியாதோ, தம் - அப்படிப்பட்ட, ப்ரஸாதம - அனுக்ரஹத்தை, கரிஷ்யாமி - செய்யப்போகிறேன்.

3 அயம - இந்த, ஜந்து - ப்ராணி, ஆத்மன - தன்னுடைய, ஸுகதுக்கயோ: - ஸுகம், துக்கம், இவைகளைப் பற்றி, அஜ்ஞ: - தெரியாதவன், அநீஸ - ஸக்தி இல்லாதவன், ஈஸ்வரப்ரேரித: - பகவானால் லேவப்பட்டவனாய், ஸ்வர்க்கம் வா - ஸ்வர்க்கத்தையாவது, ஸ்வப்ரமேவ வா - பாதாளத்தையாவது, கச்சேத - அடையவேண்டும்.

எனகிற அர்த்தத்தைக காட்டுகிறது அதினால அது பொறுககமுடியா தெனகிற அபிபராயததை உளளே வைததுககொண்டு சொலலுகிறார்—'ஸர்வம் ஸஹே' என்று காமஙகளுககு வசபபட்டிருபபதினால முன போலவே முனபு அனுபவிக்கபபட்ட ஸகல துககங்களுககு ஸமானமாகிய எலலாத துககததையு மனுபவிககபபோகிறேன 'மே ஸஹஜம் ஹி து:க்கம்' எனபதறகு அநிஷ்டததை முடிவிலுளள பரயோஜனமிலலாத வஸ்துவில ஆசையையுடைய எனககுக கர்மஙகளின பரவாஹஙகளினால ஜீவாதமாவின ஸ்வரூபததோடு சேரநதவைகளைப போலப பரிஹரிககமுடியாதென்று தாதபாயம அபபடி இருநதபோதிலும இதைவிடப பொறுககமுடியாத மறறொனறு வரபபோகிறது எனகிற அபிபராயததில் சொலலுகிறார்—'கிந்து' என்றாரமபிதது 'த்வதக்ரே' எனபதறகுக கரையிலலாத கருணையையுடையவராயும், எலலா இடஙகளிலும வயாபிததிருககிறவராயும், எலலாவறறிறகும ஸ்வாமியாயும், எலலா ஶகதியை யுடையவராயு மிருககிற உமமுடைய முனனிலையில என்றாததம 'ஶரணாகதாநாம்' என்று பனமையாகச சொலலி இருபபது மறற பரபன்னாகளிடததிலும இதே நியாயம என்று தெரிவிபபதறகாக அனறிககே என்னை அவமானம செயவது உமமிடததில ஒரே நிஶசயததையுடைய மறறெலலாருடையவும மனதிறகுக் கலககததை உண்டாககும் எனறபிபராயமாகவுமாம 'பராபவ:' எனபது காமங்களினாலும, காமம, க்ரோதம, முதலியவைகளினாலும், இந்திரியஙகளினாலும், பயஙகரஙகளான விஷயஙகளினாலும், உமமிடததிலபராஙமுகமாகச செயவது 'நாத' எனறழைததிருப்பது பகவான நமமுடைய பரததை அங்கீகரிககத் தகுநதவன் என்பதையும் தான நாதனையுடையவனாகையினால நிரப்பரன என்பதையும பரகாசம செயகிறது தாமபுத்திருடைய காாயததை உததேஶிததுப பலராமனைககுறிதது ஸாத்யகியினால 1 'லோகே நாதவந்தோ ஹி பவந்தி யே தே ந நாத்ம காமாணி ஸமாரபந்தே । காயேஷு தேஷாம் ப்ரபவந்தி நாதா ஶைப்யாதயோ ராம யதா யதாதே: ॥' என்று சொலலபபட்டது பாஞ்சராத்

---

1 லோகே - இந்த லோகத்தில, யே - எவாகள, நாதவந்த. - நாதர்களை யுடையவாகளாக, பவநதி-ஆகிறாாகளோ, தே - அவாகள், ஆதம காமாணி - தஙகளுடைய காமஙகளை, நஸமாரபந்தே - ஆரம்பிககிறதிலலை, தேஷாம - அவாகளினுடைய, காாயேஷு - காாயஙகளில, ராம - ஓ் பலராமனே, யபாதே. யயாதிககு, ஶைப்யாதயோயதா - ஶைப்யா முதலியவர்களைப் போல, நாதா: - அவரவர்களின் நாதர்கள், ப்ரபவநதி - கடமைப்பட்டவாகளாகிறார்கள்-

திர ஶாஸ்திரத்திலும் 1 'ப்ரபந்ந ஶாதகோயதவத்கபோதவத்வ்ஃஸகவோ தவஸ । ரக்ஷ்ய ரக்ஷகயோ ரேதல்லக்ஷ்யம் லக்ஷணமேதயோ: ॥' என்று சொல்லப்பட்டது. ஸ்வாதீனனும் காமங்களுக்கு வசப்படாதவனுமிருக்கிற எனக்குச் ஶரணமாக அடைந்தவர்களை விட்டபோதிலும் என்ன தோஷமுண்டாகும்? என்று க்ஷேபம் வரில் சொல்லுகிறார்—'ந மே ந்ருபாவீ:' என்று 'மே' என்பதற்கு 'ஸ்ருதி ஸமஸ்', 'ஸ க்ருஷ்ண', 'ஸக்ருதேவ ப்ரபந்நாய' என்றிவை முதலியவைகளைச் சொன்ன உனக்கு என்றாத்தம் 'நாந்ருதம்வத:' யுக்தமல்ல, 2 'ராமோ த்விர்நாபிபாஷதே', 3 'அந்ருதம் நோக்தபூர்வம் மே ந ச வக்ஷ்யே கதாசந' என்றிவை முதலிய உம்முடைய வார்த்தைகளுக்கே விரோதம் வருமாகையினால் ஆகையினால் 'அவனுடைய கீதை பெரியதல்லவா' என்றாத்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் சொல்லப்பட்டதற்கு விரோதம்வரும் ஆகையினால் ஸ்வபாவத்திலேயே துக்கத்திற்கிருப்பிடமாகிய என்னால் எல்லாத துக்கமும் பொறுக்க முடியும் எப்பொழுதும் ஒருவிதத் தோஷமுமில்லாத உம்மாலோ வெனில் தோஷத்தின் பரஸ்தாவம் கூடப்பொறுக்கமுடியாது உனக்கு என்னைவிட அநிஷ்ட நிவ்ருத்திகிடைப்பது அதிகமான லாபம் எனக்கும் ஸ்வாமியாகிய உமக்குத் தோஷம் வருவது மிகவும் அநிஷ்டம். ஆகையினால் என்னை ரக்ஷிப்பதினால் நம்மிருவர்களுக்கும் அநிஷ்டத்தைப் பரிஹாரம் செய்வது உம்மாலேயே செய்யத்தக்கது என்று தாத்பர்யம் இது கேவலம் வ்யாஜத்தைக் கொண்டே தன்னுடைய ப்ரயோஜனத்திற்காக ரக்ஷிக்கப்போகிறானென்கிற விஶ்வாஸத்தின் உறுதியைத் தெரிவிக்கிறதற்காக மோக்ஷபூதனுக இருப்பவன் தன்னுடைய லாபத்தைச் சொல்லுவதும் தன் ப்ரயோஜனத்தை ப்ரார்த்திப்பதும் யுக்தமல்ல என்கிற ஆக்ஷேப

---

1 ப்ரபந்ந - ஶரணமாக அடைந்தவன், சாதகோயதவத் - சாதகபக்ஷியைப்போல, ப்ரபத்தவ்ய: - ஶரணமாக அடையப்படுகிறவன், கபோதவத் - புறாவைப்போல, ரக்ஷ்யரக்ஷகயோ: - ரக்ஷிக்கத் தகுந்தவன், ரக்ஷிக்கிறவன், இவர்களுக்கு, ஏதத் - இது, லக்ஷ்யம் - உதாஹரணம், ஏதயோ - இவர்களுக்கு (இது) லக்ஷணம் அடையாளம்

2 ராமன் இரண்டாவது வார்த்தை சொல்லுகிற தில்லை, அதாவது ஒருதரம் சொல்லியதை மறுபடி இல்லையென்று சொல்லுவதில்லை

3 மே - எனக்கு, அதாவது என்னால், அந்ருதம் - பொய், நோக்த பூர்வம் - இதுவரையில் சொல்லப்பட வில்லை, கதாசந-இனி ஒரு பொழுதும், நசவக்ஷ்யே-சொல்லவும் போகிறதில்லை

மும், ப்ரதானமாகிய பரமாத்மாவின் லாபத்தைச் சொல்லுவதினாலும், பரமாத்மாவிற்குத் தோஷத்தின் ஸம்பந்தத்தைப் பரிஹரிப்பதே ப்ரதானம் என்கையினாலும் கிரஹிக்கப்பட்டது. 25



𑌨𑌿𑌰𑌾𑌸𑌕𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌨 𑌤𑌾𑌵𑌦𑍁𑌤𑍍𑌸𑌹𑍇
𑌮𑌹𑍇𑌶 𑌹𑌾𑌤𑍁𑌂 𑌤𑌵 𑌪𑌾𑌦𑌪𑌙𑍍𑌕𑌜𑌮𑍍 ।
𑌰𑍁𑌷𑌾 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 𑌶𑌿𑌶𑍁𑌃 𑌸𑍍𑌤𑌨𑌨𑍍𑌧𑌯𑍋
𑌨 𑌜𑌾𑌤𑍁 𑌮𑌾𑌤𑍁𑌶𑍍𑌚𑌰𑌣𑍌 𑌜𑌿𑌹𑌾𑌸𑌤𑌿 ॥ 26

நிராஸ கஸ்யாபி நதாவதுத்ஸஹே
மஹேஶ ஹாதும் தவ பாத பங்கஜம் |
ருஷா நிரஸ்தோபி ஶிஶு: ஸ்தநந்தயோ
ந ஜாது மாதுஶ்சரணௌ ஜிஹாஸதி || 26

ப - ரை] 𑌮𑌹𑍇𑌶 - ஸர்வேஶ்வரனாகிய பகவானே, 𑌨𑌿𑌰𑌾𑌸𑌕𑌸𑍍𑌯𑌾𑌪𑌿-என்னைத் தள்ளுகிறவனாயிருந்தபோதிலும், 𑌤𑌵 - உம்முடைய, 𑌪𑌾𑌦𑌪𑌙𑍍𑌕𑌜𑌂 — தாமரைப் பூவைப்போன்ற திருவடியை, 𑌹𑌾𑌤𑍁𑌂 - விடுவதற்கு, 𑌨𑍋𑌤𑍍𑌸𑌹𑍇 தாவத் - (நான்) ஶக்தி உடையவனல்ல, 𑌸𑍍𑌤𑌨𑌨𑍍𑌧𑌯𑌃 - முலையுண்கிற, 𑌶𑌿𑌶𑍁𑌃 - குழந்தை, 𑌰𑍁𑌷𑌾 - கோபத்தினால், 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 - தள்ளப்பட்டிருந்தபோதும், 𑌮𑌾𑌤𑍁𑌃 - தாயாருடைய, 𑌚𑌰𑌣𑍌 - கால்களை, 𑌜𑌾𑌤𑍁 - ஒருபோழுதும், 𑌨 𑌜𑌿𑌹𑌾𑌸𑌤𑌿 - விடவேண்டுமென்றுசைப்படுகிறதில்லை 26

பா] இப்படித் தெரிந்துகொண்டவனாகிய நீ என்னை ஆஶ்ரயிப்பது இருக்கட்டும் அப்படி இருந்தபோதிலும் என்னால் அனுக்ரஹிக்கப்பட்ட உன்னால், எல்லாப் பாபங்களுக்கும் ப்ரதிபதம் என்னும் க்ரந்தத்தில் சொல்லப்பட்ட ப்ராயஶ்சித்தங்கள் செய்யப்படட்டும். புண்யம் நாசமடைவதற்காக ஸுகங்களும் அனுபவிக்கப்படட்டும். என்னுடைய ஸ்வபாவமும் 1 ‘𑌶𑌰𑍀𑌰𑌾𑌰𑍋𑌗𑍍𑌯𑌂 𑌅𑌰𑍍𑌥𑌾𑌂𑌶𑍍𑌚 𑌭𑍋𑌗𑌾𑌂𑌶𑍍𑌚𑍈𑌵𑌾𑌨𑍁𑌷𑌙𑍍𑌗𑌿𑌕𑌾𑌨𑍍 𑌦𑌦𑌾𑌤𑌿 𑌧𑍍𑌯𑌾𑌯𑌿𑌨𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌪𑌵𑌰𑍍𑌗𑌪𑍍𑌰𑌦𑍋 𑌹𑌰𑌿𑌃॥’

1 நித்யம் - எப்பொழுதும், அபவர்கப்ரத: - மோக்ஷத்தைக் கொடுக்கிற, ஹரி: - விஷ்ணு, த்யாயினாம் - தன்னை த்யானம் செய்பவர்களுக்கு, ஶரீராரோக்யம் - தேகத்தின் ஆரோக்யத்தையும் அர்த்தாம்ஶ்ச- ப்ரயோஜனங்களையும், ஆனுஷங்கிகாந் - நடுவில் வரக்கூடிய, போகாம்ஶ்ச - போகங்களையும், ததாதி - கொடுக்கிறார்.

என்று ப்ரஸித்தமாயிருக்கிறது ஆகையினால் 1 ‘ஹோ கூ ஹா ஹோரா நிவா ஸூரா’ என்றிவை முதலியவைகளில் சொல்லி இருக்கிறபடி மோக்ஷத்தை அடையப்போகிறாய் என்று பகவானுடைய அபிப்ராயம் இருப்பதாக ஸந்தேஹித்துக்கொண்டு முன்பு சொல்லப்பட்ட வேறொரு உபாயத்தையும் உடையவனாகாமலிருக்கையையும், வேறொரு ப்ரயோஜனத்தையும் உடையவனாகாமலிருக்கையும் இந்த இரண்டு ஶ்லோகங்களினால் நிரூபிக்கப்போகிறவராய் தான் பகவானுடைய திருவடிகளை அடைவதில் தாமதத்தைப்பொறுக்காதவர் என்பதை விஜ்ஞாபனம்செய்கிறார்—‘நிராஸகஸ்ய’ என்றாரம்பித்து முன்ஶ்லோகத்தில் துக்கம் ஸ்வபாவத்திலேயே அநிஷ்டமாகையினால் பொறுக்க முடியாததாகையினாலே நிவ்ருத்திக்கத் தகுந்ததென்பது சொல்லப்பட்டது. இந்த ஶ்லோகங்களிலோ வெனில்மேலான புருஷார்த்தத்திற்கு விரோதியாகையினால் ஸுகமும் நிவ்ருத்திக்கத் தக்கது என்பது சொல்லப்படுகிறது என்கிற வ்யத்யாஸம் அறியத்தக்கது ‘நிராஸகஸ்ய’ என்பதற்கு ஒருவராலும் தடுக்கப்படாத ஸ்வாதந்திரியத்தை உடையவனாகையினால் தன்னுடைய தோஷத்தைப் பொறுத்துக் கொண்டாவது அல்பங்களாகிய ப்ரீதியை யுண்டாக்கக் கூடிய வார்த்தைகளினாலென்னை வஞ்சனை செய்து என்னுடைய இஷ்ட பலத்தைக் கொடாமல் வேறு சில ப்ரயோஜனங்களைக்கொடுக்க வேண்டுமென்றுரைசையையுடைய என்று தாத்பர்யம் ‘க்ஷமீ’ என்னும்பதத்தினால் தயைக்குப்பரவசனாகிய நீ தீனனாகிய என்னை நிராகரிப்பதில் எப்படி ஶக்தியுடையவனாவாய் என்று தெரிவிக்கப்படுகிறது ‘தாயஸ’ என்னும் பதம் நிஶ்சயத்தைச் சொல்லுகிறது. ‘நொது ஹெ’ என்பதற்கு ஶக்தி யுடையவனாக வில்லை என்றர்த்தம் ‘ஈஹெஹ’ என்பதற்குத் தங்களுடைய ஸ்தானத்தி லிருந்து தங்களுக்கு நழுவுதல் உண்டாகுமோ என்றெண்ண முள்ளவர்களாயும் பூரணர்களல்லாதவர்களாயும் இருக்கிற உம்மைத் தவிர மற்றவர்களுக்கல்லவோ, இந்திரன் முதலியவர்களுக்கு யயாதி முதலியவர்களிடங்களில் உண்டானதைப் போல பொறாமை, உபேக்ஷை, முதலியவைகள் உண்டாகும் வேறு காரணத்தினா லுண்டாகாத ஸ்வாமியாக இருக்கை, ஸ்வதந்திரனாக இருக்கை, இவைகளை யுடையவனும், எல்லை யில்லாத தயைக்கு ஸமுத்திரமாயும் என்னை இப்படிப் பட்ட அவஸ்தையை அடைவித்தவனு மிருக்கிற நீ என்னை நிராகரிப்பதற்குக் காரணமொன்று மில்லையென்று தாத்பர்யம் நீர் ஒருவரே எல்லாவற்றிற்கு மீஶ்வர னென்று அறிந்த நான்

1 விபுலாந - விசாலங்களான, போகாந - ஸுகங்களை, புக்த்வா - அனுபவித்து

உம்மை விடுவதற்குக் காரணமுமில்லை என்று தாத்பர்யம். 'க்ஷாந்தா:' என்று மேலே சொல்லப்போகிற பதத்திற்குப் பதிலாக இவ்விடத்தில் 'ஸஹஸ' என்னும் பதம் சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் 'நாராயணனே தாயார், தகப்பனார் உடன் பிறந்தவன்', என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்தில் ப்ரஸித்தங்களான ஸ்வபாவங்கள் தெரிவிக்கப்படுகின்றன. 'ஹாதம்' என்கிற இடத்தில் உபாயமாகவும் ப்ரயோஜனமாகவும் என்று சேர்த்துக்கொள்ளவேண்டியது. இவையிரண்டும் 'தவபாத பங்கஜம்' என்கிற இரண்டு பதங்களினாலும் தெரிவிக்கப்படுகிறது. எல்லாப் ப்ராணிகளுக்கும் 'ஸுஹ்ருத்'தாயும் ஸம்ஸாரத்தை நிவ்ருத்திப்பதற்குபாயமாகவுமிருக்கிற உம்முடைய தேவதைகள் 'அஸுரா'கள் இவர்களுக்குப் பொதுவான தேவதையாயும் எல்லை இல்லாத போக்யமாயுமிருக்கிற தாமரைப் பூவைப் போன்ற திருவடியை என்று தாத்பர்யம். கீழ்ச்சொன்ன அர்த்தத்தை எல்லா லோகங்களிலும் ஒப்புக்கொள்ளப்பட்ட மற்றொரு அர்த்தத்தை உதாஹரணமாகக்காட்டி ஸ்தாபிக்கிறார்—'பருஷா' என்றாரம்பித்து. 'அபி' எனும் பதம் இவ்விடத்தில் ஸ்வபாவத்திலேயே அப்படி நிராகரிக்கத் தகாததென்பதையும் ஸ்தனங்களைக் கடிப்பது முதலியவைகளினாலுண்டாக்கப்பட்ட அல்ப கோபத்தினால் சில ஸமயம் அது ஸம்பவிக்கக் கூடும் என்பதையும் தெரிவிக்கிறது. 'ஶிஶு:' 'ஸ்தநந்தய:' என்கிற இரண்டு பதங்களினால் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளுவதில் தான் ஶக்தி இல்லாத குழந்தை அவளாலே ரக்ஷிக்கத் தகுந்ததென்பதும், அவளுக்கடங்கிய ஜீவனத்தையுடையதென்பதும் தெரிவிக்கப்படுகிறது. 'ஜாது' என்பதற்குக் கோபமுண்டாகும் பொழுதும், அனுக்ரஹமுண்டாகும் பொழுதும் என்று தாத்பர்யம். 'க்ஷாந்தா:' என்பதினால் எல்லாத் தோஷங்களையும் பொறுத்துக்கொள்ளுவதற்குத் தகுந்த ஶக்தி தெரிவிக்கப்படுகிறது. 'வத்ஸலா' என்பதினால் தன்னை நிராகரிப்பதற்காக நீட்டப்பட்டிருந்தபோதிலும் என்று தாத்பர்யம். அறியவேண்டியது விடவேண்டுமென்கிற ஆசையே ஸம்பவிக்கிறதில்லை, விடுவதைப்பற்றிக் கேழ்க்கவேண்டியதில்லை என்கிற அபிப்ராயத்தினால் 'ஸது' என்னும் விகுதி ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. 26



தவாம்ருத ஸ்யந்திநி பாத பங்கஜே
நிவேஶிதாத்மா கதமந்யதிச்சதி? |

ஸ்தி தெऽரவிதெ உகாநூ நிஹ-ரெ
உயூ வ்ரதொ நெக்ஷுரகம் ஹி வீக்ஷதெ ‖ 27

*தவாம்ருத ஸ்யந்தினி பாத பங்கஜே*
*நிவேசிதாத்மா கதமந்ய திச்சதி? |*
*ஸ்திதேரவிந்த மகரந்த நிர்பரே*
*மதுவ்ரதோ நேக்ஷுரகம ஹி வீக்ஷதே ‖* 27

ப - ரை] அம்ருதஸ்யந்தி - அமருததததைப பெருக்குகிற, அதாவது அம்ருதம்போல் மிகவும் போகயமாகிய, அன்றிக்கே மோக்ஷத்தைக் கொடுக்கிற என்றாததமாகவுமாம், தவ — உமமுடைய, பாதபங்கஜெ - தாமரைப பூவைப்போன்ற திருவடியில், நிவெஶித - வைக்கப்பட்டிருககிற, ஆத்மா - மனதையுடையவன், அந்யத் - வேறொன்றை, கதம் - எப்படி, இச்சதி - ஆசைபபடுகிறான், மகரந்த நிர்பரெ-தேன்நிறைந்த. அரவிந்தெ-தாமரைப்பூ, ஸ்திதெ - இருககும்பொழுது, மதுவ்ரதஃ - வண்டு, இக்ஷுரகம் - முள்ளிப பூவை, நவீக்ஷதெஹி - பாாககிறதில்லை யல்லவா. 27

பா] *பருமமா முதலியவாகளினுடைய போகஙகளைவிட மேறபடட போகங்களைக் கொடுபபது நிராகரிபபதாகாது. மேலு ம கேவலம போகததில மாததிரம ஆசையுடையவனுக யிருககவேண்டியதிலலை இபபொழுது என்னுல கொடுககபபடட போகஙகளை அனுபவி பிறகு மோக்ஷத்தையும கொடுககபபோகிறேன என்று பகவானுடைய அபிபராயமிருபபதாக ஊஹிததுககொணடு தாமததைப பொறுககாதவரால அடையவேணடிய பரயோஜனமாகையினுல விடமுடியாதெனபதை விவரிககிருா—'தவாம்ருத' என்றுாமபிதது 'தவ' என்பதறகு 'அவனே ஸுகம்', என்றும, 'எலலா வாஸனைகளை யு முடையவன் எலலா ரஸததையும உடையவன' எனறு மாததமுளள ஶ்ருதிவாகயம முதலியவைகளில எலலாவிதததாலும் எலலையிலலாத போகயமாக பரஸிததனுயும எலலாவறறிறகும ஸ்வாமியாயுமிருககிற உனககு எனறாததம 'அம்ருதஸ்யந்தி' என்பதறகு மோக்ஷததைக கொடுககிற, மிகவும போக்யமாக ஶ்ருதி ஸம்ருதிகளில் பரஸிததமாயுமிருககிற எனறாததம 'நிவெஶிதாத்மா' என்பதறகு ரக்ஷிபபதில ஆசையுடையவரும 1 'ததாமி புத்தியோகம் தம்' எனறிவை முதலியவைகளைச சொன்னவருமாகிய உமமாலேயே உறுதியாக வைககபபடடிருககிற புததியை*

1 தம் - அப்படிப்பட்ட, புததியோகம் - புததியை, ததாமி - கொடுக்கிறேன்.

யுடைய என்றாத்தம் ஆகையினால் இனி மற்றொரு புருஷார்த்தங்களில் மனத்தைச் செலுத்த முடியாதென்று தாத்பர்யம். இவ்விடத்தில் பொதுவாகச் சொல்லி இருப்பது உம்முடைய அனுக்ரஹத்திற்கு விஷயமாயிருக்கிற என்னைப்போன்ற மற்றெல்லாருக்கும் இந்த ஸ்வபாவம் பொது என்று தெரிவிப்பதற்காக தாமரைப்பூவைப் போன்ற உம்முடைய திருவடியில் என் மனத்தைச் செலுத்தும்படியாகச் செய்தவராகிய நீரே இந்த விஷயத்தில் கேழ்க்கத்தக்கவர் என்கிற அபிப்ராயத்தினால் 'கதம்' என்னும் பதம் சொல்லப்படுகிறது 'அந்யத்' என்பதற்கு அல்பமாயும், அஸ்திரமாயும், ஸுகமில்லாததாயு மிருக்கிற மற்றொன்றை என்றாத்தம் 'இச்சதி' என்று இச்சையே உண்டாகாதென்று சொல்லுவதினால் அதற்காகப் ப்ரவ்ருத்தி செய்வதும் இவ்விடத்தில் நிராகரிக்கப்பட்டதாகிறது கீழ்ச் சொன்ன அர்த்தத்தை உதாஹரணத்தைக்கொண்டு மெய்ப்பிக்கிறார்—'ஸ்திதே ரவிந்தே' என்றாரம்பித்து அனுபவிக்கிறவர்களுக்குக் கஷ்டமில்லாமல் மிகவும் போக்யமாக ஸமீபத்திலிருக்கும்பொழுது என்றபிப்ராயம் 'அரவிந்த' என்னும் பதம் நல்ல வாஸனையை யுடையது, ஸுகமான ஸ்பர்சத்தை உடையது என்பவை முதலியவைகளைத் தெரிவிக்கிறது முதல் முதலில் மலர்ந்த தசையையுடையது என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு 'மகரந்த நிர்ப்பரே' சொல்லியிருக்கிறது 'மதுவ்ரத:' என்னும் பதத்தினால் அதை ஒன்றையே ஜீவனமாகயுடையது என்பதும், அதிலும் மிகவும் ஸாரமுள்ளதை க்ரஹிக்கக்கூடியதென்பதும் தெரிவிக்கப்படுகிறது தன்னுடைய இஷ்டத்திற்கு விரோதங்களாகிய பரியமான வார்த்தைகளினாலும் உபதேசம் செய்வதினாலும், மிரட்டுவது முதலியவைகளினாலும் தடுக்க முடியாதென்பதைத் தெரிவிப்பதற்காக த்ரயக்கு உதாஹரணமாகச் சொல்லப்பட்டது 'இக்ஷுரகம்' என்பதற்கு முள்ளுகளினால் சூழப்பட்டதும், அஸ்திரமாயும், அல்பமுமான ரஸத்தை உடையதும், வண்டு தொட்டபோதிலும் வாட்டத்தை அடையக்கூடியதும், பகவானுக்கு அர்ச்சனை முதலியவைகளைச் செய்யத்தகாததும், வாஸனை இல்லாததுமாகிய ஒரு அல்பமான முள்ளிப் புஷ்பத்தை என்றார்த்தம். அதை 'நவீக்ஷதே' என்பதற்கு மிகவும் ஸமீபத்திலிருந்தபோதிலும் தேனில் ஆசையினால் அதை ஆதரிக்கிறதில்லை. அதின் ஸமீபத்தில் போவது முதலியதோ மிகவும் தூரத்திலேயே தள்ளப்பட்டது என்று தாத்பர்யம் 27



தவாங்க்ரிமுத்திஶ்ய கதாபி கேநசித்
யதா ததா வாபி ஸக்ருத் க்ருதோஞ்ஜலி: |
ததைவ முஷ்ணாத்யஶுபாந்யஶேஷத:
ஶுபாநி புஷ்ணாதி ந ஜாது ஹீயதே || 28

தவதங்க்ரி முத்திஶ்ய கதாபி கேநசித்
யதா ததா வாபி ஸக்ருத் க்ருதோஞ்ஜலி |
ததைவ முஷ்ணாத்யஶுபாந்யஶேஷதஶ்
ஶுபாநி புஷ்ணாதி நஜாது ஹீயதே || 28

[ப - ரை] தவ அங்க்ரிம் உத்திஶ்ய - உம்முடைய திருவடியைக் குறித்து, கதாபி - எப்பொழுதாவது, கேநசித் - எவனாலாவது, யதா ததா வாபி - எப்படியாவது, ஸக்ருத் - ஒருதடவை, க்ருத: - செய்யப்பட்ட, அஞ்ஜலி: - கைகளைக்கூப்புதலானது, ததைவ - அப்பொழுதே, அஶுபாநி - பாபங்களை, அஶேஷத: - மிகுதியில்லாமல், முஷ்ணாதி - போக்கடிக்கிறது, ஶுபாநி - மங்களங்களை, புஷ்ணாதி - விருத்திசெய்கிறது, ஜாது - எப்பொழுதும், ந ஹீயதே - குறைகிறதில்லை 28

பா] பிறகு மிகவும் பெரிதாகிய உபாயத்தினால் அடைய வேண்டியதாகிய ப்ரயோஜனத்தை மிகவும் அல்பமாகிய உபாயத்தினால் எப்படி அடையப்போகிறீர்? என்று ஆக்ஷேபம் வரில் அதைவிட மிகவும் அல்பமாகிய நிவ்ருத்தி தாமங்களின் வரிசையில் சேர்ந்த அஞ்ஜலி முதலியதின் மஹிமையை 'தவாங்க்ரிம்' என்று ஆரம்பித்து இரண்டு ஶ்லோகங்களினால் நிரூபித்துக்கொண்டு ஆஶ்ரயிப்பதில் ஸுலபமாக இருப்பதினாலும் (அந்த திருவடி) விட முடியாதென்பதையே ஸ்தாபிக்கிறார். அதில் இந்த முதல் ஶ்லோகத்தினால் ஶரீரத்தினால் செய்யப்படுகிற மிகவும் அல்பமாகிய வ்யாபாரத்தின் மஹிமை சொல்லப்படுகிறது—'தவாங்க்ரிம்' என்று ஆரம்பித்து 'தவாங்க்ரி' என்பதற்கு எல்லா லோகங்களுக்கும் ஶரண்யமாகிய உம்முடைய திருவடித் தாமரையை என்றர்த்தம். நேரில் மோக்ஷத்தைக் கொடுக்க அதிகாரமில்லாத ப்ரும்மா முதலியவர்களினுடையதல்ல என்று தாத்பர்யம் இதுவும் மோக்ஷதர்மத்தில் 1 'ப்ரஹ்மாணம் ஶி

1 ப்ரும்மாணம் - ப்ரும்மாவையும், ஶிதிகண்டம் ச - ருத்திரனையும், யாஶ்ச - எவர்கள், அந்யா: - வேறு, தேவதா: - தேவதைகளாக, ஸம்ருதா: - சொல்லப்பட்டார்களோ (அவர்களையும்), ப்ரதிபுத்தா: - தெரிந்தவர்கள், ந ஸேவந்தே - ஸேவிக்கிற

திக்ஷணம் ச யாஸ்யாந்த்ய தைவதா: ஸம்ஸ்ருதா: । ப்ரதிபந்தா ந சைவ ஹி யஸ்யாஸ்ய விஹிதம் பலம்॥' என்று சொல்லப்பட்டது இவ்விடத்தில் பகவானுடைய ஸ்வரூபம் (பாபத்தைப் போக்கடிக்கக்கூடிய தாகையினால்) ஸுகமாக இருந்தபோதிலும் ஸமாதி முடிவுபெறாதவர்களுக்கு முதலில் த்யானம் செய்யமுடியாதாகையினால் அவனுடைய திவ்யமங்கள விக்ரஹமே ஶுபாஶ்ரயம் அதிலும் திருவடியைப் பிடித்தால் தாண்டமுடியாது என்கிற ந்யாயத்தினால் 1 'ஸ ப்ராது: சரணௌ காடம்' என்றிவை முதலிய வசனங்களிருப்பதினாலும் திருவடி உத்தேஶ்யமென்பது தெரிவிக்கப்படுகிறது 'உத்திஶ்ய' என்பதற்கு உபாயமாகவும் கைங்கர்யத்திற்கு உத்தேஶ்யமாகவும் நினைத்துக்கொண்டு என்றர்த்தம் இப்படி வேறொரு தேவதையையு முடைத்தானவரல்ல என்பதும் வேறொரு ப்ரயோஜனத்தை ஆசைப்பட்டவரல்ல என்பதும் சொல்லப்பட்டதாகிறது இப்படிப்பட்ட அதிகாரிக்கு கையைக்கூப்புவதாகிற ஸுலபமாய்ச் செய்யக்கூடிய பகவானுடைய அனுக்ரஹத்திற்குக் காரணமாகிய கார்யத்தில் தர்ஶபூர்ணமாஸம் முதலியவைகளைப்போல திதி, நக்ஷத்திரம், பக்ஷம், மாஸம், ருது, அயனம், வருஷம், முதலிய காலங்களின் நியமம் இல்லை என்று சொல்லுகிறார்— 'கதா வா' என்று தனக்கு ஸ்வாதீனமாகிய கைகளுக்கு ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படுகிற வேறொரு வ்யாபாரங்களுமில்லாத காலம் எல்லாவற்றிலும் என்றர்த்தம் இதனால் சில காலங்களை எதிர்பார்க்கவேண்டிய தாமதமில்லாமையினால் எப்பொழுது நினைக்கிறானோ அப்பொழுதே சீக்கிரமாகச் செய்யக்கூடியதாக இருக்கையினால் ஸுலபமாய்ச் செய்ய முடியும் என்பதும் தெரிவிக்கப்பட்டது காலநியமமில்லை என்று சொல்லியிருக்கிறது, 'பிள்ளைப் பெற்றவனாய் கறுத்த மயிர்களையுடையவன் அக்னிகளை ஆதானம் செய்யவேண்டும்' என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யங்களில் சொல்லப்பட்ட கறுத்த மயிரையுடையவனாயிருக்கை முதலிய தஶைகளின் நியமம் இல்லை என்பதையும் இடங்களின் நியமம் இல்லை என்பதையும் குறிக்கிறது இப்படியே வர்ணம் ஆஶ்ரமம், வேதம், வேதங்களினங்கங்கள் இவைகளை உடையவனாயிருக்கவேண்டும் என்பவை முதலிய நியமங்களில்லாமையினாலே பொதுவான தர்மமாகையினால் உண்மை சொல்லுவது முதலியவைகளைப்போல எல்லோ

---

திலலை, யஸ்மாத - எந்தக் காரணத்தினால், பலம் - (அவர்களினாலுண்டாகிற) ப்ரயோஜனம், பரிமிதம் - அல்பமோ.

1 ஸ - அந்த லக்ஷ்மணன், ப்ராது: - தமையனாகிய ஸ்ரீராமனுடைய, சரணௌ - திருவடிகளை, காடம் - கெட்டியாக (பிடித்துக்கொண்டு ப்rார்த்தித்தார்)

ராலும் செய்யக் கூடியது என்பதைச் சொல்லுகிறார்—'ஸக்ருதபி' என்று ஸ்திரீகள், பாலர்கள், பண்டிதர்கள் வரையிலும், பருமமா முதல் சண்டாளன் வரையிலும் ஸுலபமாய்ச் செய்யக்கூடிய தென்பதும் அப்படிச் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டதென்பதும் இவ்விடத்தில் சொல்லப்படுகிறது மற்றக் காமங்களைப்போல ஸுலபமாய்ச் செய்யமுடியாத அங்கங்களின் ஏற்பாடும் இதில் இல்லை என்று சொல்லுகிறார்—'யதா ததா வாபி' என்று இவ்விடத்தில் விகல்பத்தையும் சேர்த்துக்கொள்ளுவதையும் சொல்லுகிற இரண்டு அவயவங்களுக்கு அபிப்ராயம் இது—உயர்ந்த தத்துவம், தாழ்ந்த தத்துவம், ஹிதம், ப்ரயோஜனம், இவைகளைப்பற்றி விஶதமான ஜ்ஞானம் இருந்தாலு இருக்கட்டும் இல்லாமற்போனாலும் போகட்டும், மஸ்திஷ்கம் ஸம்புடம் முதலியவைகளுக்குள் தனக்கிஷ்டமான ப்ரகாரம் செய்யட்டும். தனக்கு ஸ்வாதீனமான கைகளில்லாதவனுக்கு வாயினாலும் மனதினாலு மிருக்கட்டும் கையைக்கூப்புவதில் சில குறைகள் இருந்தாலு மிருக்கட்டும் எவ்விதத்திலும் இது ப்ரயோஜனத்தோடுகூடியதே—என்பது 1 'ஸகேந பாணிநா யஸ்து க்ருணோதி ப்ரணாமம் புருஷோத்தமம். ந்யாயஸ்து கரச்சேத இதி வேதவிதோ விது: ॥ ஏகஹஸ்த ப்ரணாமஶ்ச ஏகம் வாபி ப்ரதக்ஷிணம்।' என்று ஶக்தியை யுடையவனைக் குறித்துச் சொல்லப்படுகிற ஒருகையினால் செய்யப்படுகிற நமஸ்காரத்தை மறுப்பது இவ்விடத்தில் தடுக்கப்படுகிறதில்லை 2 'யுதௌ தாவஞ்ஜலி: பும்ஸி' என்று நிகண்டுவில் சொல்லுகிறார்கள் வேறுகதியில்லாமல் போனாலோவெனில் எல்லாத தர்மங்களிலும் ஶக்திக்குத் தகுந்தபடி அனுஷ்டிப்பது அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது 3 'ஸக்ருத் க்ருதஶாஸ்த்ரார்த்த:' என்று பொதுவாக ஏற்பட்டதற்கு இவ்விடத்தில்

---

1 ய:-எவன், ஏகேன - ஒரு, பாணிநா-கையினால், புருஷோத்தமம்-பகவானை, ப்ரணமேத - நமஸ்காரம் செய்கிறானோ, தஸ்ய - அவனுடைய, கரச்சேத:-கையை வெட்டுவது, ந்யாய்ய:-நியாயமானது, இதி - என்று, வேதவித: - வேதத்தை அறிந்தவர்கள், விது:-தெரிந்துகொண்டார்கள், ஏகஹஸ்த ப்ரணாமஶ்ச - ஒருகையினால் ஸேவிப்பதும் ஏகம் - ஒரு, ப்ரதக்ஷிணமச - ப்ரதக்ஷிணமும் (செய்யக்கூடாது)

2 யுதௌ - ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற, தௌ - அந்தக் கைகள், அஞ்ஜலி:-அஞ்ஜலி என்னப்படுகிறது, இந்தப்பதம் பும்ஸி - புல்லிங்கம் (ஆண்பால்).

3 ஸக்ருத் - ஒருதரம், க்ருத:-செய்யப்பட்டது, ஶாஸ்த்ரார்த்த: -ஶாஸ்த்ரத்தின் அர்த்தம்.

ஒருவித விரோதமுமில்லாமையினால் 'ஒவ்வொரு வஸந்த ருதுவிலும் ஜ்யோதிஷ்டோமயாகம் செய்யவேண்டும்' என்றாற்போலுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கிற காம்யங்களிலே போல இவ்விடத்தில் ஆவ்ருத்தி செய்யவேண்டுமென்கிற அபேக்ஷையுமில்லை என்று சொல்லுகிறார்—'ஸக்ருத் க்ருதஃ' என்று. ஆனாலும் ப்ரீதி முதலியவைகள் அதிகமாக இருப்பதினால் இதற்கு ஆவ்ருத்தி உண்டாகிறது. அப்படி இருந்தபோதிலும் இந்த த்ரமத்தில் ஒருதரம் செய்ததற்கே பலம் இல்லாமல் போகாது என்பதினால் அதிக மஹிமையைச் சொல்லுவதில் தாத்பர்யம். 1 'ஸக்ருத் ஸ்ம்ருதோபி கோவிந்தோ ந்ருணாம் ஜந்ம ஶதைஶ் சிதம் | பாபராஶிம் தஹத்யாஶு தூலராஶிமிவாநலஃ||' என்றும், 2 'ஸக்ருதுச்சரிதம் யேந ஹரிரித்யக்ஷரத்வயம் | பத்தஃ பரிகரஸ்தேந மோக்ஷாய கமநம் ப்ரதி ||' என்றும், 3 'ருசோ யஜூம்ஷி ஸாமாநி யோऽதீதே ஸக்ருதஞ்ஜஸா | ஸக்ரு

---

1 கோவிந்த:-பகவான், ஸக்ருத் - ஒருதடவை, ஸ்ம்ருதோபி - நினைக்கப்பட்டிருந்தபோதிலும், ந்ருணாம் - மனிதர்களுடைய, ஜந்மஶதை: -அநேக ஜன்மங்களினால், சிதம் - சேர்க்கப்பட்டிருக்கிற, பாபராஶிம் - பாபங்களின் கும்பலை, அநல:-நெருப்பு, தூலராஶிமிவ - பஞ்சுகளின் கூட்டத்தைப்போல, ஆஶு - சீக்கிரமாக, தஹதி - கொளுத்துகிறது.

2 யேந - எவனால், ஹரி:இதி - ஹரி என்கிற, அக்ஷரத்வயம் - இரண்டக்ஷரங்கள், ஸக்ருத்-ஒருதடவை, உச்சரிதம் - சொல்லப்பட்டதோ, தேந — அவனால், மோக்ஷாய - மோக்ஷத்தின் பொருட்டு, கமநம் ப்ரதி - போவதற்கு, பரிகர:-துணி முதலிய வஸ்துக்கள், பத்த:-கட்டப்பட்டது.

3 ய: - எவன், ருச:-ருக்வேதங்களையும், யஜூம்ஷி - யஜுர்வேதங்களையும், ஸாமாநி - ஸாமவேதங்களையும், ஸக்ருத் - ஒரே தடவையில், அஞ்ஜஸா - பூர்த்தியாக, அதீதே - ஓதுகிறானோ, ஸக்ருத் - ஒருதடவை, அஷ்டாக்ஷரம் - திருவஷ்டாக்ஷர மந்த்ரத்தை, ஜப்த்வா - ஜபஞ்செய்து, தஸ்ய - அதின், பலம் - ப்ரயோஜனத்தை, ஸமஶ்நுதே - அடைகிறான், நித்யம் — நித்யமாக, திநே திநே — தினந்தோறும், ஸாயம்ப்ராத:-ஸாயங்காலத்திலும் காலையிலும், விஷ்ணோ:- பகவானுடைய, ஆயதனம் - கோவிலை, ப்ரதக்ஷிணத்வயம் - இரண்டு ப்ரதக்ஷிணங்களை, குர்யாத் - செய்வானேயானால், அஶ்வமேத பலம் - அஶ்வமேதயாக பலத்தை, லபேத - அடைவான், உத்ஸவே - உத்ஸவகாலத்திலும், பலிதானே ச - பலி ஸாதிக்கும் பொழுதும், ததா - அப்படியே, ப்ரதக்ஷிணம் - ப்ரதக்ஷிணத்தை, குர்வந் - செய்துகொண்டு (இருந்தால்), பதே பதே — ஒவ்வொரு அடிகள்தோறும், அஶ்வமேதஸ்ய - அஶ்வமேத யாகத்தினுடைய, பலம் — ப்ரயோஜனம், தஶ குணம் - பத்துமடங்கதிகமாக, பவேத் - ஆகும், யாநிகாநி ச - எந்த, பாபாநி - பாபங்கள், ஜந்மாந்தர க்ருதாநி - முன் ஜன்மங்களில் செய்யப்பட்டவைகளோ, தாநிதாநி - அவைகளெல்லாம், ப்ரதக்ஷிண பதே பதே - ப்ரதக்ஷிணத்தின் ஒவ்வொரு அடிகள்தோறும், ப்ரணஶ்யந்தி - நாசமடைகின்றன.

உத்தாரகம் ஜன்ம ஸஹஸ்ரம் தஸ்ய ஸம்ஶயோ ந ஹி ॥ விஷ்ணோராராதனம் நித்யம் பாபம் ஸமஸ்த விநஶ்யதி ॥ ப்ரதக்ஷிணம் ப்ரதக்ஷிணம் ப்ரகாரா ஜயே ஸஹஸ்ரம் வஸேத்॥ உத்க்ருஷ்ட ஜனானாம் கரோதி ப்ரதக்ஷிணம் ; பதே பதே ஶ்வமேதஸ்ய ஸஹஸ்ரம் ஸமவாப்னுயாத் । யானி யானிச பாபானி ஜன்மாந்தர க்ருதானி ச । தானி தானி ப்ரணஶ்யந்தி ப்ரதக்ஷிண பதே பதே॥ ' என்றிவை முதலிய வசனங்களில் சொல்லப்பட்ட ஒருதடவை ஸமர்ப்பது, திருநாமங்களைச்சொல்லு வது முதலியவைகளின் ப்ரபாவத்தையும் குறிக்கிறது இது 1 'ஸர்வேஷாமேவ யஜ்ஞானாம் உத்தமோ வைஷ்ணவோ விதி: । ரக்ஷதே பகவான் விஷ்ணு: பக்தானாத்ம ஶரீரவத்॥' என்று எல்லாத் தாமங்களையும் விட மேற்பட்டவைகளாகச் சொல்லப்படுகிற திருவலகு சேய்ப்பது, மெழுகுவது, துடைப்பது, மாலைகள் தொடுப்பது, தீபங்களேற்றுவது முதலிய பகவானுடைய அனுக்ரஹத்திற்குக் காரணங்களாகிய தாமங்களை விட மேற்பட்டதும் அதிகப் பணச்செலவு, ப்ரயாஸம், முதலியவைக ளில்லாததுமாகிய இப்பொழுது சொல்லப்படுகிற தாமத்தினுடைய ஸௌலப்யமாயச் செய்யக்கூடிய ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார்—'அஞ்ஜலி:' என்று 2 'அஞ்ஜலி: பரமா முத்ரா' என்றல்லவோ சொல்லப்படுகிறது ஸ்ரீமத் ராமாயணத்திலும் 3 'க்ருதாபராதஸ்ய ஹி தே நான்யத் பஶ்யாம்யஹம் க்ஷமம் । அந்தரேணாஞ்ஜலிம் பத்வா லக்ஷ்மணஸ்ய ப்ரஸாதனாத்॥' என்று சொல்லப்பட்டது. நாராயணாஸ்த்ரத்தின் கதையும் இவ்விடத்தில் நினைக்கத்தக்கது 4 'க்ஷிப்ரம் தேவ ப்ரஸாதினீ' என்று சொல்லப்பட்டதைச் சொல்லுகிறார்—'தேவ' என்று 'ஸக்ருத்' என்பதினால் வேறு ப்ரமம், மற்றொரு ஸமயம், இவைகளிலுண்டாகப் போகிற ப்ரயோஜனங்களுக்கு ஸாதகங்களாகிய தாமங்களைவிட வ்யத

1 ஸர்வேஷாம் - எல்லா, தாமானும் - தாமங்களுக்குள், வைஷ்ணவ:-பக வானைச் சேர்ந்ததாகிய, விதி:-தாமானுஷ்டானம், உத்தம:-உயர்ந்தது, பகவான் - பகவானாகிய, விஷ்ணு -விஷ்ணு, பக்தாந் - தன்னுடைய பக்தர்களை, ஆத்மஶரீர வத்-தன்னுடைய தேஹத்தைப்போல, ரக்ஷதே - காப்பாற்றுகிறான்.

2 கையைக் கூப்புவதானது உயர்ந்த சின்னம்

3 க்ருதாபராதஸ்ய - செய்யப்பட்ட அபராதத்தை உடைய, தே - உனக்கு, அஞ்ஜலிம் - கையைக்கூப்புவதை, பத்வா-செய்துகொண்டு, லக்ஷ்மணஸ்ய - லக்ஷ் மணனை, ப்ரஸாதனாத் அந்தரேண - அனுக்ரஹம் செய்யும்படி செய்வதைத் தவிர, அந்யத் - வேறொன்றையும், அஹம் - நான், க்ஷமம் - தகுந்ததாக, நபஶ்யாமி-பார்க்கவில்லை.

4 சீக்கிரத்தில் பகவானுக்கு அனுக்ரஹத்தை உண்டாக்கக் கூடியது

யாஸம் சொல்லப்பட்டது அநாதியாகிய வாஸனையின் வசத்தினால் ஸம்ஸாரத்திலுண்டாகிய புண்யங்களாகிய விலங்கை வெட்டிவிடுவது ஜீவாத்மாவிற்கு கஷ்டமாக இருக்கும் அப்படி இருந்தபோதிலும் குழந்தைக்கு அபத்யத்தைப் பரிஹரிக்கிற நியாயத்தினால் அவைகளையு மபஹரித்துவிடுகிறது என்கிற அபிப்ராயத்தினால் 'சேஷாகி' என்று சொல்லப்பட்டது 'ஶ்ரேயஸாம்' என்பதற்கு ஶ்ரேயஸத்திற்கு விரோதமான காமங்களை என்றர்த்தம் அதாவது மோக்ஷத்திற்காவது அதின் உபாயத்திற்காவது விரோதங்களான காமங்களை என்று தாத்பர்யம் 'அஶேஷதஃ' என்பதற்கு முழுமையும் என்றர்த்தம் இத்தால் கருசாம், சாந்த்ராயணம், முதலியவைகளைப்போல பாபங்களை மாத்திரம் நிவர்த்தி செய்கிறதென்பது நிராகரிக்கப்படுகிறது அநிஷ்டத்தைப் போக்கடிக்கிறது என்பது மாத்திரமில்லை 1 'தஸ்மிந் த்ருஷ்டே கிமிஹாஸ்த்யஸ்யம்' என்று சொல்லி இருக்கிற நியாயத்தினால் இந்த லோகத்திலுண்டாகிற பகவானுடைய அனுபவம் முதலாக பரிபூர்ணமான கைங்கர்யம் வரையிலுள்ள எல்லா இஷ்டபலங்களையும் உண்டாக்கும் தன்மையும் இருக்கிறது என்று சொல்லுகிறார் — 'ஶ்ரேயஸாம் வர்ஷாகி' என்று இந்தத் தர்மத்தைச் செய்தவன் ஒருவனிடத்தில் தன்னால் செய்யப்பட்ட உபகாரத்தைப் போராததாக எண்ணிக்கொண்டிருக்கிற பகவானுடைய அனுக்ரஹத்தினால் அவனைச் சேர்ந்தவர்களுக்கும் அப்படியே உபகாரம் செய்வதற்குக் காரணமாகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—' ந ஜாது ஹீயதே' என்று 2 'யஜ்ஞோऽந்ருதேந க்ஷரதி' என்றிவை முதலியவைகளைப்போல வேறொன்றினாலும் இதற்குக் குறைவு நேரிடாது என்று தாத்பர்யம் அன்றிக்கே ஸ்வர்க்கம் முதலிய பதங்களைப்போல இதினாலுண்டாக்கப்படுகிற உத்தமமான பலத்திற்கு ஒரு பொழுதும் நாசமில்லை என்றபிப்ராயமாகவுமாம் அதுவுமன்றிக்கே பலத்தை யனுபவிக்கும் தசையிலும் ஸ்வயம் ப்ரயோஜனமாகிய அஞ்ஜலியாக இதுவே தொடர்ச்சியாகச் செய்யப்படுகிறது என்று தாத்பர்யமாகவுமாம் அப்படியே 3 'நித்யாஞ்ஜலி புடா ஹ்ருஷ்டாஃ' என்று கீழே சொல்லி

---

1 அவன் அனுக்ரஹம் செய்துகொண்டிருக்கும்பொழுது இந்த லோகத்தில் நமக்குக் கிடைக்கக்கூடாததென்ன இருக்கிறது

2 யாகம் பொய்யினால் நாசமடைகிறது

3 எப்பொழுதும் கையைக் கூப்பிக்கொண்டவர்களாயும் ஸந்தோஷத்தையுடையவர்களாயும் (இருக்கிறார்கள்)

